# மஞ்சி விரட்டு

கொத்தமங்கலம் சுப்பு



பவானி பிரசுரம்

ராயவரம்

புதுக்கோட்டை சமஸ்தானம்

# நமஸ்காரம்

இந்தப் புத்தகத்தில் வந்திருக்கும் கதைகள் என்ஞல் அனுமான், இந்துஸ்தான், பாரதமணி, தினமணி முதலிய தமிழிலக்கியக் கோவில்களில் எழுதி வைத்த சித்திரங்கள். இதற்கு இடங்கொடுத்து உதவிய தர்மகர்த்தாக்களுக்கு என் நமஸ்காரம். என் உள்ளத்திலே இலக்கிய விதையை விதைத்தவர் பாரதியார். அதை கிளறிவிட்டு முளேவிடச் செய்து செடியாக்கி பழம் வி‌ளைவித்து விநியோகம் செய்பவர்கள் அந்தப் பரம்பரையில் வந்த எழுத்தாளர்கள். அதை வாடாமல் காப்பாற்றி வருபவர்களும் அவர்களே. அவர்களுக்கும் எனது நமஸ்காரம். தமிழ் மண்ணிலே பிறந்தேன். தமிழ் மக்களிடையே தான் வளர்ந்தேன். தமிழை மட்டுமே தான் பயின்றேன். படிப்பின் பலத்தைக்கொண்டு எழுதவில்லே. பார்த்ததை மனதில் கொண்டு எழுதினேன். அவை பத்து வருஷங்களுக்குப் பிறகு புத்தகமாக வெளிவருகின்றன. இந்தப் பெருமை எனக்குக் கிடைப்பதற்குக் காரணமாகிய தமிழ் நாட்டுக்கும் தமிழகத்தின் உயரிய மக்களாகிய விவசாயிகளுக்கும் எல்லோருக்கும் எனது நமஸ்காரம்.

மயிலாப்பூர்
14—3—46

கொத்தமங்கலம் சுப்பு

# சபாஷ்! சுப்பு!

கொத்தமங்கலம் சுப்பு சினிமா உலகத்தில் மிகவும் பிரசித்தி பெற்றவர். சினிமாவில் நடிப்பதிலும் அதற்கு கதை, வசனம், சம்பாஷணை முதலியவைகளை எழுதிக் கொடுப்பதிலும் தான், சகோதரர் சுப்பு பெயர் பெற்றவர் என்று தமிழர்கள் எண்ணிக் கொண்டிருக்கலாம். சுப்பு மிகச் சிறந்த கவிஞன் என்பதும் தெரிந்திருக்கலாம்; ஆனால் சிறு கதை எழுது வதில் அவருக்கு நிகர் அவர்தான் என்பது தமிழர்களுக்குத் தெரிந்திருக் காது. சுப்புவினால் சினிமா உலகத்துக்கு உண்டான லாபம், தமிழ் இலக் கிய உலகத்துக்கு, (எது செய்தாலும் சரிப்படுத்த முடியாத) நஷ்டமாக முடிந்து விட்டது என்பது என் தீர்மானமான அபிப்பிராயம்.

சுப்புவின் இச்சிறு கதைகளை பிரசுரிக்கும் நண்பர், இந்நூலுக்கு முகவுரை ஒன்று கொடுக்கும்படி என்னைக் கேட்டார். கரும்பு தின்னக் கூலியும் வேண்டுமா என்று சொல்லி, இமைப்பொழுதுகூடத் தயங்காமல், ஒப்புக் கொண்டேன். இதை, அந்த நண்பர் சுப்புவிடம் சொன்னார் போலிருக்கிறது. உடனே சுப்பு நண்பரிடம் சொன்னாராம், "அடாடா! வ. ரா வையா கேட்டுக் கொண்டீர்கள்? சுப்பு, இந்திரன் சந்திரன் என்று புகழ்ந்து தள்ளிவிடுவாரே!" என்று, இவ்வாறு சுப்பு சொன்னது, பேர் பாதிக்குமேல், ஹாஸ்யம் என்பது எனக்குத் தெரியும். இருந்தாலும், தமிழ் மறுமலர்ச்சி எழுத்தாளர்களை உண்மைக்கு மீறிய அளவில் நான் புகழ்ந்து விடுவேன் என்ற கருத்து, தமிழ் நாட்டில் சில கூட்டங்களுக்கு இடையே உலவி வருகின்றது என்பதும் எனக்குத் தெரியும்.

விளையாட்டாக சுப்பு சொன்னதிலிருந்து, எனக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. எதற்கு? உண்மைக்கு மீறி, என் உணர்ச்சியில் தைக்காத எதையும் நான் சொல்லுவதில்லை என்பதை விளக்கிக் காண் பிப்பதற்கு, ஒரு சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது. முதலில், அதற்காகச் சுப்புவுக்கு எனது வந்தனம்.

அறுசுவையுடன், ஒருவன் பக்குவமாக சமைத்திருக்கிறான். அதை அனுபவிக்க முடியாத வயிற்றுவலிக்காரனையும் புளிச்சேப்பக்காரனையும், சமையலைப் பற்றிக் கேட்டால், என்ன சொல்லுவார்கள்? "இருந்தது; பரவாயில்லை" என்று பிரபு, தனது கண்ணியமுள்ள வேலைக்காரனைப் பாராட்டுவதைப் போல பேசுவார்கள். பசியோடும் ருசியோடும் சாப்பிடக் கூடிய ஒருவனைக் கேட்டால், "சமையலா? அதை ஏன் கேட்கிறீர்கள்? நளன் கூட இவனிடம் பிச்சை வாங்க வேண்டும். என்ன பிரம்மானந்த மான சமையல்! தேவர்கள் உண்டு களிக்கக் கூடிய பக்குவ மல்லவா" என்று சொல்லுவான்.

இந்த இரண்டையும் கவனித்துப் பாருங்கள். ஒன்றை ரசித்து அனுப விக்கக் கூடியவன் சொல்லுவது தான் உண்மையான பேச்சு. மற்ற தெல்லாம் லோபித்தனம்; அதிலே, சிறிதளவு பொறாமையும் கலந்திருக் குமோ என்று கூட, நான் சந்தேகப் படுகிறேன்.

என் இலக்கியப் பசி எனக்குத் தெரியும். மற்றவர்களுக்கு அது எப்படித் தெரியமுடியும்? இங்கிலீஷ் பாஷையில் இருப்பதைக் காட்டிலும் அதி உன்னதமான இலக்கிய பொக்கிஷம் தமிழில் இருக்க வேண்டும் என்று என் மனம் துடித்துக் கொண்டே இருக்கிறது. அந்தத் துடிப்பு, காயசண்டிகையின் பசியைப் போல ஆகிவிட்டது. அந்தப் பசியினால், கண்டதெல்லாம் ருசியாகிவிட முடியாது. ஏன்? புலி பசித்தால் புல்லைத் தின்னாது, தின்னவும் முடியாது. வண்டு, நாள் மலரிலிருந்து தோன்றும் தேனைத்தான் பருகும்.

மேலும் காக்ஷி, பார்ப்பவனுடைய பார்வையைப் பொருத்தது. காமாலைக் கண்ணனுக்கு, உலகம் மஞ்சள் நிறமாகத் தான் தோன்றும். மீன் கொத்திக் குருவிக்கு, நீருக்குள் இருக்கும் மீன் எப்படியோ தெரிந்துவிடுகிறது. நமக்குத் தெரிய வில்லையே என்று துக்கப்படலாமா? இளவயதிலேயே, சிவாஜி, ராம்தாஸ் சுவாமிகளின் கண்ணில், சத்திரபதி சிவாஜியாகப்பட்டு விட்டார். அதற்காக, மற்றவர்கள் ராம்தாஸ் சுவாமிகளின் பேரில் ஆத்திரப்படக் கூடுமா?

முதல் தரமான தமிழ் எழுத்தாளர் என்று துவக்கத்திலேயே நான் மோப்பம் பிடித்தவர்கள் எல்லாரும் சோடையே போகவில்லை. தமிழர்களின் முன்னேற்றத்தில் எனக்கு இருக்கும் ஆர்வம், அந்த மோப்ப சக்தியை என்னிடம் தூண்டிவிட்டது. அதற்கு நான் என்ன செய்வேன்?

இன்னொன்று சொல்லுகிறேன், கேளுங்கள். ஒரு சமயம் மகாத்மா காந்தி நாகபட்டணத்துக்குப் போனார். அங்கே ரயில்வே தொழிலாளர்களை சந்தித்தார்; பிரசங்கம் செய்தார். தொழிலாளர்களைப் பார்த்து "நீங்கள் தான் தற்காலத்து ரிஷிகள்" என்று சொன்னார். இவ்வாறு மகாத்மாகாந்தி சொன்னது உண்மையா, பொய்யா, அல்லது மிகபடக் கூறுதலா, எது என்று யோசித்துப் பாருங்கள். காந்தி சொன்னதைக் காட்டிலும், நான் மறு மலர்ச்சி எழுத்தாளர்களைப் பற்றி சொல்லுவது எத்தனையோ மடங்கு அதிகமான உண்மை கொண்டது என்ற முடிவுக்குத் தான் நீங்கள் வரமுடியும். காந்தி சொன்னது பொய்யல்ல; நான் சொல்லுவதும் உண்மைக்கு விரோதமல்ல. பார்க்கும் நோக்கத்தையும் பார்வை சக்தியையும் பொறுத்தது காக்ஷியும் உண்மையும்.

இன்னொன்று சொல்லுகிறேன்; அதையும் கேளுங்கள்; வீதியில் ஒருவன் தயிர் விற்றுக்கொண்டு போகிறான், 'தயிரோ...ஓ...' என்று உரக்கக் கூவுகிறான். அவன் பக்கத்தில் போய்க்கொண்டிருக்கிற இலக்கண வித்வான், 'என்னப்பா! உயிர் அளபெடைக்கு மீறி, நீ ஒலியை நீட்டுகிறாயே! நீ செய்வது தவறு; அதற்கு இலக்கணம் சரி சொல்லாது' என்று உபதேசம் செய்தால், தயிர் விற்கிறவன் என்ன சொல்லுவான்?

அவன் சொல்லுவான்:—"நான் கூவுவது இலக்கணத்துக்கு மீறியதாக இருக்கலாமுங்க! அதுக்கு நான் என்ன செய்கிறது? என் தயிர் விற்பனையாக வேண்டாமா? தயிர் வாங்குகிற அம்மாமார்கள் ஈர விறகுப் புகையை வாயால் ஊதிக்கொண்டு, அடுப்பு பற்ற வைத்துக் கொண்டிருப்பாங்க. பக்கத்திலே, குழந்தை வீரீச்சுன்னு அழுதுகொண்டே யிருக்கும். அப்போ, அம்மா மார்களின் காதிலே விழுகிறப் போல நான் கூவினால்

தானே, என் தயிர் விற்கும்? நாசூக்கா, ஒங்க காதிலே ரகசியம் ஓதுகிற மாதிரி, அளபெடைக்கு பயந்து நான் கூவினால், என் வேலே சாயுங்களா?"

தயிர்க்கார னுடைய சமாதானம் தான் என்னுடையதும். தமிழ் நாட்டிலுள்ள, ரசமான இலக்கியச் சரக்குகளையும் கலைச் சரக்குகளையும் விளம்பரப் படுத்துவது என் கடமை என்றும் நான் தமிழ் நாட்டின் சம்பளமில்லாத விளம்பர ஏஜண்டு என்றும் என்னைப் பற்றி பிடிவாதமாக எண்ணிக் கொண்டிருக்கிறேன். ஆகவே, 'இந்திரன், சந்திரன்' என்று உரக்க நான் கூவினலொழிய, வாழ்க்கையிலே ருசியில்லாமல் வீட்டிலே அடைந்து கிடக்கும் தமிழ் அய்யாமார்களின் காதிலே ஏறவே ஏருது. என் அருமை சகோதரர் சுப்பு உள்பட, தமிழ் நாட்டிலுள்ள வாசக, விமர்சன நண்பர்கள் எல்லாரும் நான் சொன்னதை ஏற்றுக் கொள்ளுவார்கள் என்று எதிர் பார்க்கிறேன். எனது தற்சரித சமாதானம் அனுமார் வால் நீண்டதைப் போல நீண்டதற்காக, அவர்கள் என்னை மன்னிப்பார்களாக!

சுப்பு எழுதின முதல் சிறுகதை 'மஞ்சி விரட்டு' அது வெளி வந்ததும், சென்னை தமிழ்ப் பத்திரிகாசிரியர்களிடம் நான் சென்று, 'சுப்பு எழுதியி'ருக்கும் சுத்த சுதேசி ஹாஸ்யச் சிறு கதையை, நீங்கள் பார்த்தீர்களா, படித்தீர்களா' என்று கேட்டேன். அவர்கள் எல்லாரும் என் சொல்லை ஏற்று, அதைப் படித்துவிட்டு, 'ஒண்ணாந்தரமான, சுத்த சுதேசி ஹாஸ்யக் கதைதான்' என்று ஒப்புக் கொண்டார்கள். சுப்புவைக் கண்டு, நேரில் அவரைப் பாராட்டினேன். தமிழ் இலக்கிய வானில், புதியதொரு ஒளி வீசும் நக்ஷத்திரம் தோன்றிற்று என்று நான் மனக் கோட்டை கட்டிக் கொண்டேன்.

கோட்டை அவ்வளவு எளிதாக முடிகிற சங்கதியா? சிறுகதை எழுதி, பாட்டு எழுதி, ஊதியம் பெற்று, சுப்பு தனது வறுமையைப் போக்கிக் கொள்ள முடியுமா? சந்தையில், புதிய தமிழ் இலக்கியம் எடுபட்டால் தானே? பத்து வருஷத்துக்கு முந்தி; இப்பொழுதல்ல.

காரைக்குடியில், மரக்கடையில் குமாஸ்தா வேலை பார்த்த சுப்பு தனது மேதையின் அதிர்ச்சியினால், தமிழ் இலக்கிய உலகத்தில் தாவிக் குதித்தார். ஆனால், வருவாய் கம்மி என்ற காரணத்தினால், இலக்கிய உலகில், அவர் அதிக காலம் தங்கியிருக்க முடியவில்லை.

உடனே சினிமாவில் பாய்ந்தார். ஏழ்மை படுத்தும் பாட்டைப் பாருங்கள். சினிமா உலகத்தில் இப்பொழுது அதிகமான வருவாய் கிடைக்கிறது. ஆகையினால், சுப்பு, இலக்கிய உலகத்திலிருந்து சினிமா உலகத்துக்குப் பாய நேர்ந்தது. என்றாலும் சுப்பு, பிறவிக் கவிஞன்; ரச பேதமும் ரசக் குறைவும் இல்லாத ஹாஸ்ய புருஷன். வாழ்க்கை இன்பத்தில், அபரிமிதமான பற்றுக் கொண்டவர். வாழ்க்கையை இன்பமும் ரசமும் ததும்ப சித்தரித்துக் காண்பிக்க வேண்டும் என்ற, அவரோடு கூடப் பிறந்த ஆவல், அவரை இலக்கிய உலகத்திலிருந்து அறவே விலக்கிவிட முடியவில்லை.

தான் வாழ்க்கையில் கண்ட காக்ஷிகளை அவ்வப்போது சிறு கதைச் சித்திரங்களாக வரைந்து வந்தார். அந்தச் சித்திரங்கள்தான், இந்தச் சிறு கதைத் தொகுதி. இவைகள், நிகரில்லாத நவரத்தினங்கள் என்று நான்

உறுதியாகச் சொல்லுவேன். விலை மதிக்க முடியாத மாணிக்கங்கள் என்று சொன்னாலும் என் ஆவல் தணியாது.

நோபல் பரிசைப்போல, தமிழ் நாட்டில் பாரதியாரின் பெயரால் ஒரு பரிசு இருக்குமாயின், அதைத் தயங்காமல் நான் சுப்புவுக்கு கொடுப்பேன். கருப்பண்ணத் தேவனையும் ராக்கனையும் அழகு சொட்ட வரைந்த சுப்புவின் கை விரல்களுக்கு, விரலுக்கு இரண்டு வைர மோதிரங்களாகப் போட்டு, நான் அழகு பார்ப்பேன்.

மஞ்சி விரட்டு என்பதை கற்பனை செய்த மூளையை, 'சபாஷ்' என்று பாராட்டுவேன். கந்து வட்டிக்கார ராஜமாணிக்கம் செட்டியார் 'அம்மன் கோவில் அபிஷேக மாடு' வாங்கி, கடவுளையே ஏய்க்கப் பார்க்கும் வித்தையை, சுப்பு எவ்வளவு அழகாக குறிப்பிட்டிருக்கிறார்! இந்த கதைத் தொகுதியில், 'கடன்காரன்' என்ற கதைதான் முதன்மை ஸ்தானம் பெறுமோ என்று நான் சந்தேகப்படுகிறேன். 'சக்கரையின்' சுயமரியாதையையும் மானத்தையும் என்னால் வர்ணிக்கவே முடியாது. இதில் சுப்புவின் சாமர்த்தியமே அலாதி! 'கருப்புக் குல்லா'வைப் படித்துக் கொண்டே, நான் கண்ணீர் விட்டேன் என்றால் அதை நம்புங்கள். 'கமல மங்கல்யம்' எழுதியிருக்கும் சுப்புவைப்பற்றி, நான் என்ன சொல்லுவது என்றே எனக்குத் தெரியவில்லை. சோகரசத்தில் ஊறிக் கிடக்கும் ஹாஸ்யத்தைக் கண்டு, என் உள்ளம் பூரிப்படைந்தது. இந்தக் கதையைப் படிக்கும்பொழுது, சிறிது நேரம் சிரித்தேன்; சிறிது நேரம் பெரு மூச்சு விட்டேன்; சிறிது நேரம் கண் கலங்கினேன். கடைசியாக, கடல் மடை திறந்து விட்டது போல, கண்ணீர் வடித்தேன்.

"பதினெட்டாம் பெருக்கு" என்ற கதையில், உருக்கத்தை உருவமாகப் பார்க்கும் பாக்கியம் எனக்கு கிடைத்தது. "கலங்காப் புலி" என்னை ஆனந்தத்தில் ஆழ்த்தி திகைப்பு உண்டாக்கி விட்டு, திடீரென்று மறைந்து போனான். கலங்காப் புலியே! உன்னை நான் பாராட்டுகிறேன். "பெரிய கருப்பன் கடிதம்" என் உள்ளத்தில் வேரூன்றி விட்டது.

இப்பேர்ப்பட்ட கதைகளை, தமிழ் நாட்டுக்குப் பொக்கிஷங்களாக அள்ளிக் கொடுத்திருக்கும் சுப்புவை, நான் "இந்திரன், சந்திரன்" என்று சொல்லாமலிருக்க முடியுமா? நீங்களே, இவைகளைப் படித்துவிட்டு தீர்ப்புச் சொல்லுங்கள். உங்கள் தீர்ப்பு எனக்கு சாதகமாயிருக்குமேயல்லாமல், சுப்பு வேடிக்கையாக சொன்னதற்கும் மற்றவர்கள் விஷயம் தெரியாமல் வாய் குளறுவதற்கும் சாதகமாக இருக்காது என்பது என் உறுதியான எண்ணம்.

சுப்புவைப்போன்ற மேதாவிகள் தமிழ் நாட்டில் தோன்றிய பிறகு, என் இலக்கியப் பசியும் ஒருவாறு தணிந்து வருகிறது. தமிழ் நாடு வெகு விரைவில் முன்னேற்ற மடைந்து, அயல் உலகத்தை தலை நிமிர்ந்து பார்க்கும் என்பதில் சந்தேகமே கிடையாது.

சுப்பு நீடூழி வாழ்க!

நுங்கம்பாக்கம்
14—3—'46

வ. ரா.

## பொருளடக்கம்

# மஞ்சி விரட்டு

"ஆதீனம் காத்தாரா, அனுதினம் காத்தாரா?" என்பதில் தான் தாவா. மாமரப்பட்டித் தெற்குக் கோடியிலிருக்கும் கோவிலில் குடிகொண்ட அய்யனாரின் பெயரைப் பற்றித்தான் குறிப்பிடுகிறேன். சென்ற நூறு வருஷ சரித்திரத்தைக் கிழவர்களிடம் கேட்டு ஆராய்ந்து பார்த்தும் அந்த ஊர் ஒரு ஆதீனத்திலும் உட்பட்டிருந்ததாகத் தெரியவில்லை. அனுதினங்காத்தார் தான் என்று நிச்சயிக்கப் புகுந்தாலோ, ஊரில் ஒரு நாளாவது கலகம் நடைபெறுமலிருந்ததில்லை! இவர் காவல் திருப்திகரமாயில்லை! இந்தச் சந்தேகம் எப்படி யிருந்தாலும் அந்த ஊரில் ஒரு அய்யனார் கோவில் உண்டு என்பதும், அவர் பொதுஜனத் தொடர்பு உள்ளவர் என்பதும் நிச்சயம்.

பொதுவாகக் கவனித்தால், இந்த ஊராரும் ஜனங்கள் தான். ஆனால், ஒற்றுமை இல்லாத ஜனங்கள். ஊரில் மொத்தம் நானூறு வீடுகள் உண்டு. ஒவ்வொரு வீட்டுக்காரனுக்கும் சொத்து மதிப்புச் சராசரி ஒரு மா நிலமும், ஓரணை மாடும், நூற்றிருபது ரூபாய் கடனும் உண்டு.

இந்த நானூறு வீடுகளில் நூற்றைம்பது வீடு அகமுடையவர்கள் (அகம்படியர்கள்). இவர்களுக்குப் பிள்ளை என்று பட்டப் பெயர். நூற்றைம்பது வீடு மறவர்கள். மறவர்களுக்குத் தேவர்களென்று பட்டப் பெயர். தேவர்களுக்கும் பிள்ளைகளுக்கும் எப்பொழுதுமே ஒத்துக்கொள்வதில்லை. எதற்கெடுத்தாலும் சண்டை, ஒவ்வொருவருக்கும் தங்கள் ஜாதியாரே பெரியவர்களென்ற அபிப்பிராயம். பிள்ளை கழியெடுத்தால், தேவன் மண் வெட்டி எடுப்பான்; தேவன் அரிவாளை எடுத்தால், பிள்ளை துப்பாக்கி எடுப்பான். இது, இன்று நேற்றல்ல. பல காலமாக இப்படியே நடந்து வருகிறது. இப்படி இருந்தும், இந்த இரண்டு வகுப்புக்களும்

பொதுவாகக் கவனிக்க வேண்டிய சில காரியங்களும் இல்லாமல் இல்லை.

கருப்பர் கோவில் திருவிழா, மாரியம்மன் தேர், மடையடிப் பூசை, வாரி அடைப்பு, கண்மாய்க்குக் கரைபோடுவது, அய்யனார் கோவில் பூசை, மஞ்சி விரட்டு, இரணிய நாடகக் கூத்து, மஹேசுவர பூசை, இவைகள் ஊர்ப் பொதுக் காரியங்கள். இவைகளோடு ஊரின் நாட்டாண்மையை முறையே தேவர்கள் ஒரு வருஷமும், பிள்ளைகள் ஒரு வருஷமும் பார்ப்பது என்று வழக்கம்.

நாட்டாண்மையின் வகுப்பாருக்குத் தலைவரி வசூல் செய்வது, (ஆளுக்குக் கால் ரூபாயும் குறுணி நெல்லும் கிராமக் காரியங்களுக்குக் கொடுப்பது), அய்யனார் கோவில் மஹேசுவர பூசையின் போது சமைப்பது, அய்யனாருக்கு மண்டகப்படி செய்வது, மஞ்சி விரட்டுக்கு வரும் ஆயிரக் கணக்கான மாடுகளுக்கு வேட்டி வாங்கிக் கொடுப்பது, கூத்துக்கு ஏற்பாடு செய்து நடத்துவது - இவைகளே வேலைகள்.

எதிர்க் கட்சியாருக்கோ(அசெம்பிளி மாதிரியில்லாமல்!) சுற்றுப்புறத்து ஊர்களுக்குப் பாக்குவைப்பது, பெரிய மாட்டுக்காரர்களுக்கு அழைப்பு அனுப்புவது, வடித்துவைத்த சாதத்தை வட்டிப்பது, வாங்கி வைத்திருக்கும் வேட்டியைக் கொடுப்பது, கூத்துக் கொட்டகையில் கலவரங்களில்லாமல் பார்ப்பது—இவைகளே வேலைகள்.

நாட்டாண்மைக்கு மரியாதைக்காகப் பரிவட்டமும், எதிர்க்கட்சி மரியாதைக்கு மஹேசுவர பூசையின் விபூதியும் தரப்படும். இது, பதினைந்து வருஷமாய், பக்கத்து ஊராரின் பஞ்சாயத்துப்படி, நடந்து வருகிறது.

அந்த வருஷந்தான் பொன்னுச்சாமி ரங்கூனிலிருந்து வந்தான். பொன்னுச்சாமி, காலஞ்சென்ற குப்பமுத்தா பிள்ளையின் மகன். இவன் ரங்கூனுக்குச் சென்று பதினெட்டு வருஷங்களாகி விட்டன. மொகல் ஸ்ட்ரீட்டில் தோசை விற்றும், கப்பலில் டொரியாம் பழம் விற்றும், காக்கா கடையில் சாயா ஆற்றியும், இன்சீனில் காப்பிக் கடை வைத்தும் எப்படியோ கொஞ்சம் பணம் சேர்த்துக் கொண்டு இந்த வருஷம் ஊருக்கு வந்துவிட்டான்.

பொன்னுச்சாமிக்குக் கிட்டத்தட்டப் பத்து ரூபாய்க்குப் பணம் காசு இருப்பதாகக் கேள்வி.

திடீரென்று அகம்படியர் வகுப்பில் ஒரு பையன் பணக்காரனாக வந்ததில் மறவர்களது வகுப்புக்கு வயிற்றெரிச்சல். ஒவ்வொரு தேவனுக்கும் பொறுமை ஏற்பட்டது. பிள்ளைகள் வகுப்பாருக்கும் உள்ளூர வயிற்றெரிச்சலாயிருந்தாலும், பணக்காரனாக வந்தவன் ஒரு அகம்படியன் என்ற முறையில் சந்தோஷமே.

பொன்னுச்சாமிக்கோ, தன் ஊர் மண்ணில் கால் வைத்ததில் ஏராளமான சந்தோஷம்.

மொத்தத்தில், தேவர்களது மண்டையில் ஆக்ரோஷமும், அகம்படியர்கள் மண்டையில் அகம்பாவமும் ஆரோகணித்தன. தேவர்களின் கூட்டத் தலைவனான கருப்பண்ணத் தேவன், பொன்னுச்சாமியின் செல்வத்தையும் அகம்படியர்களின் அகம்பாவத்தையும் கண்டு நெஞ்சம் புழுங்கினான்.

கருப்பண்ணத் தேவனுக்கு வயது அறுபது இருக்கும். குப்பமுத்தா பிள்ளைக்குப் பிறகு கருப்பண்ணத் தேவனுக்கு அந்தக் கிராமத்தில் செல்வாக்கு அதிகப்பட்டிருந்தது. ஊரில் நடக்கும் எந்தக் கலகத்துக்கும் இவன் தான் பிறப்பிடம்!

ஒரு தடவை இவனுடைய கைவரிசையை ஒரு குடும்பத்தில் காட்டவே, அந்த வீட்டு மறவப் பெண் இவனுடைய கையை ஒரு மரத்தில் வைத்து விரல்களை வெட்டிவிட்டாள். அன்றுதான் இவனுக்கு மொண்ணையனென்று நாமகரணம் ஆயிற்று.

கருப்பண்ணத் தேவன் குடிகாரன்தான். அதிக வயதாகிவிட்டதால், உடம்பு சௌகரியத்துக்காக இப்பொழுது இரண்டு வேளை குடிக்கிறானும். இதற்கு அதிகமான சமயமும் உண்டு. இருந்தாலும், இரண்டு வேளைதான் கண்டிப்பு.

பிள்ளைமார் வகுப்பில் பெரிய மனிதன் இல்லாததால், சென்ற பதினெட்டு வருஷங்களாக அந்த ஊருக்குக் கருப்பண்ணத் தேவன் இட்டதே சட்டமாக இருந்தது.

ஊருக்கு எவன் நாட்டாண்மையாக வந்தாலும், அவன் மொண்ணையன் நாட்டாண்மைக்கு அடங்கித்தான் நடக்க வேண்டும்.

வெகுநாள் கழித்து வந்த பொன்னுச்சாமி அவ்வளவு கோவில்களுக்கும் 'வெரைப்பு' விட்டான். பள்ளையம் போட்

டான். அனுமாருக்கு வடைமாலை சாத்தினான். அய்யன் கோவிலுக்கும் நாள் பார்த்துப் பூசை போட்டான். இரண்டு காலம் ஓயாமல் இந்த வேலைகளே அவனுக்குச் சரியாக இருந்தன.

தைப் பூசமும் வந்தது. வழக்கம்போல் நாட்டாண்மை யானது மறவர்கள் வசமிருந்து அகம்படியர்களுக்கு மாறிற்று.

அகம்படியர்கள் சந்தோஷப்பட்டு நாட்டாண்மையைப் பொன்னுச்சாமி பார்வையில் ஒப்புவித்தார்கள்.

ஊரார் எல்லோரும் பிள்ளையார் மடத்தில் கூடியிருந் தார்கள். பொன்னுச்சாமி தலையில் முண்டாசு கட்டிக் கொண்டான். இது கருப்பண்ணத் தேவனுக்குத் தன் தலை யில் நெருப்பை அள்ளிவைத்தது போலிருந்தது!

ஊரார்கள் பொதுவாகக் கூடிப் பேசுவதற்கு ஏற்பட்ட இடம் பிள்ளையார் மடம். இது ஊராரின் பொதுச்சொத்து. இங்கே முன் காலங்களில் நியாயங்கள் கூட வழங்கப்பட்ட தாகப் பிரஸ்தாபம்.

எந்தப் பொதுக் காரியத்திற்கும் இங்கு கூட்டம் கூடி முடிவு கட்டிய பின்தான் காரியம் பார்ப்பது வழக்கம். அவ்வளவு கோவில்களையும் விட அதிகமான மதிப்பு இந்தக் கட்டிடத்துக்கு உண்டு.

காலில் செருப்புப் போட்டவனும், தோளில் 'வல்ல வாட்டுப்' போட்டவனும், வாயில் புகை விடுபவனும், குதிரை யேத்தக்காரனும் இதன் வாயில் வழியாகச் செல்லவேமாட் டான். இது பதினைந்து வருஷங்களுக்கு முந்திய சங்கதி.

இப்போதோ, இந்தப் புனித க்ஷேத்திரம் நாட் டாண்மைக்காரர்களுக்கும், சில சோம்பேறிகளுக்கும், பதி னஞ்சாம் புள்ளி ஆடவும், சுருட்டுக் குடிக்கவும், காலித்தன மான ரகசியங்களைப் பேசுவதற்கும், பகலில் தூங்குவதற் கும், நிறையக் குடித்துவிட்டு வந்து மறைந்து படுப்பதற்கும் இடமாக விளங்குகிறது.

பொன்னுச்சாமி, பிள்ளையார் மடத்தையும் ஊராரை யும் மண்ணிலே விழுந்து கும்பிட்டுவிட்டு நாட்டாண்மையை ஏற்றுக்கொண்டான்.

ஊர்ச் சுவடியில் பொன்னுச்சாமி நாட்டாண்மைக்கார னாகப் பதிவு செய்யப்பட்டான்.

இதே சமயத்தில் கருப்பண்ணத்தேவன் ஏதோ ஒரு காரணத்தைச் சொல்லி ஊரில் ஒரு கலகம் உண்டாக்கிவிட வேண்டுமென்று மனதில் பதிவு செய்துகொண்டான்.

பொன்னுச்சாமி தன் கைப் பணத்தில் முப்பது ரூபாய் போட்டுப் பிள்ளையார் மடத்துக் கூரையைப் பிரித்துக் கட்டிக் கீழே சிமண்டுத் தளவரிசை போட்டான். பாக்கியிருந்த சாமான்களைக்கொண்டு கூத்துக் கொட்டகையையும் ரிப்பேர் பார்த்தான். இத்துடன் விடவில்லை. பிள்ளையார் மடத்தைச் சுற்றிப் பட்டியல் அடைப்பு அடைத்துப் பூட்டும் போட்டுப் பூட்டிவிட்டான்.

கருப்பண்ணத்தேவன் வகையாருக்கு இந்த அபிவிருத்திகளைக் காணும் போது ஆத்திரம் பெருகிற்று. பொதுச் சொத்தைப் பொன்னுச்சாமி சுயாதீனப்படுத்துவதாகப் புகார் செய்தார்கள். இதற்குப் பதில், பொன்னுச்சாமி என்ன செய்தான் தெரியுமோ? பௌர்ணமிதோறும் அங்கே பொதுக் கூட்டம் கூடுவதாகத் தமுக்கும் போடச் செய்து, பொன்னம்பல ஓதுவாரைக் கூப்பிட்டுத் தினசரி பாரதம் வாசிக்கும்படியும் ஏற்பாடு செய்தான்.

ஒரு நாள் ஊர்க் கூட்டம் கூடியது. அந்தக் கூட்டத்துக்குக் கருப்பண்ணத் தேவன் வரவில்லை. ஊர் முறைப்படி பொன்னுச்சாமி காவல்காரனை விட்டு எல்லோரையும்போல அவனையும்தான் கூப்பிடச் சொல்லியிருந்தான்.

ஆனால், கருப்பண்ணத் தேவனுக்குப் பொன்னுச்சாமி நேரில் வந்து கூப்பிடாதது சிரமமாக இருந்தது. கூட்டம் முடியப் போகும் தருணத்தில் கருப்பண்ணத் தேவன் குடி வெறியால் ஆடி விழுந்துகொண்டு வந்தான். வந்த வரத்தில்—

கருப்பண்ணத் தேவன்: என்னடா, பயகளா, கூட்டம்? கிளுவச் செடி இலைவிட்டாப்லே பத்துப் பயகளாக் கூடிக்கிட்டு—? எவண்டா கருப்பண்ணனில்லாமல் கூட்டம் போட்டது?—என்று மீசையை முறுக்கினான்.

பொன்னுச்சாமி: வாங்க தேவரே. ஊரார் கூட்டம் போட்டிருக்காக. உங்களையும் காவல்காரன் வந்து கூப்பிட்டிருப்பான். நீங்க வல்லே. அதுக்காகக் கூட்டத்தை நிறுத்த முடியுமா?

கருப்: எவண்டா ஊரான்? ஊரிலே ஒரு பெரியான், பெருந்தலே கிடையாதா? ஏண்டா என்ன? தடி எடுத்த பயல் எல்லாம் தண்டக்காரனு?

பொன்னு: இல்லே. ஊர் பாத்து வைச்சவன் நாட்டாண்மைக்காரன். கூட்டத்தைக் கூட்டினுன். அய்யர் வாரவரைக்கும் அமாவாசை காத்திருக்கணும்னு அவசியமில்லே.

கருப்: எவண்டா எதுத்தெதித்துப் பேசறவன்? அவனுக்கு ஈரல்லே பித்தா? எலும்பிலே பித்தாடா—நான் இல்லாமே கூட்டம் போட? கருப்பண்ணனுக்கு எதிரி பண்ணரவன், அவன் வாயிலே அரிசி அள்ளிப் போட்டுக்கிட்டு வரணும்டா—

பொன்னு: உத்சு, நிறுத்து தேவரே. பொன்னுச்சாமிக்கு மருவாதி கொடுக்காட்டிப் போவுது. ஊர் நாட்டாண்மைக்கி மருவாதெ கொடு.

கருப்: என்னடா நாட்டாமெ? நாங்க பாத்து வச்ச களுதை எங்க காலேயே கடிக்கிதோ?

பொன்னு: தேவரே, தள்ளி நில்லு! மூஞ்சிலே உதையப் போகுது.

கருப்: அட பயலெ! தண்ணிமேலே போனதுலே தலே கிறுகிறுத்துப் போச்சோ? எளுந்து வாடா எதிரே.

பொன்னுச்சாமி கப்பலில் போய் வந்ததை நினைத்துக் கருப்பண்ணன் இதைச் சொன்னன். இருந்தாலும் ஜனங்கள் சிரித்து விட்டார்கள். மொண்ணையத் தேவன் குடிவெறியில் பேசுகிருன் என்பது தான் அவர்கள் அறிந்த விஷயம்.

தேவர்கள் கூட்டத்தில் ராக்கன் ஒரு துடியான பயல். மெல்ல, "அய்யனுக்கு ஒரு புட்டி அதிகம்போலே இருக்கு" என்று சொல்லிச் சிரித்தான்.

கருப்: ஏண்டா பயகளா! என்ன சிரிப்பாவாயிருக்கு! உங்க நாட்டாமைக்கார நாய்க்கு முன்னலே சிரிச்சுக் குளுப்பாட்டிறியளோ! ஊர் நல்லா வந்திரும், விளையாட்டுப் பிள்ளைகள் தட்டைக்காடு காத்தாப்பலே!—என்று சொல்லிக் கூட்டத்தினரை ஏற இறங்க ஒரு பார்வை பார்த்து, மீசையை முறுக்கி, வேட்டியைத் தூக்கிக் கச்சம் கட்டினுன்.

இதற்குமேல் பொறுத்துக்கொண் டிருப்பது விபரீத மாக வரும் என்று பொன்னுச்சாமிக்குத் தோன்றியது. அதற்குள் பிள்ளை வகுப்பாரில் ஒருவன் எழுந்து, "என்ன மொண்ணையண்ணே! கடக்கு கடக்குதுன்னு பாத்தா ரொம்ப மேலே போறியே" என்றான்.

பொன்னுச்சாமி அவனைக் கையமர்த்தினான்:

"ஊருக்கு ஒரு வார்த்தை. நாட்டாமையை நான் கேட்டு நீங்க தல்லே. ஊரார் பிரியப்பட்டுக் குடுத்தது. எனக்கு வருகிற மானம் மருவாதை, ரோக்கிதை சாக்கிதை எல்லாம் ஊரைச்சேந்தது. மொண்ணையத் தேவன் பேசின மேப்படியெல்லாம் ஊரு கேட்டிச்சில்லியா? ஊர் அவனுக்குப் புத்தி சொல்லுமா—இல்லே....நான் சொல்லிக்கவா?" என்று கூறி, நாலா பக்கமும் திரும்பிக் கோபத்தைக் கக்கிக் கொண்டு மேல் கண்டவாறு மொழிந்தான்.

ஊரார் பதில் சொல்லவில்லை.

கிணத்தில் போட்ட கல்லுப்போல் உட்கார்ந்திருந்தார்கள்.

கருப்பண்ணத் தேவன் இன்னும் கொஞ்சம் கடுமையாய் ஆரம்பித்தான்:

"அடியம்மா! குங்குமஞ் சொமக்கிற களுதை கும்பிட்டுக் கேக்குதோ? ஊர்க் காலிலே விளுகாதடி! ஊர்வந்து வேகவச் சுப்பிடாது" என்று கட கட கட வென்று சிரித்தான்.

இதற்காவது ஊர் பதில் சொல்விற்ரு, இல்லை; பொன்னுச்சாமியை ஒருபுறத்தில் சுயமரியாதையும், ஒரு புறத்தில் கட்டுப்பாடும் துன்புறுத்தின. மறுபடியும் ஊராரைப் பார்த்தான். "இது ஊராருக்கு நாயந்தானு? நீங்க கேக்க மாட்டீங்கன்னு இந்த மட்டோடே தெரிஞ்சுட்டா நான் பாத்துக்கரேன்" என்றான் பொன்னுச்சாமி.

"கையிலே மூளையிருந்தா கம்பு எடுத்துக்கிட்டு வாடா" என்றான் கருப்பண்ணன்.

பொன்னுச்சாமி சரேலென்று கொட்டகையின் பரணியின் மேல் போட்டிருந்த நில அளவு கோலை எடுத்துக் கொண்டு கூட்டத்தை விட்டுக் கருப்பண்ணனை நோக்கிப் பாய்ந்தான். எல்லோரும் எழுந்து அவனைப் பிடித்துக் கொண்டார்கள்.

பொன்னு: என்னை விடுங்கண்ணே! அந்தக் குப்பை மோட்டுக் கழுதை என்னைக் குங்குமஞ் சுமந்த கழுதேன்னு கேக்குது; என்ன அம்பிட்டு ஆணவம்—விடுங்க—உண்டு இல்லேன்னு பாத்துப்பிடுவம் -என்று கட்டுக்குள் அடங்காத புலிபோல் திமிறினன்.

கருப்பண்ணத் தேவனுக்கு உடம்பு வெட வெடத்தது. எதிரே நின்று சண்டை செய்து அவனுக்குப் பழக்கமில்லை. கனைத்துக்கொண்டு, "விட்டுடுங்கடா, அவன் என்னைக் கொல்லட்டும். பெரிய மனுசங்குற மரியாதை ஊரிலே இல்லாதபோது இந்த உசுரு என்னத்துக்கு, விட்டுடுங்க அவனை" என்றான். இதற்குள் கூடியிருந்தவர்கள் சமாதானம் செய்து பார்த்தார்கள்.

பொன்னு: கெஞ்சின மிஞ்சரது, மிஞ்சின கெஞ்சரது. இது கருப்பண்ணத் தேவன் வளக்கமோ?

கருப்: இந்தக் கையிலே கம்பு எடுக்கணும்ன அதுக்கு நீயா ஆள்?—என்று விரலில்லாத தனது இடது கையைத் தூக்கிக் காட்டினன்.

இதற்குள் எல்லாரும் சமாதானம் செய்து கருப்பண்ணத் தேவனை இத்தி மரத்தடியில் கொண்டுபோய்ப் படுக்கவைத்தார்கள்.

பொன்னுச்சாமிமறுபடியும்கூட்டத்தைப்பார்த்தான்: "ஹூம், நல்லாயிருக்கு ஊரு, அவன் பேசாத தெல்லாம் பேசருன், நீங்க பாத்துக்கிட்டு இருக்கிறீய" என்ருன்.

கூட்டத்திலிருந்த ஒருவன்: "நாங்க பாத்ததும் பார்க்காததும் கடேசி லேல்ல தெரியும்".

இன்னெருவன்:"சரி சரி, விஷயம் ஆகட்டும்"என்ருன்.

பொன்னு: சரி; காரியம் பெரிசு. புதன்கிழமை பூசையும் மஞ்சி விரட்டும் நடக்கணும். ஊர்க் கணக்குக் கச்சாத்து எல்லாம் இந்தா இதோ யிருக்கு. நான் நாட்டாண்மை பார்த்தது போதும், வேறே யாராவது ஒப்புக்குங்க.

அதற்குள் ஒரு கிழவன்: "அட போ. ஊருண்ணு இருந்தா நாலுந்தானிருக்கும். இதெல்லாம் கவனிக்கலாமா?"

பொன்னு: நாலுமிருக்கிற ஊரிலே நாட்டாமெ என்னத்துக்கய்யா?

கிழ: அட எவனோ மேப்படி பேசினா நீ ஏன் கவலைப் படரே.

பொன்னு: என் மனசுக்குத் திருப்தி யில்லே.

கிழ: நாட்டாண்மைக்காரன் எல்லாத்தையுந் தான் சகிக்சுப் போகணும். கருப்பண்ணத் தேவன் வேறே எங்கேயாவது போய்ப் பேசப் போறானா? நம்ம நாட்டாமேங்கிறபோது அவன் ஆத்திரத்தைச் சொல்லுறான்.

பொன்னு: இப்படியா சொல்றது? கூட்டத்துக்கு நானா போய் கூப்பிடணும்? இந்தமாதிரி வந்து நாக்கிலே நரம்பில்லாமே பேசலாமா?

கிழ: ஆமா; நம்ப என்ன குடியானவங்க தானே. அய்யமார்களா? இதைவிடத்தான் என்ன மரியாதையாய் நாம்ப பேசறது. சரிதான் தம்பி, விடு.

இதற்குள் கூட்டம் முழுவதும் "ஆமாங்கரேன் இது ஒண்ணும் குத்தமில்லே" என்று ஆமோதித்தது.

பொன்னுச்சாமி தன்னைக் கடிந்து கொண்டான். பிறந்த ஊரென்னும் பாசத்தால் ஒழுங்கு தெரியாத இவர்களுக்குத் தலைமை வகித்தது பிசகு என்று அறிந்தான். ஜென்ம பூமியில் பற்றுதல் கொண்ட அவனது உள்ளத்தில் கருப்பண்ணனின் மரியாதையற்ற வார்த்தைகள் நெருப்பை மூட்டின. அந்த நெருப்பில் ஊரார் செய்த சமாதானம் மண்ணெண்ணெயை ஊற்றியது போலிருந்தது. தான் மேல் கொண்ட காரியத்தை நடத்திவிட்டுப் பிடியிலிருந்து விலகிக் கொள்ள விரும்பினான். "சரி, பூசையும் மஞ்சி விரட்டும் புதன்கிழமை. வேண்டியவர்களுக்கெல்லாம் பாக்கு வைக்கச் சொல்லுங்கோ" என்று சொல்லிவிட்டு வெளியே சென்றான்.

பொன்னுச்சாமியோடு கூட ராக்கன் என்னும் பையனும் சென்றான். போகும்பொழுதே ராக்கன் சொன்னான்: 'அண்ணே! இது வாழ்ந்தானுக்கு மாரடிச்ச ஊரு. நீ என்னமோ பெரிய சலுக்கார் சிப்பந்தியாட்டமா ஊரை ஓரிசா நடத்திவிடலாம்னு பார்க்கரே. அதற்கு இந்த ஊரு லாயக்கில்லே அண்ணே! பெருச்சாளி கொடஞ்ச செவரண்ணே. பாரம் ஏத்தாதே. படபடன்னு விழுந்திடும்" என்று சொல்லிவிட்டுச் சென்றான்.

மேற்கண்ட கூட்டத்தினுல் தேவர்களது வகுப்பார் பொன்னுச்சாமியை அகம்பாவம் பிடித்தவனென்றும், அடக்கி ஆள நினைக்கிருனென்றும், கருப்பண்ணத் தேவன் மறவனுக இருப்பதால் பெரிய மனிதன் என்றுகூட மதிக்கவில்லை என்றும், சீக்கிரம் பாடம் கற்பிக்க வேண்டுமென்றும் பேசிக்கொண்டார்கள்.

பிள்ளை வகுப்பார்களோ, பொன்னுச்சாமிக்கு வீரத்தனம் போதாதென்றும், கூட்டத்திலேயே கலகம் செய்யாமல் விட்டது பிசகென்றும் பேசிக் கொண்டார்கள். நாட்களும் சென்றன.

மஞ்சி விரட்டுத் தினம் — ஊருக்கு நாற்புறத்திலும் எங்குபார்த்தாலும் வேப்பிலை, மாவிலை, நெல் கதிர்களால் கட்டிய தோரணங்களும், பச்சைப்பசேலென்று ஈச்சங் குருத்துகளை ஆடைகளாக அணிந்து, தலையில் பனை நுங்கு, இளநீர், ஈச்சங்காய் இவைகளைக் கொத்துக் கொத்தாகக் குலை குலையாகத் தாங்கிக்கொண் டிருக்கும் கம்பங்களும் ஊரை அழகு செய்தன.

ஊரின் ஹரிஜனங்கள், பானையில் வைத்திருந்து மக்கிப் போன சரிகை வேட்டிகளாலும், பாசிமணி கோத்த விருதுத் துப்பட்டாக்களாலும் தங்களை அலங்கரித்துக் கொண்டு ஆனந்தமாகத் "தப்புக்கொட்டி ராமாயண"மும் பள்ளும் பாடி, கால்களில் சலங்கை கட்டிக்கொண்டு ஒயில் ஆட்டம் ஆடுகிருர்கள். அவர்களுடைய குலச் சிறுமிகள் தலையில் வேப்பெண்ணெய் தடவி வாரி, கொண்டையை அள்ளிச் செருகிக்கொண்டு, ஒவ்வொருவர் கழுத்திலும் தலையிலும் ஒவ்வொரு கட்டு மருக்கொழுந்து, செவந்திப் பூக்களையும் அணிந்து, முத்து வீராயி பாட்டுப்பாடி, கும்மியடிப்பதும், குலவை போடுவதும் இன்பத்தை வாரி வீசுகின்றன.

இந்த வேடிக்கையைப் பார்த்துக்கொண் டிருக்கும் சில கிழட்டு வாலிபர்களும் அவர்களுடன் கூடிக் கும்மி யடிக்கத் துவங்க, சிறுமிகள் கேலி செய்து சிரிக்கிருர்கள்.

கழுத்தில் ஜல்ஜல் என்று சலங்கைகளும், நெற்றியில் குங்குமப் பொட்டும், வீரப் பார்வைகளும் உள்ள காளைகளைப் பூட்டிய மொட்டை வண்டி, ஒற்றை மாட்டு வண்டிகளில், ஏராளமான வெளியூரார்கள் வந்த வண்ணமாக இருக்கிருர்கள்.

பாவம், பாதசாரிகளோ, ஒரு நிமிஷம் வீணுவதை உலகமே வீணுவதுபோல் நினைத்து ஆவலுடன் ஓடியோடி வருகிறார்கள்.

மஞ்சி விரட்டுக்காக நீலவேணி, ஏரோப்பிளான், பவுன்குட்டை, படுகுரட்டை, பட்டி மட்டை, வல்லாசரணை, சாரை, காரிமோனை, எடையாத்தூர் மட்டை, தங்க ஊசி, முதலிய புனைப்பேர் கொண்ட காளைகள், நெற்றியில் தங்கத்திலும் வெள்ளியிலும் செய்த அரசிலைத் தாயத்துக்கள் அணிந்து, சீவி மெருகு ஏற்றிய கொம்புகளில் எலுமிச்சம் பழங்களைக் கோத்துக்கொண்டு, மதோன்மத்தமாக நடந்து வரும் காட்சி, இந்தியக் கிராம வாசிகள் கௌரவத்தை ஒரு படி உச்சியில் தூக்குகிறது.

மாட்டினல் கௌரவமடையும் மனிதர்கள், வெற்றிலையையும் புகையிலையையும் மூட்டையாகக் கட்டிக்கொண்டு வருவாருக்கும் போவாருக்கும் வாரி வழங்கி, தங்கள் காளைகளைப்பற்றி வாய்ச்சவடால் அடித்த வண்ணமிருக்கிறார்கள்.

நல்ல வேளையிலே பிள்ளையார் மடத்து வாயிலிலிருந்து ஊர்வலம் புறப்பட்டது. தட்டுகளிலும், ரங்கூன் சாய மரவைகளிலும் தேங்காய், பரங்கிப்பழம், வெற்றிலைபாக்கு, பூசணிக்காய் முதலியவைகளும் புழுங்கரிசியும், அதன்மேல் கத்தரிக்காயும் குத்திவைத்து, பெண் பிள்ளைகள் தூக்கிக் கொண்டு முன்செல்லுகிறார்கள். மேளக்காரக் கந்தன் சந்தணத் தேவன் தெம்மாங்குகளைச் சரமாரியாக ஊதித் தள்ளுகிறான். தவுல்காரனும் தவுல் கிழிய வெளுத்து வாங்குகிறான். முதல் வகுப்பில் செல்லும் ஹரிஜனங்கள், வாயில் வைத்திருக்கும் கொம்புகளை ஆகாயத்தில் தூக்கி ஊதி, வானவர்களைத் தங்கள் ஊர்த் திருவிழாவிற்கு அழைக்கிறார்கள். திமிரி நாயனத்தில் தேர்ந்த கட்டயன், "தங்க ரத்தினம்" பாட்டு வாசிக்கிறான்.

இவைகளுக்கு மத்தியில் ஒரு சுத்த வீரனுக்குள்ள லட்சணங்களுடன் கறுத்து மெருகேறிய கடைந்து எடுத்த உடம்பில், கட்டுக் கட்டாய் விபூதியைக் குழைத்துப் பூசிக் கொண்டு, நெற்றியில் சந்தனப் பொட்டிட்டு, தலையில் உருமால் கட்டி, இடுப்பில் சிவப்புக் கரை வேட்டியைக் கச்சம் வைத்துக் கட்டி, ஆண்சிங்கம் போல் அமர்த்தலாய்ப் பொன்னுச்சாமி நடந்து வருகிறான்.

எதிர்க்கட்சித் தலைவன் குள்ளநரிக் கருப்பண்ணனும் கூடவே செல்ல, கூட்டம் ஊர்வலமாய்க் கோயிலை வந் தடைந்தது.

கண்மாய்க் கரையிலிருந்து, அதிர் வேட்டுகள் படார் படார் என்று கிளம்பின. அய்யனரின் சிரசில் பாலையும் பன்னீரையும் இளநீரையும் விட்டு அபிஷேகம் செய்தார் கள். சாமிக்குப் பட்டுச் சாத்தினர்கள். பள்ளயம் போட்டார் கள். கற்பூர தீபாராதனை காண்பித்தார்கள். சாம்பிராணிப் புகையிலிருந்து பூசாரியும் "பூத் பூத்" என்று சாமியாட ஆரம்பித்தான். பிள்ளை பிறக்கவும், கலியாணமாகவும் காணமல்போன மாடு அகப்படவும், எதிரியின் உயிர் போக வும், மழை பெய்யவும்,இவ்வாறு கேட்டவர் கேட்ட வரங்களை எல்லாம் கொடுத்துக் கொண்டு ஒருபுறம் குதித்துக்கொண் டிருந்தான். பண்டாரம் நெற்றியில் விபூதியை அணிந்து கொண்டு எல்லாருக்கும் விபூதி பிரசாதம் கொடுக்க ஆரம் பித்தான்.

முதலில் கருப்பண்ணத் தேவனுக்கு விபூதியைக் கொடுக்கும்படி பொன்னுச்சாமி கையைக் காட்டினன் மொண்ணையனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. சென்ற இரவு, கருப்பண்ணன் தூங்கும்போது மணி நான்கு இருக் கும். போக்கிரிப் பயல்களாக இருபது பெயரைத் தனக் குதவியாகக் கலகத்துக்குத் தயார் செய்துவிட்டுத்தான் நேற் றிரவு வந்து படுத்தான். தன் பேரிலுள்ள மனத்தாங்கல்க ளால், பொன்னுச்சாமி தனக்கு விபூதி தர மறுப்பானென் றும், வேருெரு தேவனுக்குக் கொடுக்கச் சொல்லிக் கட்டளை இடுவானென்றும், அப்பொழுது கலகம் செய்யவேண்டு மென்றும் கருப்பண்ணத் தேவன் எதிர்பார்த்தான். பொன்னுச்சாமியோ, இவனுக்கு விபூதி கொடுக்கச் சொல்லி விடவே, கருப்பண்ணன் ஏமாந்தான். தான் திடுக் கிட்டதைக் காட்டிக் கொள்ளாமல் விபூதியை வாங்கித் தரித் துக் கொண்டான்.

பின்னுலிருந்து ஒரு பையன் நறுக்கென்று மொண்ணை யனைக் கிள்ளினன். கருப்பண்ணன் திரும்பிப் பார்த்தான்.

"என்னத்துக் கப்பேன் மீசை வச்சிருக்கே? அதைப் போய் செரச்சுக்கிட்டு வந்திருவே" என்றான்.

கருப்: ஏண்டாப்பா?

பையன்: ஆமா! என்னமோ, கலகம் பண்ணனும் ஙிறியே! உன்னே நம்பிக் கையிலே கம்பு எடுத்தா, மண் குதிரையை நம்பி ஆத்திலே எறங்கினது மாதிரித்தான். சரீ சரீ—துண்ணூத்தைப் பூசு—என்று முகத்தைக் கோணிக் காண்பித்தான்.

கருப்: உச்சு! சும்மாயிருடா. மஞ்சி விரட்டுப் பொட்டல்லே வச்சுக்குவம் கச்சேரியை—என்று ரசியமாகச் சொன்னன் கருப்பண்ணன்.

பொன்னுச்சாமியும் பண்டாரமும் இவைகளைக் கவனிக்கவில்லை. ஊர் வழக்கப்படி காளாஞ்சி (தேங்காய் மூடி வெற்றிலையோடு) கொடுப்பதில் முனைந்து நின்ருர்கள்.

முறையே பிராமணர்கள், சர்க்கார் கணக்கன், மணியக்காரர், வெளியூர் கிராமத்தார் முதலியவர்களுக்குக் காளாஞ்சி கொடுத்துப் பின் வந்திருந்தவர்களுக் கெல்லாம் சாதம் வட்டிக்க ஏற்பாடு செய்துவிட்டுப் பொன்னுச்சாமியும் வீட்டுக்குச் சென்ருன்.

மூன்று மணிக்கு, நண்பர்கள் புடைசூழ, பொன்னுச்சாமி தன் கைப்பணத்தை அதிகம்போட்டு வாங்கிய வேட்டி மூட்டைகள் ஆலவட்டம் சுருட்டியுடன், எதிர்க்கட்சிக்கு அழைக்க வந்த கருப்பண்ணனுடன் மஞ்சி விரட்டுத் தொழுவுக்குச் சென்ருன்.

மஞ்சி விரட்டுக்கு ஊர்ப் பொதுப் பணத்தில் இருநூறு ரூபாய்க்கு வேட்டி வாங்குவது வழக்கம். இவைகளைக் காளைகளின் கழுத்தில் கட்டி, மூக்குக் கயிற்றையும் கூட உருவிக் கொண்டு தொழுவிலிருந்து பத்துப்பத்து மாடுகளாக வெளியே விரட்டிவிடுவார்கள்.

இந்த மாடுகளைப்பிடித்து, இவைகளின் கழுத்தில் கட்டியிருக்கும் வேட்டிகளை அவிழ்த்துவிடக் கங்கணம் கட்டிக் கொண்டு, வாலிபர்கள் வெளியே கூட்டம் கூட்டமாகக் காத்திருப்பார்கள். சில மாடுகள் கூட்டத்தைக் கிழித்துக் கொண்டு, பாய்ந்து பாய்ந்து வெளியே ஓடிவிடும். சில மாடுகள் நின்று பாய்ந்து விளையாடும்.

வாலிபர்கள் தரையில் மார்புற ஊர்ந்து, அந்த மாடுகளைப் பிடிக்க நெருங்குவதும், மாடுகள் அவர்களை முட்ட நினைத்துத் தம்முடைய கொம்புகளால் குத்துவதும் பார்ப்பவருக்கு வேடிக்கையாக இருக்கும். ஆனல், நாலு அணை

வேட்டியை அவிழ்க்கப்போய் மாட்டுக் கொம்புகளுக்குஇரையானவர்களும் உண்டு. வேட்டிக்காக ஏற்பட்ட விளையாட்டல்ல இது! தமிழ்நாட்டு விவசாயிகளின் வீர விளையாட்டு.

பொன்னுச்சாமி மஞ்சி விரட்டுத் தொழுவை அடைந்தான்.

தொழுவின் வாயிலில் தேர்ச்சீலைகளால் அலங்கரிக்கப்பட்ட ஒரு பரண் இருந்தது. கருப்பண்ணத் தேவன் அதில் ஏறி உட்கார்ந்தான். நாற்பது மூட்டை வேட்டிகளைப் பரண் மீதேற்றினர்கள். பொன்னுச்சாமி தொழுவுக்குள் சென்று ஒவ்வொரு அங்கணம் அங்கணமாக மாடுகளைப் பார்த்துக் கொண்டே வந்தான். பொன்னுச்சாமியும் ஒரு கன்றுக் குட்டி வாங்கியிருந்தான். அதுவும் தொழுவுக்குள் விளையாடிக்கொண் டிருந்தது.

எஜமானனைக் கண்டவுடன் "மா" வென்று கத்திக் கொண்டு அது அருகில் வந்தது. பொன்னுச்சாமியின் உடம்பு வேர்த்தது; மனது கலங்கிற்று. சாதாரணமாகவே மாடு கத்தினல் குடியானவன் அபசகுனமாகக் கருதுவான். அதிலும், அருமைக் கன்றுக்குட்டி மஞ்சிவிரட்டுத் தொழுவில் கத்துவது பொன்னுச்சாமியின் உடம்புக்கு நடுக்கம் கொடுத்தது.

பக்கத்திலிருந்தவனைப் பார்த்து, ஈனசுவரத்தில், "என்ன அண்ணே!" என்று கேட்டான்.

அவன், "அட போ. மாட்டை மாடாட்டமா வளத்தாத்தானே! பிள்ளை கணக்கா வளத்துட்டே. அது இப்போ மச்சினன் முறை கொண்டாடுது" என்ருன். இதற்குள் ஒருவன் ஓடிவந்து "தொழுத் திறக்கணும். நாழியாச்சு" என்று அழைக்கவே, உலகத்து இன்பங்கள் அவ்வளவையும் ஒரு மிக்க இழந்தவன் போல் தன் அருமைக் கன்றுக்குட்டியை விட்டுப் பிரிந்தான் பொன்னுச்சாமி.

அந்த வருஷம் ஏற்பாடுகள் எல்லாம் வெகு விதரணையாயிருந்தன. ஒரு பட்டிக்காட்டான் செய்யும் திருவிழாவைப் போலில்லை. வந்த விருந்தினர்கள் ஒவ்வொருவரும் நமது ஊருக்கும் ஒரு பொன்னுச்சாமி இல்லையே என்று அடிக்கடி நினைத்துக் கொண்டார்கள். கருப்பண்ணத் தேவனே "நமது ஊருக்குப் பொன்னுச்சாமி என்று ஏன் ஒருவனிருக்கிருன்?" என்று வருந்தினன்.

காலத்தை எதிர்பார்த்திருந்தான் கருப்பண்ணன். மாட்டுக்குடையவர்கள் பரணின் கீழே கூட்டமாக வந்து நின்ருர்கள். பொன்னுச்சாமி பரணில் ஏறி உட்கார்ந்தான்.

மூட்டையைப் பிரித்தான் கருப்பண்ணத்தேவன். அதுவரை கட்டுண்டிருந்த அவனது கோபம் பீறிட்டெழுந்தது. பார்த்தான் வேட்டிகளை. ஒரு நிமிஷம் யோசித்தான். "என்னல் இந்த வேட்டிகளைக் கொடுக்க முடியாது" என்று கூவினன்.

அவன் சொல்லி முடிக்கு முன், பொன்னுச்சாமி "ஏன்?" என்ருன்.

கருப்: ஏனு? நீ குதியங்கால் மண்ணைத் தட்டிவிட்டு நாளையே ரெங்கூனுக்குப் போவே. இந்த ஊர் அளியரதை என் கண்ணுல் பார்க்க முடியாது.

பொன்னு: ஏன்? மொண்ணையத் தேவன் வேட்டி குடுத்தா ஊர் மொட்டயாப் போயிடுமா?

கருப்: என்னடா? சல்லிப் பயலே? மறவங்களை மண்ணுங்கட்டியாவா மதிக்கறே. நான் தொடமாட்டேண்டா.

பொன்னு: காரணம் என்ன? சொல்லு பெரியவரே நீ குடுக்காட்டீ நான் குடுக்கறேன்.

"நான் குடுக்கறேன்" என்று பொன்னுச்சாமி சொன்னதும், மறவர்களின் மீசை படபடத்தது. ஒருவரையொருவர் பார்த்தார்கள். கருப்பண்ணத் தேவன், "என்ன! நீ கொடுக்கிறியா? மலை பெரண்டு வந்திச்சுன்னுலும் மறவன் மரியாதையை விட்டுக் கொடுக்கமாட்டாண்டா! எங்கே — தொடு வேட்டியே—" என்ருன்.

பொன்னுச்சாமி வந்த கோபத்தை அடக்கிக் கொண்டான்.

பொன்னு: காரணத்தை எங்கிட்டச் சொல்லாட்டி ஊருக்காச்சும் சொல்லு.

கருப்: காரணமாம், கத்தரிக்காயாம். வளமைக்கி விரோதம்டாங்கிறேன்.

இதற்குள், பிள்ளை வகுப்பாரில் ஒருவன், "என்ன அய்யனே வளமைக்கி விரோதம்?" என்று கேட்டான்.

கருப்: விரோதமா? வருஷா வருஷம் சொவப்பா டப்புக்கரை போட்ட சாயத்துண்டுதானேடா மாட்டுக்குக்

கொடுக்கிறது. அதுக்கு மாறுதலா யிருந்தா, வளமைக்கு விரோதம் பண்ணி ஊர் நாசமாய்ப் போறதா?

மூலையிலிருந்து ஒரு தேவன் "அதென்ன வைகுண்டச் சல்லாவோ?" என்று ஒரு கிண்டலாகக் கேட்டான்.

கருப்: என்னைக்கேப்பானேன்? கண்ணை வெளக்கிப்பிட்டு நீங்களே பாருங்களேன்—என்று ஒரு துண்டை எடுத்துப் பிரித்துக் காட்டினான். எல்லாரும் பார்த்தார்கள்.

நான்கு முழத்தில், நாற்புறமும் அழகிய மாம்பிஞ்சுக் கரைகளுடன், மத்தியில் மகாத்மா காந்தியின் தலையுடன் காட்சியளித்தது அந்தக் கதர் வஸ்திரம்.

அது எல்லோருடைய மனதிலும் அமைதியை உண்டாக்கிற்று. அப்போது எள் விழுந்தால் சத்தம் கேட்கும்.

"சாயத் துணிக்கிக் கதர் வேட்டி மட்டமா?" என்று பொன்னுச்சாமியின் குரல் அமைதியைப் பிளந்துகொண்டு வந்தது.

"நேத்து வந்த துணிக்காக, பாட்டன் பூட்டன் தலைமுறையா வந்த வளக்கத்தை மாத்த முடியுமா?" என்றான் மொண்ணையன்.

பொன்னு: பாட்டன் காலத்தைச் சொல்லு; பூட்டன் காலத்தைச் சொல்லாதே. பூட்டன் காலத்திலேயும் அதுக்கு முந்தியும் இந்தத்துணிதான் நாட்டிலே இருந்தது.

இதற்குள் ஒரு தேவன், "என்னடா? ஊரான் வீட்டுப் பணமா, உங்கப்பன் வீட்டுப் பணமா? நீ எப்படிடா உன் நோக்கத்துக்குத் துணி வாங்கலாம்?" என்றுகேட்டு எதிரில் வந்து நின்றான்.

பொன்: ஊரார் பணத்துக்குமேல் என் பணம் எரனூறு போட்டு நானூறு ரூபாய்க்குத் துணி வாங்கினேன். என் நாட்டாண்மையில் நடக்கும் திருவிழாவுக்குக் காந்தி ராஜாத் துணியேதான் வாங்க வேண்டுமென்று வாங்கினேன்.

கருப்: ஊரார் திருவிழாவுக்கு நீ ஏண்டா கைப்பணம் போட்டு வாங்கரே? நீ என்ன சமீன்தார் மகனா? உன் பிச்சையிலேயா ஊர் புளைக்குது?

பொன்னுச்சாமி எழுந்தான்.

"நான் செய்தது நியாயமோ, பிசகோ, ஊரார் சொல்லும் முடிவுக்கு நான் கட்டுப்படுகிறேன். இப்போது மணி

நாலரை. இருபது மைல் போய் வேறு வேட்டி வாங்கி வருவற்குள் இருட்டிவிடும். மாடு அவிழ்க்க முடியாது. ஆனதால், இப்போ இந்த வேட்டியையே கட்டி மாடு அவிழ்க்க உத்தரவு செய்யுங்கள்" என்ருன்.

இதற்குள், வெளியூரான் ஒருவன், "அது தான் அய்யா சரி. உங்கள் ஊரோ, மஞ்சி விரட்டோ, லட்சணமோ?" என்று சொல்லிவிட்டு வெற்றிலை எச்சிலைக் கீழே துப்பினன். கருப்பண்ணன் அவன் பக்கம் திரும்பி, "போயிலை எச்சியை எங்க மூஞ்சிலே துப்பண்ணே! நேத்தியப் பயல் நாட்டாமேலே ஊருக்கு நல்ல மருவாதை வந்திருச்சு" என்ருன்.

இவர்கள் சண்டை முற்றிக் கொண்டிருக்கையில், கருப்பண்ணத் தேவன் கையாள் ஒருவன் ஒரு தொழு மாட்டை வெளியே விரட்டி விட்டான். பொன்னுச்சாமி இதைப் பார்த்துவிட்டான். ஒரு மூட்டை துணியுடன் கீழே குதித்தான். உயிரைத் திரணமாக மதித்து, நான்கு மாடுகளுக்கு வேட்டியைக் கட்டினன். பரணிலிருந்த கூட்டமும் கீழே குதித்தது. கருப்பண்ணத் தேவனின் கை, பொன்னுச்சாமியைத் தூக்கிப் பத்துமாடுகளுக்கு மத்தியில் போட்டது.

பிள்ளை வகுப்பாரில் ஒருவன் கருப்பண்ணனை ஓங்கி அறைந்தான்!

தேவர்களும் பிள்ளைகளும் வரம்பின்றி மாடுகளை அவிழ்த்து விட்டார்கள். கம்புகளும், கைகளும், கழிகளும், கல்லுகளும் தாராளமாய் விளையாடின. இரு தரப்பிலும் காயங்கள். தூரத்தில் புகை தெரிந்தது. பொன்னுச்சாமி கட்டிய கூத்துக் கொட்டகை தீக்கிரையாயிற்று. கருப்பண்ணத் தேவன் வைக்கோல் படைப்பில் யாரோ ஒருவன் நெருப்பு வைத்தான்.

ஊருக்குள், வீட்டுக் கதவுகள் படார் படார் என்று சாத்தித் தாளிடப்பட்டன. ஊரெல்லாம் ரகசியம் பேசப்பட்டது. பக்கத்தூரில் "கலகம் கலகம்" என்ற வார்த்தை கேட்டது. கூத்து மேடையிலிருந்து பாட்டுக் கேட்க வேண்டிய சமயத்தில் ஊரில் குய்யோ முறையோவென்று அழுகைச் சத்தம் கேட்டது.

பத்து நாட்களுக்குப் பிறகு, பஞ்சாயத்தார்கள் முன்னிலையில், பிள்ளையார் மடத்தில் நாட்டாண்மை பொதுவில்

வைக்கப்பட்டது. பிள்ளைகளை மறவர்கள் சூறையாடுவதும், மறவர்களைப் பிள்ளைகள் சூறையாடுவதும் சர்வசாதாரண மாகி விட்டது. ஊருக்குள் போலீஸ் வருவது ஆச்சரிய மில்லாமலிருந்தது. அடுத்த நகரத்து வக்கீல் வீடுகளில் இந்த ஊராரின் கூட்டமே நிறைந்திருந்தது.

தேவனைச் சாராயக் கடையில் கண்டால், பொன்னுச் சாமியைக் கள்ளுக்கடையில் காணலாம்.

இருவருக்கும் காலிகளின் சேர்க்கை ஏற்பட்டது. மொத்தத்தில், ஊரில் காலிகளின் கூட்டம் அதிகப்பட்டது. ரிசர்வுப் பட்டாளம் (காம்ப்) வந்தது. தெண்டவரி வசூலிக் கப்பட்டது. ஊரின் அழகு ஊரைவிட்டுப் புறப்பட்டுவிட் டது. கோவில் பக்கம் யாரும் திரும்புவதே கிடையாது. காலிகள் ஒளிந்துகொள்ளக் கோவில்கள் மறைவிடமாக இருந்தன. 1927-ம் வருஷத்தில் ஏற்பட்ட இந்தச் சோக சம்பவத்தின் எதிரொலி ஐந்து வருஷங்கள் நீடித்தது.

நாட்டுக்கு விமோசன மணி அடித்ததை யொப்ப, உப்பு சத்யாக்ரக இயக்கம் பாரத பூமியில் ஆரம்பித்தது. அநேக மறவப் பிள்ளைகளும் அகம்படிய வகுப்புப் பையன்களும் தேச நன்மைக்காகச் சிறை புகுந்தனர். பின்னர், காங் கிரஸ் எலக்ஷனும் வந்தது. தேசியப் பிரசாரம் கரை புரண்டு ஓடிற்று. அப்போது ஊரில் ஒற்றுமை ஏற்பட்டது தான் ஆச்சரியம். காங்கிரஸ்காரர் மந்திரிகளாய் வந்த பின்பு கடன் தொந்தரவுகளும் சிறிது நீங்கின. ஊர் ஒரு முகப்பட்டது. மழைக்கும் விளைவுக்கும் குறைவில்லை.

அடாடா! ஒற்றுமையுடன் இந்த ஊரில் நடக்கும் உற் சவத்தை இப்போது நீங்களும் பார்க்கவேண்டுமே.

கதர் வேட்டி கட்டித்தான், சார், போனவருஷம் மஞ்சி விரட்டும் நடந்தது. அதோ, அரசமரத்தின் உச்சி யில் கதர்க்கொடி தெரிகிறதே, அதுதான் ஊரின் மஞ்சி விரட்டுப் பொட்டல்!

# அம்மன் கோவில் - - - - அபிஷேக மாடு

நேற்றுக் காலே எட்டரை மணிக்கே காசுக் கடை திறந் திருந்தது. என் வீட்டு ரேழி உள்ளே யிருந்து ஜன்னல் வழியாகப் பார்த்தால் காசுக் கடை நடவடிக்கைகள் நன்ருகத் தெரியும்.

ராஜமாணிக்கம் செட்டியார் லட்சாதிபதி. அவர் இருபது வருஷமாக அதே இடத்தில் வட்டிக் கடை நடத்தி வந்தார். சென்ற வருடம் புதுக்கணக்குப் போட்ட தினத்தில் 'காசுக் கடை' என்ற பலகையைத் தொங்கவிட் டிருந்தார்.

செட்டியார் சரசி. எல்லாரிடமும் சிரித்துப் பேசுவார். வெறும் பேச்சல்ல; எல்லாம் வியாபாரத்தை ஒட்டியே இருக்கும். எழுதியிருக்கும் கணக்கை மட்டும்தான் சித்திரகுப்தன் படிப்பான். ஆனல், செட்டியார் கடைக் குமாஸ்தா ரத்தினசாமியோ எழுதியது எழுதாதது எல்லாவற்றையும் படிப்பான்.

செட்டியார் (ரொக்கப் பெட்டி) முன் உட்கார்ந்து ரத்தினசாமியிடம் பேசிக்கொண் டிருக்கிருர். ஒரு விவசாயி வந்தான். அவனுக்கு வயது ஐம்பது இருக்கும். ஜாதியிலே படையாச்சி. ஐந்தாறு மயிர் தெரியும்படி ஒரு கந்தலால் முண்டாசு கட்டிக்கொண் டிருந்தான். அவன் முப்பாட்டன் புலிகுத்திப் படையாச்சியின் ஞாபகார்த்தமாக இவனுக்கும் மீசை இருக்கிறது. எருக்கலங்காய்ப் பஞ்சு தலையை நீட்டுவதுபோல மீசை நரைத்துச் சாய்ந்திருந்தது.

குழி விழுந்த கண்கள்; ஆயினும் அவனது ஸ்திரமான சலிப்பற்ற மனே பாவத்தைக் காட்டக்கூடிய கூரிய விழிகள். கையில் ஒரு நெற்றிமட்டக் கழி. சோறு போதாமலேயே சுருங்கிய வயிறு. இவனையும் இவன் ஓட்டி வந்

திருந்த தெனுவிராமன் வளர்த்த குதிரை போன்ற பசு மாடு கன்றுக்குட்டியையும் நான்கு தடவை பார்த்தும், அந்தச் செட்டியாரின் வியாபாரக் கண்கள் ரத்தினசாமியிடமே பேசிக்கொண் டிருந்தன. கடைசியில் காளிப்படையாச்சி கம்மிய தொண்டையைக் கனைத்துக்கொண்டு "முதலாளி, கும்பிடுரேனுங்க" என்ருன்.

செட்டியார்: வா, படையாச்சி, என்ன? காலே வேளையிலே இப்படி வந்தது?

படையாச்சி: இல்லீங்க, அஞ்சாறு நாளா வந்து வந்து பாத்துட்டுத்தான் போனேனுங்க........நீங்க........

செட்: ஆமா! பட்டணத்துக்குப் போயிருந்தேன். மேல வீட்டுக் கோனுன் அடமானம் அப்பீல். உம், பணத்தை நோட்டு நோட்டா வாங்கினுன். இப்போ பணம் தரமுடியாட்டி போகட்டுண்டாப்பா; நிலத்தையாவது விலே வைத்துத் தந்துடு என்று கேட்டதுக்கு, ஆயிரம் தகரார் பண்ணினுன். இனிமேல் கோர்ட்டுலே கட்டட்டும்! சரி தானே—என்று சொல்லி, படையாச்சியை ஏற இறங்கப் பார்த்தார்.

படை: ஆ—போரான் முதலாளி! புளுகுணிப் பயல்! அவன் சொன்னுனே, வியாச்சியம் அவன் பக்கம் செயிச்சுப் போச்சுன்னு.

செட்: அது இந்த ஊரிலேதானே செயிச்சுது? பட்டணத்திலேனு அப்பீல் போட்டிருக்கோம்! அங்கே ஜயிக்கட்டும் பார்ப்போம்.

படை: நிசந்தானுங்கோ. அவ்வளவு பெரிய பட்டணத்திலே இவனுக்காவது, செயிக்கவாவது; முதலாளிக்குத்தான் செயிக்கும் அதுக்கும் சந்தேகமா?

செட்: படையாச்சி! ராத்திரி மறுபடியும் பட்டணம் பயணம்.

படை: என்னுங்க? வந்த காலோடேயே திரும்புறீங்க. என்ன அவ்வளவு அவசரம்?

செட்: இல்லே. ஒரு பைசாக்கூடப் பாக்கி யிருக்கக் கூடாது. உங்கள் எல்லாருடைய நோட்டுகளையும் வக்கீல் இடம் கொடுத்துப் பிராது செய்து வசூல் செய்யணும். அதற்குத் தான் போகிறேன். நோட்டுச் சீட்டு இதுகளை எடுத்துப்போகத்தான் வந்தேன்.

படை: சரிதான்........எனக்கு ஒண்ணும் பாக்கி இல்லீங்களே?—என்று மெதுவாகக் கேட்டான்.

இந்தச் சமயத்தையே எதிர்பார்த்த கணக்கன் ரத்தின சாமி: ஏன் இல்லெ? இருக்கு.

படை: நீ சொம்மாரய்யா; நான் முதலாளியைக் கேக்கரேன். ஏனுங்க முதலாளி?

செட்: உங்.........ரத்தினசாமி, உன் வேலேயேப்பாரு— என்று கணக்கப்பிள்ளையை அடக்கிவிட்டுப் படையாச்சி பக்கம் திரும்பி—உனக்கும் பாக்கி இருக்குப் படையாச்சி!— என்றார்.

பிறகு படையாச்சிக்கும் செட்டியாருக்கும் கீழ்க்கண்ட சம்பாஷணை நடந்தது:

படை: ஏதுங்க? பதினெட்டு ரூபாயும்தான் கட்டித் தீத்துப் பிட்டேனுங்களே.

செட்: அசல் இல்லெ. வட்டிப் பாக்கி நாலு ரூபாய் இருக்கும்.

படை: அதுஎப்படி இருக்குமுங்க?தெய்வ மிருக்குங்க.

செட்: இல்லே படையாச்சி. பாக்கியிருக்கு. நான் சொல்றதை நம்பு. பாக்கி இருக்கு. ரத்தினம், கணக்கை எடு........இதோ பார் கணக்கிலே இருக்கே. நான் வேண்டுமென்றால் பொய் சொல்லலாம். கணக்குப் பொய் சொல்லுமா? இரண்டரை வட்டி எட்டு வருஷம். எங்கே கணக்குப் போடு.

படை: வருஷா வருஷம் ரெண்டு ரூபாய்க்குச் சோளம் அளந்திருக்கேனுங்க. ரெண்டு மாசத்துக்கு முந்தி நாலு ரூபா கட்டிருக்கேனுங்க. வருஷா வருஷம் கட்டுற தொகைக்கு வட்டியும் கொறையாதா?

செட்: (கோபமாக) உனக்குக் கணக்கைப் பற்றி என்ன தெரியும்? அது நோட்டுக் கணக்கு. நீ பணம் தந்தது கைமாத்துக் கணக்கு. மொத்த ரூபாயும் தந்த உடனே வரவு வைத்து அசல் தீர்ந்து போச்சு. வட்டிப்பாக்கி இருக்கு? அசலைத் தள்ளினாலும் தள்ளலாம் வட்டியைத் தள்ளின எங்க குல தர்மத்துக்கு விரோதம். மகாராசன் கோர்ட்டு இருக்கவே இருக்கு; அதிலே போட்டா வருது பணம்! உம். படையாச்சி, இப்ப எங்கே வந்தே? அது யாருது மாடு?

படை: இங்கே தானுங்க. கொஞ்சம் பணம் வேணும்.

செட்: (ஹஹஹ, என்று சிரித்து) ஏன், மாட்டுக்கு உடம்பில் சத்தே யில்லையே அப்பா?

படை: வைக்கலா வரளியா. ஒண்ணுமில்லீங்க........ அஞ்சு ரூபா பணம் வேணுமுங்க. விரை நெல் வாங்கணும்.

செட்: பணமா? இங்கேயா? அந்தப் பேச்சுப் பேசாதே.

படை: இந்தக் கடுத்தம் அப்பிடிச் சொல்லாதீங்க.

செட்: சரி, அஞ்சும் நாலும் ஒம்போது. மாட்டைப் பாத்தா அம்புட்டுப் பொராது. உனக்காகத்தான் தரணும்!

படை: மகாராசா! (பதறிவிட்டான்) மகாராசா. மாட்டை விலைவைக்கா திங்கோ. நான் அதைத் தரேன்னு சொன்னேனு. கைமாத்தா............

செட்: அந்தக் காலம் போச்சு. இப்போ இது காசுக்கடை. நகைக்குத்தான் பணம் குடுப்போம்; நம்பிக் கைக்கில்லே.

படை: நான் எங்கே போவேனுங்க தங்கத்துக்கு?

செட்: அதேமாதிரி தான் பணமும். பணம் தோட்டத்திலே வெளையவில்லே. இந்தா படையாச்சி பத்து ரூபா. இஷ்டமிருந்தால் பணம் உன் புறம், பசு நம்ம புறம்........ ரத்தினசாமி! படையாச்சி நோட்டையும் கேஸ் கட்டுலே வை.

"முப்பது ரூபா மாடு எஜமான்."

"அம்பது ரூபாயா யிருக்கட்டும். எனக்கென்ன? நாளைக்கு நான் பிராது போட்டு சப்தி பண்ணி ஏலங் கொண்டுவரேன். அப்போது முப்பது ரூபா கட்டி ஏலம் எடு. செலவும் அசலும் சேந்து பத்து ரூபா போக இருபது ரூபா திரும்பி வந்துடும்.

"கட்டாது. கொஞ்சம் பாத்துச் சொல்லுங்க."

"அது சர்க்கார் மதிப்பு. அமீனு சொல்லுவாரு. நான் என்ன வலுக்கட்டாயமா பண்றேன்? போ; நாளைக்குத் தெரியும் போ."

"சரி, பிடியுங்க கவுரை. ரெண்டு உசுரு இரையில்லாமெ என் கிட்ட இருந்து சாகவேண்டாம்."

"ரத்தினசாமி! மாட்டைப் புடிச்சுக் கட்டு. படையாச்சி கிட்ட அஞ்சரை ரூபாய் கொடு. நாலு ரூபாயை வட்டியில்

வரவு எழுது. கோவில் தர்ம உண்டியில் எட்டு அணு போடு. படையாச்சி! தர்மம் காசுக்கடை வழக்கம்."

படையாச்சியிடம் ரத்தினசாமி பணத்தைக் கொடுத்தான். படையாச்சி திரும்பினுன்: "முதலாளி! கடன் தீர்ந்துபோச்சுங்கோ" என்று சொல்லித் திரும்பிப் பார்க்காமல் சென்ருன். ரத்தினசாமி, செட்டியார் பக்கம் திரும்பினுர்.

ரெத்தினசாமி: மாடு நல்ல மாடு. 25 ரூப்ாவரையிலே ரெங்கக் கவுண்டர் கேட்டாராம்!

செட்டியார்: கேப்பாரு! சொந்தத்துக்குக் கேட்டு இருப்பாரு. நமக்கு வீட்டிலே மாடு இருக்கு. தர்மத்துக்குத் தானே வாங்கினேன். அம்மன் கோவிலுக்கு அபிஷேகத்துக்கு ஒரு பசு வாங்கிவிடப் பிரார்த்தனை இருந்தது. அதுக்காகத்தான் வாங்கினேன்.

ரத்தின்சாமி: அப்படியா?

செட்டியார்: ஆமா. அவனிடமிருந்தால் மாட்டுக்குத் தீனி இருக்காது. நாம் வாங்கினுல் தர்மத்துக்குத் தருமம். நமக்கும் வட்டிப் பாக்கி வசூலாகிவிடும். ரத்னம்! இந்தப் பத்து ரூபாயையும் உண்டியிலிருந்து எடுத்துவிடு. மாடு கொள் முதல் வைக்கவேண்டாம்.

ரத்தினசாமி: உத்தரவு. இருந்தாலும், நாற்பது ரூபா மதிப்பு மாடு. அவனுக்கு நஷ்டம்தான்.

செட்டியார்: நமக்குத்தான் என்ன மிச்சமா? சொத்து சாமியிது இல்லே? அவனுக்கு இருபது ரூபா நஷ்டம். சாமிக்கு இருபது ரூபா மிச்சம். நமக்குப் புண்ணியம் மிச்சம். இதுதான் கணக்கு—என்ருர் செட்டியார்.

# பரீட்சை

இந்த வருஷமும் பரீட்சை தேருவிட்டால் எங்கேயாவது விழுந்து சாகவேண்டியது தான், என்றான் ராமச்சந்திரன்.

பெருங்குளம் நாணுவையர் பிள்ளை ராமுவுக்கு 22 வயது தான் இருக்கும். சென்னைக் கல்லூரி ஒன்றில், பி. ஏ. சீனியர் பரீட்சை கொடுத்திருக்கிறான். இன்னும் 'ரிசல்ட்' வரவில்லை. படிப்பவர்களில் இரண்டு வகை : (1) பரீட்சைக்காகவே படிப்பவர்கள் (2) படிப்புக்காகவே (கல்வி) படிப்பவர்கள். இதில் இரண்டாவது வர்க்கத்தைச் சேர்ந்தவன் ராமு. அவன் தாய் தந்தையர்களோ அவனைப் பரீட்சைக்காகவே படிக்க வைத்திருக்கிறார்கள். ராமு சென்ற வருஷமும் பரீட்சைக்கு ஆஜரானான். பரீட்சை தேறவில்லை. இங்கிலீஷில் எட்டு மார்க்குக் கம்மி. இந்த வருஷம் கண்டிப்பாய்ப் பரீட்சை பாஸ் செய்து விட்டுத்தான் ஊருக்குப் போவதென்ற வைராக்கியத்துட னிருக்கிறான் ராமு. ராமுவின் தங்கை பெயர் சரஸ்வதி. கலியாணம் ஆகவேண்டிய பெண். ஆகையால் வயசைச் சொல்லக்கூடாது. ராமுவுக்கு அஞ்சு வருஷம் இளையவள். ராமுவின் கலியாணத்தில் வரும் வரதட்சணை ஐயாயிரத்தை வைத்துக்கொண்டுதான் சரசு கலியாணத்தை நடத்தவேண்டும். இன்று 'ரிசல்ட்' வரும் தினம். பத்திரிகைக்காகவே வேங்கடராமனும் ராமுவும் ஹைக்கோர்ட் பீச்சில் காத்துக்கொண்டிருக்கிறார்கள். நிமிஷம் யுகம் போல் தோன்றுகிறது. இதற்கிடையில் ராமுவின் இருதயத்தைப் பிளந்துகொண்டு வந்து விழுந்தன சில வார்த்தைகள்.

"இந்த வருஷமும் பரீட்சை தேருவிட்டால் எங்கேயாவது விழுந்து சாகவேண்டியதுதான்." ராமு பெருமூச்சு விட்டான்.

வேங்கடராமன்: அடே நடக்கக்கூடிய காரியத்தைச் சொல்லு. வீணில் உளருதே. அப்படிச் சாவதானல், நான் செத்து நாலு வருஷங்கள் ஆகியிருக்க வேண்டாமா?

வெங்கிட்டு ராமுவின் வகுப்பில்தான் படிக்கிருன். இது நாலாவது வருஷம். இன்னும் நாற்பது வருஷம் வேண்டுமானுலும் படிப்பான். பணக்காரப் பையன். தகப்பனுக்கு இரண்டாவது தாரம் வந்திருக்கிருள். அவர் ஊரில் வாசம் செய்து கொண்டிருக்கிருர். பையனுக்குப் பணம் அனுப்பத் தவறுவதேயில்லை. பையன் பணத்தை உத்தேசித்துக் கிராமத்துக்கு வந்துவிடக்கூடாது என்ற கவலை அவருக்கு. பையனுக்கோ, "இந்த வருஷம் பரீட்சை தேறிவிடக்கூடாது. 22 சினிமாக் கொட்டகைகளையும் விட்டுவிட்டுப் பட்டிக்காட்டுக்குப் போகும்படி வந்துவிடக் கூடாதே" என்ற கவலை.

* * * *

ராமு: உனக்கென்ன வெங்கிட்டு, நீ பணக்காரன். நான் அன்ருடம் காய்ச்சி. எனக்கு எல்லாம் பரீட்சையைப் பொறுத்திருக்கிறது.

வேங்: ராமு, கவலைப்பட்டால் பரீட்சை தேறிவிடுமா? தேருது. இந்த பி. ஏ. பரீட்சையே ஒரு மாஜிக். அதிர்ஷ்டத்தை அனுசரித்திருக்கிறது பாஸும் பெயிலும்.

ராமு: ஏண்டா வெங்கிட்டு........அப்படியானுல்........... அதிருஷ்டமே விரோதியானுல், சாவது குற்றமேயில்லையே.

வேங்: பேஷ். ஒரு படித்தவன். பி. ஏ. சீனியர் ஸ்டுடெண்டு. நாளைக்கே அத்யக்ஷகருக்கு முன்னலே நின்று 'டிகிரி' வாங்கப் போறே. சாகிறேன் என்கிருயே. எங்கேயாவது விழுந்து சாவது ரொம்பக் கேவலம்.

ராமு: அப்படியென்ருல்—

வேங்: என்ன அப்படி யென்ருல்? வால் பிளக் எலக்டிரிக் கரண்டு, ஸயன்ஸ் டேபிள், இவைகளில் விழுந்து செத்தால் நாகரிகமா யிருக்கும். போடா போ.

இவ்வாறு கூறிவிட்டுச் சிரித்தான் வெங்கிட்டு. ராமுவின் துயரம் அவனுக்குத் தெரியுமா? எருது நோய் காக்கை அறியாது. இன்று காலை ராமுவுக்கு வந்த கடிதத்தைப் பற்றி வேங்கடராமனுக்குத் தெரிய வேண்டிய

அவசியமில்லை. ஐயோ, அந்தக் கடிதம் ராமுவை அரைப் பயித்தியமாக்கிவிட்டது.

அன்று காலை ஒன்பது மணிக்குத் தபால்காரன் கடிதத்தைக் கொடுத்துவிட்டு "எப்ப அம்மா ஊருக்கு?" என்றான். பரீட்சைச் சங்கதி தெரிஞ்ச உடனே அடுத்த ரயிலிலேற வேண்டியதுதான் என்று சொல்லி, லட்சுமி அம்மாள் ராமுவிடம் வந்து உட்கார்ந்தாள். ராமு கடிதத்தைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தான்.

*　　　*　　　*　　　*

சிரஞ்சீவி ராமுவுக்கு அநேக ஆசீர்வாதம். உபய க்ஷேமம்.

ல. அ: ஏண்டாப்பா, ஆரு போட்டிருக்கா, செத்தெ இரஞ்சுதான் வாசியேன். அந்த மூடு மந்திரத்தைக் கேட்போம்.

ராமு: யாரு! அப்பாதான் எழுதி யிருக்கார்.

ல. அ: அவாளும்தான் நித்தியம் எழுதிக்கிண்டே யிருக்கா. ஏண்டா ஆத்திலே எல்லாரும் வெறுமனே தானேடா இருக்கா?

ராமு: இரைந்தே வாசிக்கிறேன், கேளு.

(கடிதம்) சிரஞ்சீவி ராமுவுக்கு அநேக ஆசீர்வாதம். உபயக்ஷேமம். உன் சௌக்யத்துக்கும் உன் அம்மா சௌக்யத்துக்கும் அடிக்கடி எழுது.

ல. அ: ஆமா, எனக்கென்ன வந்துது, அவா திடமா, நன்னு இருந்தாப் போரும். உம், அப்புறம்.

(கடிதம்) உன் பரீட்சை பாசாயிடுத்தா? ஏதாவது தெரியுமா? பத்திரிகைகளில் பார்த்தாயா?

ல. அ: நன்னாத் தெரிஞ்சுது போ. எங்கேயாவது சண்டையும் யுத்தமும், திருடிக்கிண்டு போயிட்டாலும் தானே இந்தப் பத்திரிகையெல்லாம் போடறது! போராதுக்குச் சட்ட சபையாம், சட்ட சபையோ சவுக்க சபையோ அது ஒண்ணு அம்பிட்டுண்டு முழிக்கிறது. எவனாவது ராமுவுக்குப் பரீட்சை தேறிடுத்துன்னு போடுவானுக்கும்னு பாக்கிறேன். ஒத்தனையும் காணோம்.

ராமு: என்னம்மா, நீ கூடப் பத்திரிகை வாசிக்கிறயா?

ல. அ: ஆமா, நான் என்ன ஒன்மாதிரி பி. ஏ.யா வாசிச்சிருக்கேன்? அடுத்தாத்துக் குட்டி படிக்கிருளோ இல்லியோ நித்தியம்........சரி, சரி, மிச்சத்தையும் வாசி.

(கடிதம்) நேத்திக்கு வேம்பு ஆத்தங்கரைக்கு வந்திருந்தான். உன்னைப்பத்தி ரொம்பக் கேட்டான். நீ வந்தவுடனே கல்யாணத்தை நடத்திப் புடணும்னு சொன்னனும். பராபரியாகப் பிரஸ்தாபம். நான் கல்யாண விஷயமாய்ப் பேசவே இல்லை. போன வருஷம் உனக்குப் பெயிலானதிலிருந்து எனக்கு அதைப்பற்றிப் பேசவே வாயில்லை.

ல. அ: நாங்க புள்ளையையும் பொண்ணையும் பெத்த வரிசைக்கு வாய் வேறேயா வேண்டியிருக்கு. சரி அப்பறம். (கிட்ட நெருங்கி உட்கார்ந்தாள்.)

(கடிதம்) இந்த ஊர் லண்டிகளுக்கு சரஸ்வதியென்ருல் வேப்பங்காயா யிருக்கிறது. முந்தாநாள் குளத்தங்கரையிலே 'ஏண்டி மாசா மாசம் உனக்கு மூணு நாளே ஜுரம் வருதாமே' என்று சுப்பி கேட்டாளாம். எல்லாக் கழுதைகளுமாக் கேலி செய்ததுகளாம். பாவம்! குழந்தை தீர்த்தங்கூட எடுக்காமல் ஆத்துக்கு வந்து அழுதது. இதைக் கேட்டதுமுதல் காவித் துணியைக் கட்டிக்கொண்டு எங்கேயாவது போய்விடலாம் என்று தோன்றுகிறது. நான் நேற்றுமுதல் கிணற்று ஜலம் தான் சாப்பிடுகிறேன்.

இதற்குமேல் ராமுவால் படிக்க முடியவில்லை. துக்கம் நெஞ்சை அடைக்கிறது. நாக்குத் தழதழத்துச் சத்யாக்ரகம் செய்கிறது. லட்சுமி அம்மாளோ கண்களில் தாரை தாரையாய்க் கண்ணீர் வடியத் தேம்பிக்கொண்டே, பின்வருமாறு சொன்னுள்:

ல. அ: அந்தப் பெண் ஏன் ஆத்துக்குத் திரும்பி வரணும்? அங்கேயே தண்ணீர்க் குடத்தைக் கழுத்திலே கட்டிக்கிண்டு ஆழம் பார்த்து விழுந்துடரதுதானே. அந்த மகாராசிகளுக்கு முன்னலே பிராணனை விட்டுட. அப்புறம் ஏண்டா வெறுமனே நிருக்கே? முழுக்க வாசிச்சிப்புட்டு அழு.

(கடிதம்) இதெல்லாம் நீ படித்து வருத்தப்படாதே. அம்பாவுக்கு வாசித்துக் காட்டு.

ல. அ. ஏண்டாப்பா. அம்மாவுக்கு அரையணுவுக்குப் பச்சை நாவியை வாங்கிக் குடுன்னு எழுதல்லியா. அவாளைத் தேடி வாக்கப்பட்டதுக்கு அதையாவது வாங்கிக்குடு. எத்தனை பக்கம்தான் இருக்குவாசி.

அனந்தராமன் பிள்ளை பெரியவனுக்கும், சரஸ்வதிக்கும் ஜாதகம் பொருந்தி இருக்கு. ரெண்டாயிரம் ரூபா செலவோடே போகும். உனக்குப் பரீட்சை தேறிடுத்தானல் உடனே வேம்பன் கிட்ட வாங்ற பணத்திலே நடத்திப் பிடலாம். நல்லபடியாய்ப் பரீட்சை தேறினல்தான் ஆச்சு. இல்லாவிட்டால் மானம் போறதுக்கு முன் பிராணன் போய்விடுவது மேல். பகவான் எப்படி நினைத்துக் கொண்டிருக்கிறரோ? பரீட்சை விபரம் தெரிந்தவுடன் அம்மாவையுங் கூட்டிக்கொண்டு வந்து சேர்.

எழுதவேண்டாமென்று நினைத்தாலும் எழுதாமலிருக்க முடியவில்லை. ஆசீர்வாதம்—நாணு வையன்.

*    *    *    *

இதைப் படித்ததுமுதல் ராமுவுக்கு மன நிம்மதி இல்லை. கடிதத்தைப் பையில் வைத்துக்கொண்டு கல்சிலை போல் உட்கார்ந்திருக்கையில், வேங்கடராமன் வரவும் இருவரும் பீச்சுக்குச் சென்றூர்கள். இந்தக் கடிதத்தை ராமு வேங்கடராமனிடன் காண்பிப்பாறு?

மணி ஆறு ஆகி விட்டது. மாணவர்கள் பலர் கூடிவிட்டார்கள். எல்லோரும் பத்திரிகையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறூர்கள். 'பி.எ. ரிசல்ட்ஸ்! பி.எ. ரிசல்ட்ஸ்!' என்று 'ஹிந்து'ப் பத்திரிகைப் பையன் கூச்சலிட்டான். அது ஒவ்வொரு பையனுக்கும் "உங்கள் தலைவிதி என் கையில் இருக்கிறது" என்று காலதேவன் கூவமிடுவது போலிருந்தது. ஒருவருக்குமேல் ஒருவராக மொய்த்துப் பத்திரிகையை வாங்கினூர்கள். நம் ராமுவும் ஒன்று வாங்கினன். நடுங்கும் கை விரல்கள் பத்திரிகையின் ஒவ்வொரு பக்கத்தையும் புரட்டின. குபீரென்று ஒரு வியர்வை வியர்த்தது. கணத்துக்குக் கணம் முகத்தில் புத்துணர்ச்சிகள் தோன்றுகின்றன. இருதயம் துடிப்பதையே நிறுத்தி விட்டது போலிருந்தது. ஒவ்வொரு பக்கமாகப் பார்த்தான். பிள்ளையாருக்கு நூறு தேங்காய் உடைப்பதாக

மனதார வேண்டிக்கொண்டான். அதற்குள் பையன்கள் கூட்டம் கலைய ஆரம்பித்தது.

நம்பர்களை எல்லாம் தேடிக் கண்கள் அலுத்தன. ராமுவின் நம்பரைக் காணோம். சட்டைப் பையில் கையைவிட்டு ஒரு துண்டுப் பேப்பரை எடுத்தான். அது அப்பாவிடமிருந்துவந்த கடித உறை. மறுபடியும் எடுத்தான். ஒரு துண்டுக் கடிதத்தில் 10891 என்று நம்பர் எழுதியிருந்தான். அந்த நம்பர் பத்திரிகையில் இல்லவே இல்லை. மறுபடியும் படித்தான். திடீரென்று நம்பர் முழுவதும் பி.எ.பி.எ.பி.எ. என்றே தோன்றுகிறது. அதனிடையில் குளக்கரையில் சரஸ்வதி குடத்தைக் கழுத்தில் கட்டிக்கொண்டு குட்டையில் விழத் தயாராயிருப்பதும், தகப்பனார் சன்யாசக் கோலத்தில் பிச்சைக்குக் கையேந்துவது போலவும், தாயார் அம்மியடியில் எதையோ அரைப்பது போலவும் தோன்றுகிறது. உலகமே இருண்டுவிட்டது. ஆம், உண்மையில் இரவு எட்டு மணியும் ஆகிவிட்டது.

*　　　　*　　　　*　　　　*

வேங்கடராமனும் வீட்டுக்குப் போகக் கிளம்பினான். ஐந்தாவது வருஷமும் கோட் அடித்த வேங்கடராமனுக்கு இத்தகைய துர்ச்சொப்பனங்கள் ஒன்றுமேயில்லை. ஏற்பட நியாயமுமில்லை. நாலு வருஷம் பழகியிருக்கிறானல்லவா?

வேங்: ராமு! நான் வீட்டுக்குப் போகிறேன், நீ போகலியா?

ராமு: (ஈன ஸ்வரத்தில்) ஆம் போகிறேன்.

வேங்கடராமன் போய்விட்டான்.

ராமு யோசித்தான்: "போகிறேன் — போகிறேன். எங்கே போவது? வீட்டுக்குப் போகவேண்டாமா? எப்படி அம்மா முகத்தில் விழிப்பது? அவள் கண்ணீரை எதனால் துடைப்பது?" ஒன்றும் தோன்றவில்லை. ஆகாயத்தைப் பா[illegible]டு உட்கார்ந்திருக்கிறான். மையிருட்டு இவனை நெருங்கிக் கவ்வுகிறது. சில நட்சத்திரங்கள் மின்னி மின்னி "ராமு! இந்த வருஷமும் ப்ளக்கா!" என்று கேலி செய்கின்றன. மணி பன்னிரண்டு இருக்கும். எவனோ ஒரு பட்டாளத்தான் குடித்துவிட்டு எதையோ இங்கிலீஷில் உளறுகிறான். அது ராமுவை "அடே நீ ஒரு ஸ்காலர்ஷிப் பையனா?" என்று கேட்பது போலிருந்தது. தூரத்தி

விருந்து ஒரு மோட்டார் ஊதுகுழல் "போ போ" என்றுகத்து கிறது. பீச்சு ஸ்டேஷனிலிருந்து ஒரு இஞ்சின் முப்பத்தெட்டு கூட்ஸ் வண்டியையும் இழுக்க முடியாமல் இழுக்க ஆரம் பித்து "ஆ"வென்று அலறி, ராமுவுக்குப் "போ" வென்று பயங்கரமாய்க் கட்டளை யிட்டது. எங்கே போவது? எங்கே போவது? "இங்கே போ! அதோ, அதோ!" என்று ஹை கோர்ட் கலங்கரை வெளிச்சம் கடலைச் சுட்டி, "அதுதான் உன் வாழ்க்கையின் வழி" என்று காட்டிற்று. எழுந்தான் ராமு. கடல் பக்கம் சென்றான். "சீக்கிரம் போ, நான் பார்க்கமாட்டேன். சீக்கிரம் போ" என்று விளக்கு மறு பக்கம் திரும்பியது. வேகமாய் நடந்தான் ராமு.

* * * *

மறுபடியும் வெளிச்சம் வந்தது. அந்த வெளிச்சத்தில் "டேஞ்சர் — அபாயம் இங்கே ஸ்நானம் செய்யக்கூடாது" என்று ஒரு பலகை தெரிந்தது. தயங்கினான் ராமு. கடல் குமுறுகிறது. கையாகிய அலைகள் அமிர்தக் கட்டிகளாகிய நுரைகளைக் கொண்டு "ராமு, ராமு" என்றாற்றி வரவேற் கின்றன. அடேடே! — ராமு திரும்பினான். "திரும்பாதே. நான் தான் பேசுகிறேன் — உன்மனம், தயங்காதே. குளிப்பவர்களுக்குத்தான் அபாயம். விழுபவர்களுக்கில்லை. ராமு, உனக்கு அபாயம் இல்லை. பரீட்சை தேருதவனுக் கில்லை. தரித்திரத் தாய் தந்தையின் குழந்தைக்கில்லை. போ, போ" என்கிறது மனம். வா, வா என்கிறது அலை. வெள்ளைத் துண்டுகளைக் கையில் வைத்துக்கொண்டு வா, வா என்று விசிறிக் கூப்பிடுகிறது சமுத்திரம். சிரிக்கும் அலை கள் "கவலையைவிடு. பி. ஏ. பரீட்சை இங்கே கிடையாது. கஷ்டப் பரீட்சையில் நீ தேறிவிட்டாய். வா; விடுதலை வேண்டுமானால் வா" என்று மேள தாளத்துடன், வாத்திய கோஷங்களுடன் அழைக்கும் கடலில் ராமு இறங்கினான். சந்தோஷம் தாங்கமுடியாத சமுத்திரத் தாய், இரண்டு பெரிய அலைகளால் ராமுவை அணைத்துக் கொண்டாள். ஆனந்தம் தாங்காத கடல் அதிகமாய்க் கோஷிக்கிறது.

* * * *

அடுத்த நாட் காலை ஏழு மணி. உள்ளே யாரோ வரு கிற சத்தம் கேட்டது. "ஏண்டா ராமு ராத்திரி வல்லை!" என்று கூறிக்கொண்டே வந்த தாய், நாணுவையரின்

தருமலிங்கம் கொடியவன் தான். அவன் கண்டிப்பே அலாதி. அவன் கடும் வட்டி வாங்குகிறவன் தான். அவனிடம் கடன் வாங்கியவன் கணக்கை வெட்டிக்கொள்வது யுத்த களத்திற்குச் சென்று காயம் படாமல் திரும்பி வந்த சிப்பாய் மாதிரி தான். இருந்தாலும், அவனுக்கு வியாபாரம் நடக்காமல் இருக்கிறதா? அவனுடைய மூலதனத்தில் வருஷத்தில் மூவாயிரம் ரூபாய் ஆதாயம் வராமல் இருக்கிறதா? இல்லே. ஜனங்கள் அவனிடம் அதிகமாய் லேவாதேவி செய்யாமல் அவனைப் பகிஷ்கரித்து விட்டார்களா? ஹூ ஹூம்! இல்லவே இல்லே. அப்படிச் செய்யவும் முடியாது. தரித்திரத்தைப் பகிஷ்கரித்த பிறகல்லவா தர்மனைப் பகிஷ்கரிக்க வேண்டும்.

அதோ, ஐந்தே முக்கால் அடி உயரத்தில், கையில் ஒரு கணக்கு மூட்டை, முழங்காலுக்கு மேலே வேட்டி, கிருச்சுச் சடா—இந்த அலங்காரங்களுடன் சைக்கிளைக் கையால் தள்ளிக்கொண்டு வைதீகப் பழமாய்ப் போகிறானே, அவன் தான் தருமலிங்கம். எங்கே போகிறான் தெரியுமோ? வண்டிப்பேட்டை மூலையில் அந்தக் கூரை வீட்டில் வசிக்கும் சக்கரையிடம் வசூலுக்குப் போகிறான். நேற்றுச் சங்கதியைச் சொல்வதற்கு முன்னால், முன்பு நடந்ததைச் சொல்லி விடுகிறேன்.

சக்கரைக்கு ரயிலிலே வேலே. எட்டு ரூபாய் சம்பளம். முனியம்மாள் அவன் மாமன் மகள். அவளைத்தான் அவனுக்குக் கட்டி யிருக்கிறது. முன்பு முனியம்மாளும் கட்டிடங்களில் கூலி வேலே செய்தாள். ஒன்பது மாதம் வரையில் பிள்ளையைச் சுமந்துகொண்டு முனியம்மாளும் உழைத்தாள். இப்பொழுது ஆறு மாதமாய் வேலேக்குப் போவதில்லே. பிரசவத்துக்காக வீட்டுக்கு வந்தாள். அதுமுதல் வேலேயையும் விட்டுவிட்டாள். குழந்தையின் பெயர் குப்பன். குப்பன் பிறந்த அறுபது நாளைக்குப் பின் ஒருநாள் புருஷன் பெண்டாட்டிக்குள் கீழ்க்கண்ட சம்பாஷணை நடந்தது:

சக்: ஏ குட்டீ! குப்பனைப் பாத்தியா? சாடையும் மாமன் மாதிரியே யிருக்கு.

முனி: ஆமா. சாடையுந்தா னிருக்கு, பேரும் அவுக பேருதான். அதிட்டம் மட்டும்—எங்கப்பன் அதிட்டத்

திலே........'' என்று ஒரு பெருமூச்சு விட்டாள். அந்த மூச்சுக்குள் எழுத்துக் கோவைகளுக்கு உள்ளடங்காத ஏதோ ஒரு சோகம் ஒலித்தது.

சக்: ஏங்குட்டீ பெருமூச்சு விடறே? என்ன குறைச்சலாப் போச்சு?

முனி: ஒண்ணுமில்லே—முந்தியாவது மொத்தமா பதிமூணு, பதினாலு ரூபா வந்திச்சு. இப்போ அதிலேயும் அஞ்சு ரூபாயிலே மண் விளுந்து போச்சு. ஒன்னேடே எட்டு ரூபாய்ச் சம்பாத்தியத்தே நம்பி வீடு இருக்கு. மூச்சு ஒண்ணுமில்லே.

சக்: இதுக்காக நீ ஏங் கவலைப்படறே? சமாளிக்க வேண்டியது எம் பொறுப்பு. உனக்கு என்ன வேணும்? அதைச் சொல்லு.

முனி: எனக்கென்ன வேணும்? ஒண்ணும் வேணும். எங்கிட்டும் நீயும் குப்பனும் சொகமாயிருந்தாப் போதும்.

சக்: சரித்தான் புள்ளே. பூசிப் பூசி மொளுகிறியே. மறைக்காமச் சொல்லு சங்கதியே.

முனி: என்னத்தைச் சொல்லச் சொல்றே. குடும்பம் இருக்கிற கயிட்டத்திலே குப்பனுக்கு ஏதாச்சும் வாங்கிப் போடுன்னு நான் சொல்ல முடியுமா?

சக்: முளிக்கிரு....கூடைமுளி—அவனுக்கு என்ன வேணுமிப்போ? சொல்லு....டில்லிப் பட்டணத்தைத் தூக்கியாந்து வைக்கணுமா? முக்குருணிப் பாலு, புலிப் பாலு வேணுமா? சொல்லு. குப்பனுக்கு வேணும்னுக்கா இந்த மானத்தைக்கூட வில்லா வளச்சிடுவாஞ் சக்கரே தெரியுமா?

முனி: மச்சான்—நீ வாங்கறியோ வாங்கல்லியோ; வாய் மாத்திரம் சக்கரைதான். குச்சு வீட்டுக் குப்பனுக்கு டில்லிப் பட்டணம் என்னத்துக்கு? அவன் வவுத்துக்கு ஆயிரம் புலிப்பாலைக் குடிச்சாலும் முனியம்மா பால் ஒரு சொட்டுக்குச் சரியாகுமா....அதெல்லாமில்லே. அவனுக்குத்தான் ஒரு........

சக்: சொல்லு குட்டீ, தயங்காமே.

முனி: பாக்கப்போனா ஒண்ணும் பொரமாதமில்லே. நம்ம தெருத்திரியத்தை நினைக்கிற போது அது மலையாட்டம் தோணுது.

சக்: ஏ குட்டீ, நீ கிழல் கோளீ. வேளைக்குச் சாப் பிட்டுக்கிட்டு, குப்பன் மேலே தூசி பறக்காமே காக்கிறது தான் ஒன் டிபாட்டுமெண்டு. மைத்தது நம்மளுது. நீ ஏன் ஆலேயும், தோலேயும், அச்சிதையும் அள்ளிப் போட்டுக் கறே? வேணுங்கிறதைச் சொல்லு.

முனி: முந்தாநாள் மழை பேஞ்சுதே, வாடைக் காத்து, கூரையைப் பிச்சிக்கிட்டு அடிக்கல்லே........அது நினைப்பு இருக்கா?

சக்: நினைப்பில்லாமெ என்ன...........குப்பனை மடிலே போட்டுக்கிட்டு நீ வெட வெடத்தே. உன் பல்லெல் லாம் கிடுகிடுன்னு தாளம் போட்டுச்சு - எல்லாத்தையும் பாத் துக் கிட்டுத்தான் நான் அந்த மூலேயில் படுத்திருந்தேன்.

முனி: அப்பறம்........நேத்துப் புள்ளேக்கி உடம்பு கதெகதென்னு சுட்டிச்சு. அந்தச் சீதளம் பட்டுத் தடுமன் புடிச்சுக்கிச்சு.

சக்: ஐயய்யோ? பிறகு.

முனி: பிறகென்ன? ஒன் மாமன் மகள் விட்டுடு வாளா? வெரளி மஞ்சலெ ஒடிச்சு ஒரச்சு, சுண்ணும்பிலே கொழச்சு, பத்துப் போட்டேன். பரந்தே போச்சு.

சக்: நல்ல வேளே, மாரியாத்தா புண்ணியம்.

முனி: அது முதக்கொண்டு எங்கணுச்சும் போய்ப் பிச்சை எடுத்தாவது புள்ளேக்கி ஒரு கம்பளிச் சட்டை வாங்கிப் போட்டுப் பாக்கணும்னு பாக்கறேன் முடியல்லே.

சக்: பூ, இதுக்குத்தானு? நீ சொல்லலியே? இது உங் குத்தமா, எங் குத்தமா? சாயங்காலம் பாரு.

முனி: பணம்?

சக்: அடே! பணத்துக் கென்ன? புதையலா எடுக்க ணும்........அரைரூபாய்க் காசுதானே.

* * *

இதே சமயத்தில் வெளியே யிருந்து "சவரிமுத்து, சவரிமுத்து!" என்று தருமலிங்கத்தின் குரல் கேட்டது. அந்தச் சவரிமுத்தன் எங்கேயோ பொந்துக்குள் நுழைந்து விட்டான். குரலேக் கேட்டான் சக்கரை. பளிச்சென்று ஒரு யோசனே தோன்றியது. எழுந்து வந்தான் வெளியே.

சக்: என்ன யாபாரீ...........சவுக்கியந்தானு? என் ருன்.

தரு: அடேடே! மேஸ்திரியா? என்னப்பா....ஒங்க பொடியன் எப்படி இருக்கான்?

மேஸ்திரி என்று கூப்பிட்டதும் சக்கரைக்குத் தலை கிறுகிறுத்தது; ஆனந்தமா யிருந்தது. வாடிக்கை பிடிப்பதில் கைதேர்ந்த தருமலிங்கம் கூலியை மேஸ்திரி யென்றும், மேஸ்திரியை மானேஜர் என்றும், மானேஜரை முதலாளி என்றும், இன்னும் அதிகமாகவும் உயர்த்துவான் என்பது இந்த ஏழைக்கு எப்படித் தெரியும்?

சக்: குப்பனு....நல்லாச் சிரிக்கருன். மூஞ்சி பாக்கருன்.

தரு: ஒரு வயசாச் சில்லே.

சக்: "ஏதுங்க........ரெண்டு மாசமாச்சு. அந்தக் கடேசி வீடு தளம் போடற போது பொறந்தான். இப்ப தானே செவரு ஏரியிருக்கு"—என்று பட்டிக்காட்டில் கட்டும் புது வீட்டைச் சுட்டிக் காட்டினன்.

தரு: என்னமோ, போகட்டும் போ! சக்கரை ஒரு பாக்கு இருக்கா?

சக்: இந்தா இருங்க.

உள்ளே சென்று இரண்டு பாக்கும், ஒரு வெற்றிலையும், புகையிலையும், சுண்ணும்பும் கொண்டுவந்தான். தருமலிங்கம் அவைகளைப் போட்டுக்கொண்ட படியே "இதெல்லாம் என்னத்துக்கப்பா? நீ புள்ளைகுட்டிக்காரன். காசைச் சேத்துவையப்பா" என்ருன்.

சக்: சேக்க வாவதுங்க, புள்ளைக்கி ஒரு சட்டை வாங்கணும். அதுக்கே........

தரு: வாங்கிப்போட்டாக் கிடக்கு.

சக்: எப்படி வாங்கறதுங்க? சம்பளம் வாரமட்டும் பணம் கிடைக்காது.

தரு: அதுக்காக என்ன? நாங்கல்லாம் எதுக்காக இருக்கோம்? ஒரு சமயா சமயத்துக்கு வாங்கிப்போடு, ஒரு பத்து நாளிலே பணம் கொடுக்க.

சக்: பத்து நாளிலே ஆகாதுங்க. சரியா ஒரே மாசம். குடுத்துப்பிடறேன்........தர்ரீங்களா?

தரு: "சரியப்பா, நான் தரேன். இனிமேல் கவலையில்லையே? சாயங்காலம் தரேன்"—என்று சொல்லி, முதுகிலே ஒரு தட்டுத் தட்டிவிட்டுச் சென்ருன். தருமலிங்கம்

தங்கமான மனிதனென்றும், பேட்டைவாசிகள் அவனைப் பற்றிச் சொல்லுவதெல்லாம் அபத்தமென்றும், தர்மலிங் கத்துடன் இன்று முதலாவது ஒட்டிப் பழகும்படி நேர்ந் தது தெய்வானுகூலமென்றும் நினைத்தான் சக்கரை.

சொல்லிச் சென்றபடி சாயங்காலம் வந்து ஒரு கம்ப ளிச் சட்டையைக் கொடுத்தான் தருமலிங்கம். அதற்கு இரண்டு ரூபாய் விலையும் ஒரு மாச வட்டி அணு ஐந்தும் சேர்த்து இரண்டு ரூபாய் ஐந்தணுவுக்கு வவுச்சரில் கை யெழுத்து வாங்கிக்கொண்டு சென்றுன் தருமலிங்கம். அள வெடுத்தானு? தையல்காரனிடம் தான் அலைந்தானு? அதெல்லா மில்லை. அவனுக்கு அந்த வேலையெல்லாம் எதற்கு? நகரத்தில் உள்ள கோபிசந்த் அடகுக் கடைக்கு நேரே சென்றுன். அவனிடம், எந்தக் குடிகாரனே ஜிகினு வைத்துத் தைத்த ஒரு மகர் நோன்புச் சட்டையை எட்டு அணுவுக்கு அடகு வைத்திருந்தான். நாளாகிவிட்டது. அடகுவைத்தவன் மறுபடியும் அடகுவைக்கச் சாமான்கள் தேடிக்கொண் டிருக்கிருனே அல்லாது சட்டையை மீட்க வில்லை.

தருமலிங்கம் கோபிசந்தினிடம் குழந்தை போடும் சட்டை ஏதாவது வந்திருக்கிறதா வென்று கேட்டான். அந் தச் சட்டையை அந்த வியாபாரியிடம் இந்த வியாபாரி பத்து அணுவுக்கு வாங்கிக்கொண்டு வந்து இரண்டு ரூபாய்க் குச் சக்கரை தலையில் கட்டினுன்.

சட்டை வாங்கி மூன்று மாதமாகிவிட்டது. சட்டை பெரிதாயிருந்ததையும் பொருட்படுத்தாமல் வாங்கின புதி தில் ஐந்தாறு நாள் குப்பனுக்கு மாட்டி மாட்டி அழகு பார்த் தாள் முனியம்மாள். பிறகும் அது உபயோகப் படாம லில்லை. குப்பனுக்கு மெத்தை, குப்பனுக்குத் தலைகாணி, குப்பனுக்குப் போர்வை, சில சமயங்களில் குப்பனுக்குச் சட்டையாகவும் உபயோகப் படுத்தப்பட் டிருக்கிறது அது.

சக்கரை தருமலிங்கத்துக்கு ஒரு ரூபாய் கொடுத்துவிட் டான். தருமலிங்கமும் அசலுக்கு ஒரு அணு வந்துவிட்ட தாகக் கணக்கும் சொல்லிவிட்டான். மூன்று நாளைக்கு ஒரு தடவை தருமலிங்கம் பணத்துக்கு விரட்டுகிருன். அவன் வரும்போதெல்லாம் பஞ்சமில்லாமல் மரியாதை செய்கிருன் சக்கரை. ஆனுல், அவன் கடுமை செய்வதி

லும், இவன் அவன் மோவாய்க் கட்டையைத் தாங்குவதிலும் குறைவில்லை. இவனுடைய உபசாரங்களை யெல்லாம் அவன் ஒரு பொருட்டாகக் கருதவில்லை. கடன் வாங்கினவன் கடன் கொடுத்தவனுக்குச் செய்யவேண்டிய ஆயிரம் கடமைகளில் இது ஓர் அற்பம் என்று நினைத்திருக்கிறான் அவன்.

* * *

நேற்று இரவு எட்டு மணிக்குச் சக்கரையின் வீட்டில் கீழே சட்டையை விரித்துக் குப்பனைப் படுக்கப்போட்டிருந்தது. அவன் மேலேயும் சட்டையின் மறு தலைப்பைப் போர்த்தி யிருந்தார்கள். சிமிணியில் கரி ஏறிப்போய், உள்ளே நூல் இழையில் வெளிச்சம் இருப்பதை மட்டும் காட்டிற்று. குப்பன் முக்கி முணகிக்கொண்டிருக்கிறான். சக்கரையும் முனியம்மாவும், மௌனமாகப் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டிருக்கிறார்கள். ஆறுமுகப் பண்டிதன் மருந்து கொடுத்து விட்டுப் போகும்போது, "ராவைக்கி முப்பது நாளியும் இந்தக் காயலாக் கொஞ்சம் கடுமைதான் பண்ணும். பலபலன்னு கிளக்கு வெளுக்கவும் சூடு எடுபட்டுப் போகும்" என்று சொல்லிவிட்டுப் போயிருக்கிறான்.

ஒரு ஊதல் காற்றடித்தது. விளக்கு ஒரு தடவை அபாயத்துக்கு ஆளாகித் தப்பியது. குப்பன் மேலிருந்து விலகிய சட்டைத் துணியை முனியம்மாள் எடுத்துப் போர்த்தினாள்.

அந்தக் குருவிக்கூடு போன்ற வீட்டில் குப்பனை மத்தியில் போட்டுக் கொண்டு இந்த இரண்டு குருவிகளும் இறக்கை இருந்தும் ஒடிந்தனபோல், அசைவற்று, மௌனமாகக் கண்கொட்டாமல், எப்பொழுது விடியும், விடியும் என்று எதிர்பார்த்திருந்தன.

"ஏ, சக்கரை! சக்கரை"! என்று வெளியே இருந்து கூப்பிட்டான் தருமலிங்கம்.

சக்: (உள்ளிருந்தபடியே) என்ன அண்ணே, சும்மா உள்ளே வா. போகலாம்.

தரு: இல்லே. சல்தீ போகணும், இங்கே வா.

சக்: உள்ளே வாப்பா. குப்பனுக்கு உடம்பு சிராங்கமில்லே. நான் எழுந்திருச்சு வரமுடியாது.

தருமலிங்கம் உள்ளே வந்தான்.

அவன் சடாவின் கிரீச்சுச் சத்தத்தைக் கேட்டு ஐந்தாறு எலிகள் தப தப வென்று அவன்மேல் விழுந்து ஓடின.

தரு: வரமாட்டியா? போர உசுரை நீயா புடிச்சிக் கிட் டிருக்கே? சரீ, பணம் எங்கே?

சக்: அண்ணே; பெரிய மனுசம் வாயாலே ஒண்ணும் சொல்லாதே. நாலு நாளாகட்டும். பணம் தர்ரேன்.

தரு: நாலு மாசம் போராதா! இன்னுமா நாலு நாள்?

சக்: மொள்ளப் பேசு. குப்பன் இப்பத்தான் அசந் திருக்கான்.

தரு: அட, அசந்தாக்க என்ன; எப்படிப் போனுக்க என்ன? என்னமோ மொள்ளப் பேசுன்னு ஆடர் போடு றியே. கொடப்பா பணத்தே. ரெண்டு ரூபாய்க்கி ஒரு அணுக் குறையப் பாக்கி.

சக்: நான் பணத்துக்கு எங்கே போவேன் அண்ணே? திடீர்னு குருடனை ராசமுளி முளிக்கச் சொல் றியே. நாலு வேளை களிச்சு வாங்கிக்க.

தரு: முடியவே முடியாது. நாளைக் காலே நான் ஊருக்குப் போறேன்.

சக்: ஏண்ணே. நாலு நாள் களிச்சுப் போயேன்.

தரு: எங்கூர்த் திருநாள். நாளைக் காலே கொடி யேற்றம். நான் போய்த் தண்ணீர்ப் பந்தல் வைக்கணும். இது பத்து வருஷமா வழக்கம். ஒனக்காகக் காத்திருக்க முடியாது........எடு பணம்.

சக்: என்ன அண்ணே. தருமமெல்லாம் பண்ணு றியே; ஒரு நாலு நாள் பொறுக்கப் படாதா?

குப்பன் ஒரு தடவை விசும்பினன். ஏககாலத்தில் சக்கரையும் முனியம்மாளும் குனிந்து பார்த்து விட்டுத் திரும் பினர்கள். தருமலிங்கம் எழுந்து நின்றான்.

தரு: இந்த ஊருக்கு நான் தருமம் செய்ய வல்லே. சம் பாதிக்க வந்தேன். பேச்சு மத்தீலே எளுந்திருச்சு ஓடறியே. ஒனக்குப் புள்ளை எப்படி முக்கியமோ, அது போலே எனக் குப் பணம் முக்கியம். பணத்தைக்கொடு....இல்லாட்டாச் சட்டையைக் களட்டி எறி என்று உறுமினன்.

சக்: சட்டையயா.......வாங்கிக்கோ........காலம்பரத் தாரேன்.

தரு: முடியாது. இப்பவே கொடு. நீ வச்ச ஆளில்லே நீ சொல்லறப்போ வெல்லாம் உன் வீட்டுக்கு வர.

சக்: குப்பன் குளுர்லே....நடுங்கருன்....காலம்பரக் களட்டித் தாரேன்.

தரு: ஓம் புள்ளேக்காக இனுமாச் சட்டை குடுத்தால், என் பிள்ளேகள் வயற்றில் காற்றடிக்கும்....என்று சொல்லி, குப்பனிடம் நெருங்கி, சட்டையை இழுக்கப் போனுன். சக்கரை தடுத்தான்: "வியாபாரீ, வெளியிலே நில்லு. சட்டை வரும்" என்ருன்.

தரு: எப்போ!

சக்: இப்போ!

தரு: நிசமா!

சக்: சத்தியமா!

தருமலிங்கம் வெளியே சென்ருன்.

சக்: ஏ, முனியம்மா!

ஸ்தம்பம் போல் நின்றுகொண் டிருந்தாள் முனியம்மாள்.

முனி: ஏன்?

சக்: அந்தச் சட்டையைக் களட்டு.

முனி: அதையேன் இப்ப களட்டச் சொல்றே.... கூதல் பல்லுக் கிட்டிச்சுப் போகுது.

சக்: சரிதான். விதி விட்டபடி விடட்டும். களட்டு.

முனி: வேண்டாத நாளெல்லாம் போட்டு அளகு பாத்துப் பிட்டு, புள்ளேக்கிச் சனி பொறந்திருக்கறப்போ களட்டச் சொல்றியே. களட்டினுக் குப்பன் குளுரிலே வெறச்சுப் போவானே. வேண்டாமே. அந்த அண்ணன் கிட்டவாவது போய்ச் சொல்லேன்.

சக்: என்ன? குப்பன் குளுரிலே வெறச்சுப் போவானு....சரி போக....சரீ....அந்தப் பாவி சட்டையெப் போடாதே. களட்டுறியா இல்லேயா?

முனி: நான் மாட்டேன்.

சக்: மாட்டியா! அறஞ்சேன்னுச் செவுளு பேந்து போகும். களட்டிரீ.

முனி: நானுவது அவரு காலிலே விளுந்து கேக்கவா!

சக்: ஏன்?....வேண்டாம். காலிலே விளுந்தவனேக் களுத்திலே மிதிப்பான் அவன். சட்டையைக் களட்டி

அவன் கையிலே கொடு. இந்த ஊருலே சம்பாரிச்ச பாவத்தே அவாவூர்க் குழாய்த் தண்ணியை ஊத்திக் களு வட்டும்.

(வெளியே யிருந்து) "கொடுத்த பணத்தைத் திருப்பிக் கேட்பது பாவமா?" என்று முணுமுணுத்தான் தருமலிங்கம்.

முனியம்மாள் குப்பனிடம் நெருங்கினாள். "வேறே துணிகூட இல்லியே போத்தறதுக்கு" என்று ஏங்கி னாள்.

இதைக் கேட்டவுடன் சக்கரை கட்டியிருந்த வேஷ்டி யின் ஒரு ஓரத்தைப் பரட்டென்று கிழித்துக் கோவண மாகக் கட்டிக் கொண்டு மீதத்தை முனியம்மாளிடம் எறிந் தான்.

முனி: அடெ....என்ன....பரட்டுனு வேட்டியைப் புடுச் சுக் கிளிக்கறே....உனக்கென்ன பயித்தியமா புடிச்சுப் போச்சு?

சக்: சும்மாயிரு....இப்பத் தான் புத்தி வந்திருக்கு. இந்த வேட்டியை எடுத்துப் போட்டுப் படுக்கவைத்துப் போத்தி, சட்டையை எடுத்து அவன் கையிலே கொண்டு போய்க் கொடு.

முனி: நல்லா யிருக்குப் போ. திடும்னு யாராவது வந்தா இப்படியேயா....?

சக்: யாருடீ வரப்போரு....ஒன்னையும் என்னையும் தேடி எவன் வருவான்? ஏழை வீட்டுக்குக் கடன்காரனைத் தவிர வேறே யாரும் வரமாட் டாண்டீ போ.

முனி: நீ பேசினதையே பேசிறியே, நீ புடிச்ச முசலுக்கு மூணே காலுன்னு—வைத்தியரைக் கூப்பிடப் போகணும்னு இப்படியேவா போவே!

சக்: ஆமா; நல்லாப் போவேன். எங்கிட்ட வேட் டிக்கி வக்கில்லே........போவேன்.

முனி: அட சொல்றேன், ஒத்தைத் துண்டைக் கட் டிக்கிட்டு மரமாட்டம் நிக்கறே. நிக்க அவமானமா யில்லே?

சக்: அடச் செய்....விடியா மூஞ்சி....மானமாம்....என் மானம் பெரிசா, குப்பன் பிராணன் பெரிசா........?என்று சொல்லி, தானே நெருங்கினான் குப்பனிடம். பல்லைக் கடித்துக் கொண்டு சட்டையைக் கழட்டினான்.

குப்பன் முக்கவில்லை, முனங்கவில்லை. தண்ணீரே கண்டறியாத குப்பனுடைய உடம்பை முனியம்மாளது கண்ணீர் குளிப்பாட்டிற்று.

"அடபாவீ!" என்று அலறினள் முனியம்மாள். குப்பனை மடியில் தூக்கிப் போட்டுக் கொண்டாள். குப்பனுக்கு இசிவு வந்துவிட்டது. காலையும் கையையும் கோணிக் கோணி இழுத்தது. குப்பனையும் முனியம்மாளையும் கூர்மையாய்ப் பார்த்தான் சக்கரை. வெறி கொண்டான். வெளியே ஓடினன். தருமலிங்கத்தின் முகத்தில் சட்டையை எறிந்தான். வீட்டுக்கு வெளியே நாலு அடி ஓடித் திரும்பி வந்தான்.

* * *

"சட்டையைத் தாண்டா கொடுப்பேன். குப்பனைக் கொடுக்க மாட்டேண்டா போடா....போ....போ.... வைத்தியரைக் கூட்டிக்கிட்டு வரப்போறேன். வளியில் நிக்காதே" என்று சொல்லிவிட்டு வீதியில் ஓடினன்.

தருமலிங்கம் புறப்பட்டான்—சைக்கிள் மணியும் அடித்தது—மணிச் சத்தம் கேட்டு அடுத்த தெருவில் குடிசைக்கு வெளியே உட்கார்ந்திருந்த கூலிகள் உள்ளே சென்று மறைந்தார்கள்.

மறுபடியும் அவன் ம்ணிச் சத்தம் எந்த வீட்டின் வாசலில் அடிபடப் போகிறதோ!

முனியம்மாளின் மடியில் கிடந்த குப்பன் கண்ணை விழித்தான். முனியம்மாள் "சட்டைக் காடா பஞ்சம்! என் வவுத்திலே பாலை வாத்தியேடா. மாரியாயி! உனக்கும் ஒரு பாவாடை வாங்கிப் போடறேன்" என்று மறுபக்கம் திரும்பிக் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

# கறுப்புக் குல்லா

அண்ணுப் பட்டிச் சிவலிங்கம் இப்போது கறுப்புக் குல்லாச் சிவலிங்கம். அவன் சிறையினின்று ஏழாவது தடவையும் விடுதலை யடைந்தான். இந்தத் தடவை வெளியே வந்து எட்டு நாளாகிறது. அவனை ஆரத்தி சுற்றி வரவேற்று யார் அழைத்துச் செல்வார்கள்?

தனக்கு ராசி சரியா யில்லாததால் தான், சீக்கிரம் சிறையிலிருந்து விடுபட்டு விட்டதாக அவன் எண்ணிக் கொண்டான். அன்ன விசாரம் அதுவே விசாரம். 'கள்ளி யிலும் சோறு, கத்தாழையிலும் சோறு' என்று கதைப் பார்கள் ஊரார். ஆனல், பட்டினி கிடக்கும் சிவலிங்கத் துக்கு மட்டும் பருக்கைச் சோறும் அந்த ஊரில் கிடைக் காமலிருந்து வந்தது.

ஒரு நாளிரவு, ஒரு வீட்டு வாசலில் நின்று, பிச்சைக் காரன் குரலில் "ராப்பிச்சை, தாயே!" என்று கத்தினன். ஆனல், இவன் குரலில் ஒலித்த பரிதாபம் சாதாரணமாய்ப் பிச்சைக்காரன் குரலில் ஒலிப்பதில்லை. ஒரு புண்ணியவதி, கொஞ்சம் சாதம் கொண்டு வந்தாள். அதற்குள், அவள் புருஷன் "இருட்டுலே எங்கேடீ போறே? சிவலிங்கம் வேறே விடுதலையாகி வந்துட்டானும்" என்று அதட்டினன். இது சிவலிங்கம் காதிலும் விழுந்தது. "இந்த வீட்டிலே யும் கூடவா மனுசன் திருடுவான்" என்று அவன் முணு முணுத்தான். அந்த மகாராஜி ஏற்கெனவே பயந்தவள். சிவலிங்கம் முணுமுணுத்ததையும் கேட்டுவிட்டாள். சாதத் தைக் கீழே எறிந்துவிட்டு, திடீரென்று கதவைச் சாத்தித் தாளிட்டுக் கொண்டு உள்ளே சென்ருள். சிவலிங்கம், விதி விட்டபடி வீதிவழியே போனன். அன்றையப் பட்டினி அன்ருேடு முடிந்தது. இப்படி ஊரில் அவன் கியாதி இருந் தால், பகலில் சிவலிங்கம் பிச்சை கேட்டால் என்ன கிடைக்கும்?

மறுநாள் இரவு பத்து மணிக்கு ஒரு கிளப்பில் போய்ப் பிச்சை கேட்டான் சிவலிங்கம். சிவலிங்கத்தின் அதிர்ஷ்டம், பச்சி, வடை கூட மிச்ச மில்லாமல், அந்தக் கிளப்புக்காரனுக்கு அன்று வியாபாரமாகி விட்டது. அவன் "போடா போ" என்று சொன்னான். சிவலிங்கம் கெஞ்சினான். கடையில் ஜலம் மாத்திரந்தான் மிச்ச மிருந்தது. கிளப்புக்காரன் ஒரு டம்ளர் ஜலத்தை எடுத்து வந்தான். சிவலிங்கம் அதைக் குடித்தாவது பசி தீர்க்கலாம் என்று நினைத்தான்.

"போடாங்கறேன், மத்தியானம் முழுக்க முடிச்சவுக்கறது. ராத்திரி பிச்சைக்குக் கிளம்பறது" என்று கிளப்புக்காரன் சொல்லி, தண்ணீரைச் சிவலிங்கத்தின் முகத்தில் வீசினான். திடுக்கிட்டுச் சிவலிங்கம் அந்த அபிஷேக நீரைத் துடைத்துக் கொண்டு அவனை வாழ்த்திச் சென்றான்.

சத்திரத்துத் திண்ணையில் போய்ப் படுத்தான். மழை கொட்ட ஆரம்பித்தது. குளிரினால் வெடவெடத்து, மார்கழி மாதத்தில் நாய் சுருண்டு படுப்பதுபோல் சிவலிங்கமும் சுருண்டு படுத்தான். அன்றையப் பட்டினியும் அப்படி முடிந்தது.

மறுநாள் சிவலிங்கம் பிச்சைக்குப் போகவே இல்லை. ஆற்றங்கரை யுண்டு, அவனுண்டு. ஆற்றுத் தண்ணீருண்டு, இவன் உயிருண்டு. எத்தனை நாளைக்குத்தான் பொறுப்பான்? இனி உயிர் போகவேண்டியதுதான் பாக்கி. ஒழுங்காகச் சோற்று முகத்தில் விழித்துப் பத்து நாளாகி விட்டது.

பள்ளிக்கூடத்து வாசலில் ஒரு ஆறு வயதுப் பெண் நின்றுகொண் டிருந்தாள். கீழே ஒரு செத்த பல்லியை எறும்புகள் கூடி இழுத்துச் சென்றன. அதைக் கண் கொட்டாமல் அந்தக் குழந்தை பார்த்துக்கொண்டே இருந்தது. குனிந்த தலை நிமிரவில்லை. அவள் கழுத்திலிருந்த தங்கச் சங்கிலி, அடிக்கடி பளிச்சுப் பளிச்சென்று மின்னிற்று. சிவலிங்கம் தூரத்திலிருந்து இதைக் கவனித்தான். சங்கிலி பளிச்சென்று மின்னியது. ஜோதி அவன் மூளையில் பாய்ந்தது. மெல்ல மூளை இளகிற்று. சங்கிலியும் காப்பிக் கிளப்புப் போர்டும் மாறி மாறி இவன் கண்களுக்குக் காட்சி யளித்தன.

மைய நெருங்கினன் பக்கத்தில். பின்புறமாகப் போய், குழந்தையின் கழுத்தில் கை வைத்தான். குழந்தை முகம் சடக்கென்று இவன் பக்கம் திரும்பியது. பால் வடியும் அந்த முகத்தில் வியர்வை வடிவதைக் கண்டான்.

வியர்வையைத் துடைத்துக் கொண்டாள் ருக்மணி. "மாமா இந்தோ பாத்தியா! அதை எங்கே மாமா இழுத்துண்டு போறது எறும்பெல்லாம்!" என்று மழலைச் சொல்லால் கேட்டது குழந்தை. சிவலிங்கம் கையை எடுத்தான். குழந்தையை ஏற இறங்கப் பார்த்தான். அந்தச் செத்த பல்லியையும் பார்த்தான். "எறும்புப் பொந்துக்கு" என்று பதிலும் கூறினன்.

ருக்: ஏதுக்காக மாமா?

சிவ: எறும்புக்குப் பசிக்கிறது; அதுக்காகத்தான்.

ருக்: பசிச்சா?

சிவ: இந்தப் பல்லியைக் கொண்டுபோய் அங்கே வச்சிண்டு திங்கும்.

ருக்: ஐயய்யோ? பல்லியைத் திங்கறதா? ஏன் மாமா? இந்த எறும்புக் குட்டிக் கெல்லாம், அவா அம்மா சாதம் போட மாட்டாளோ?

சிவலிங்கம் பதில் சொல்ல முடியாமல் விழித்தான். பேச்சை வேறு வழியில் திருப்பினன். "உன் பேர் என்ன பாப்பா?" என்று கேட்டான்.

ருக்: நான் பாப்பா இல்லே மாமா. எங்க அங்கச்சி தான் பாப்பா. நான்....னு மிந்தி....பாப்பாவா இருந்தேன். அப்பறம் இப்ப உக்குமணி யாயிட்டேன். இப்போ என் பேர் என்ன தெரியுமா? உக்குமணி.

தனக்கு அந்தப் பெயருடன் ஒரு மகள் இருந்து இறந்தது சிவலிங்கத்துக்கு ஞாபகம் வந்தது.

சிவ: உக்குமணி.......மிட்டாய் வாங்கித்தரேன் என் கூட வரியா?

ருக்: ஹூம் ஹூம், மிட்டாய் தின்ன இரும்பல் வந்துடும். எங்காத்திலே சாக்கலேட்டு இருக்கே—மாமா என்னை ஆத்துக்குக் கொண்டுபோய் விடுறியா மாமா—என்று கெஞ்சி, தலையைத் தூக்கி அவன் முகத்தைப் பார்த்தாள். கொடி போன்ற அவளது பிஞ்சு விரல்கள் சிவலிங்கத்தின் கையைப் பற்றின. அந்த மாதிரி ஒரு

குழந்தையின் விரலைப் பிடித்து எவ்வளவு நாளாகிவிட்டது சிவலிங்கத்துக்கு!

பள்ளிக்கூடத்திலே மணியடிக்கும் சத்தம் கேட்டது. "தூக்கிக்கோ மாமா, பள்ளிக்கூடங்கூட விட்டுட்டா மாமா. எங்கக்கா வர்ரத்துக்குள்ளே என்னே ஆத்திலே முன்னுலே கொண்டுபோய் விட்டுடு மாமா" என்றது குழந்தை.

சிவலிங்கம் தூக்கினன். தோள்மீது வைத்துக்கொண்டான். சந்துகளில் புகுந்து நடக்க ஆரம்பித்தான். "என் காலைப் பாரு மாமா! உவ்வா....சுட்டுப்பிடுத்து" என்று ருக்மணி சொன்னுள். பாதத்தைத் தொட்டுப் பார்த்தான். நல்ல செந்தாமரையின் இதழ்போலிருந்தது கால். மனது என்னவெல்லாமோ நினைத்தது. பசி எல்லாவற்றையும் மறைத்தது. இரண்டே எட்டில் ஆற்றங்கரைக்கு வந்து சேர்ந்தான். ஈச்சஞ் செடிகளுக்கு மத்தியில் நுணமரத்து நிழலில் குழந்தையை இறக்கி உட்காரவைத்தான்.

ருக்: ஏன் மாமா—ஆத்துக்குக் கூட்டிண்டு போறேன்னுட்டு—ஆத்தங்கரைக்குக் கூட்டிண்டு வந்துட்டியே?—என்று சிரித்தாள் குழந்தை. சிவலிங்கத்துக்குத் தூக்கி வாரிப்போட்டது. "கொஞ்ச நேரம் பொறுத்துப் போகலாம் அம்மா" என்று சொல்லி, அவள் கழுத்துச் சங்கிலியில் கையை வைத்தான்.

ருக்: குளுச்சுட்டுத்தானே போகணும். அதுக்காகத் தானே மாமா சங்கிலியேக் கயட்டறே?

சிவ: ஆமாம்.

ருக்: இந்த லோலக்கையும் கயட்டிடு. இதுலே ஜலம் படப்படாதுனு அம்மா சொல்லுவா மாமா. நான் சட்டையைக் கயட்டறேன். குளுச்சுட்டு ஆத்துக்குப் போவம். நான் ஆத்திலே குளிச்சு ரொம்ப நாளாச்சு மாமா—என்று கூறிவிட்டு, லோலக்கைக் கழற்றி அவன் கையில் போட்டாள் ருக்கு.

சிவலிங்கத்தின் ஹிருதயத்தில் குழந்தையின் களங்கமற்ற பேச்சுகள் குழப்பத்தை யுண்டாக்கின. ஆயினும், வயிற்றுக் குழப்பம் ஹிருதயத்தைக் கலகலக்கச் செய்தது. நகைகளைக் கையில் எடுத்தான். கீழே கிடந்த ஒரு குச்சியால் ஈச்சஞ் செடியின் அடியில் ஒரு குழி தோண்டினன். ருக்மணி எழுந்து அவனது முதுகுப் பக்கத்தில் வந்து

நின்று அவன் குழி தோண்டுவதைக் கவனித்தாள். அந்தக் குழியிலிருந்து சில எறும்புகள் வெளியே வந்தன. "ஏம் மாமா! குழி தோண்டறே?" என்றாள் ருக்மணி.

சிவ: அதுதான் பாத்தியெ அம்மா. இந்த எறும் பெல்லாம் வெளியிலே வரவேண்டாமோ?

ருக்: ஏன் மாமா, இத்தன்னாழி அந்தப் பல்லியே எறும்பெல்லாம் தின்னிருக்குமா மாமா?

வேலை மும்முரத்தில் ஈடுபட்டிருந்த சிவலிங்கம்—"ஹூம்—தின்னிருக்கும்" என்றான்.

ருக்: இந்தப் பல்லி திருப்பி இந்த எறும்பை எல்லாம் முழுங்கிப்பிடாதா?

சிவ: பல்லி செத்துப் போச்சம்மா. உசிரோடே யிருந்தா முழுங்கிப்பிடும்.

ருக்: செத்துப்போச்சா? அப்படின்னா?

சிவ: செத்துப்போச்சு தான்.

ருக்: அந்த எறும்போடே சண்டை பிடிக்க பெல மில்லேன்னு தானே அர்த்தம்?

சிறிது நேரங்கழித்து "ஆமாம்" என்றான் சிவலிங்கம். சட்டையைக் கழற்றிக் கீழே போட்டாள் ருக்மணி.—குழியி லுள்ள மண்ணை வெளியே எடுத்தெறிந்தான் சிவலிங்க மும்.

ருக்: பல்லிக்குப் பெலமில்லே............எறும்பெல்லாம் அதைத் தின்னுப்பிடும்—நேக்குக்கூடப் பெலமில்லாட்டா அப்படித்தானே மாமா?

இவளது ஒவ்வொரு வார்த்தையும் சிவலிங்கத்தின் துஷ்ட ஹிருதயத்தில் ஆயிரம் சவுக்குகளைக் கொண்டு அடிப்பதுபோ லிருந்தது.

அசட்டுச் சிரிப்புச் சிரித்துக்கொண்டே........"என்ன சொன்னே? நேக்குக்கூடப் பெலமில்லாட்டா............... அப்படீன்னு தானே அம்மா சொன்னே?" என்றான்.

ருக்: ஆமாம்! நேக்குப் பெலமிருக்கு மாமா. எங்கிட் டச் சண்டைக்கு வந்தா இந்த எறும்பெல்லாம் புடிச்சு அப் படியே நசுக்கிடுவேன்.

இந்த வார்த்தைகள் சிவலிங்கத்தின் செவிகளில் நன் ருய் விழவில்லை. அவன் உணர்ச்சியற்ற ஒரு மனித யந்தி ரம்போல் வேலையைச் செய்துகொண் டிருந்தான்.

ருக்: நாழியாச்சு—சுருக்கக் குளிச்சுட்டு ஆத்துக்குப் போகலாம், மாமா.

அந்தக் கையாலாகாத குழந்தையின் கழுத்திலிருக்கும் நகையைத் திருடுவதும் எறும்புகள் செத்த பல்லியை இழுத்துப் போவதும் ஒரே ரகத்தைச் சேர்ந்ததுதான் என்று சிவலிங்கத்துக்குத் தோன்றிற்று. பகுத்தறிவுள்ள மனித ஜன்மமாகிய தான் கேவலம் புழுக்களுக்குச் சமமான காரியத்தைச் செய்யவேண்டி யிருக்கிறதே என்று மனங் கலங்கினன். குழந்தையின் முகத்தைத் திரும்பிப் பார்க்க மறுத்தது மனது. வயிற்றில் குத்திக் குடைந்தது பசி.

"நான் குளிக்கவா, மாமா?" என்று மீண்டும் குழந்தை கேட்டது. சிவலிங்கம் "உஹூம்" என்று பதிலளித்தான்.

சிவலிங்கத்தின் கைகள் தாமாகவே குழியிலிருந்த மண்ணை மெதுவாக வெளியே எடுத்தன. அந்த நகைகளை அந்தக் குழியில் வைத்தான். ஏதோ மூளை வலிப்பதுபோல் தோன்றிற்று. மீண்டும் அதைக் கையிலெடுத்துக்கொண்டு மண்ணைப் பரபரவென்று குழியில் தள்ளினன்.

"அய்யோ! மாமா மாமா" என்று ஆற்றிலிருந்து தீனமான குரல் கேட்டது. சிவலிங்கம் திரும்பினன். முரட்டுத்தனமான ஒரு சுழல் அந்தப் பச்சிளங் குழந்தையைத் திருகிச் செருகுவதைக் கண்டு திடுக்கிட்டான்.

"அய்யய்யோ! ருக்குப் பாப்பா தண்ணீலே ஏன் இறங்கினே!" என்று கூவிக்கொண்டே ஒரே தாவாக ஆற்றில் குதித்தான்.

ஒரு பர்லாங்கு தள்ளிச் சென்று குழந்தையுடன் கரையேறினன். ருக்குவைக் கீழே படுக்கப்போட்டு முகத்தோடு முகம் வைத்து உற்றுக் கேட்டான். மூச்சுச் சத்தம் கேட்கவில்லை. குழந்தையை இரு கைகளாலும் தலைக்குமேல் தூக்கிக்கொண்டு ராட்டினம் சுற்றுவதுபோல் சுற்றினன். பொட்டு ஜலம்கூட வரவில்லை. குழந்தையை அப்படியே போட்டுவிட்டுப் போய்விடலாமா என்று நினைத்தான். அந்தக் குழந்தையின் புத்திசாலித்தனமான பேச்சுகளும், களங்கமற்ற ஹிருதயமும் தான் பெற்றிழந்த ஒரு பெண் குழந்தையின் ஞாபகமும் அப்படிச் செய்ய அவனுக் கிடந்தரவில்லை. தான் திருடன் என்பதை அறவே மறந்தான்.

தோளில் ருக்மணியைப் போட்டுக்கொண்டு வந்த வழியே ஊரை நோக்கி ஓடினன்.

தக்கென்று நின்ருன். "நேக்குக்கூட பலமில்லாட்டா அப்பிடித்தானே" என்று குழந்தையின் குரல் கேட்டது. முகத்தை நிமிர்த்திப் பார்த்தான். பிரக்ஞை யில்லாத தலை துவண்டு கொண்டிருந்தது. குழந்தைதாளு பேசியது அல்லது மனப்பிராந்தியா தெரியவில்லை. மறுபடியும் ஓடினன். "அந்தப் பல்லி செத்துப் போச்சா?" என்று மீண்டும் அதே குரல் கேட்டது. மறுபடியும் நின்ருன். குழந்தையின் உடலைத் தொட்டுப் பார்த்தான். ஜில்லென்றிருந்தது. ருக்மணியைத் தான் கொன்றுவிட்டதாகவே எண்ணினன். அவன் கண்களில் தூக்குமரமும் குழந்தையின் முகமும் மாறிமாறித் தோன்றின. ஓட்டமா யோடினன். ஆஸ்பத்திரி வாசலில் வந்து நின்ருன். வெளியே காவலாளி நின்றுகொண் டிருந்தான்.

சிவ: கதவைத் திற. உள்ளே போகணும் ஐயா!

காவல்காரன்: விட மாட்டேன். ஆர்டரில்லை. கால் மணி நேரம் கழித்து வா.

சிவ: முடியாது. இப்பவே டாக்டரைப் பார்க்கணும். ஒரு உசிரு ஆபத்திலே இருக்கய்யா. விடய்யா. (காவல்காரன் காதில் வாங்காதவன் போல் நின்ருன்.)

சிவலிங்கம் இரும்புக் கம்பியின் வேலியின்மேல் கால் வைத்துத் தோள்மேல் குழந்தையைப் போட்டபடி ஏறினன். காவல்காரன் பிரமித்துப்போய்க் கூச்சலிட்டான். ஏதோ இரைச்சலுண்டானதும் போலீஸ்காரனின் ஊது குழல் கேட்டது.

"என்னடா! புது வேலை ஒண்ணு பண்ணிப்பிட்டே போலிருக்கே" என்று கூறியபடி, சிவலிங்கத்தின் இடது கையை நறுக்கென்று பிடித்தான் 711-ம் நம்பர் கான்ஸ்டபிள் ராமானுஜலு.

சிவலிங்கம்: "நான் உங்க கைதிதானுங்கோ. முதல்லே குழந்தையை டாக்டரிடம் கொண்டுபோய்ப் பார்ப்பம்" என்று தோளைத் தொட்டுக் காட்டினன்.

"அடச் சீ! மஹா யோக்கியன் மகன்! நான் ஸென்ஸ்" என்று சொல்லிக் குழந்தையைப் பறித்து அருகிலிருந்த 111 இடம் கொடுத்தான் இராமானுஜலு.

சிவலிங்கம் குழந்தையிடம் தாவினன். 711 முன் செல்தாக் கொடுத்தான். ருக்குவின் சிவந்த காலில் ஒரு முத்தமிட்டான். மறுபடியும் முத்தமிட்டான். "ருக்கு ருக்கூ ருக்கூ" என்று அடியற்ற மரம்போல் கீழே சாய்ந்தான்.

சிவ: அய்யா! தள்ளாதேய்யா. குழந்தைக்கு உசிரு இருக்கா இல்லியானு பார்த்துட்டு ஸ்டேஷனுக்குப் போவோம் அய்யா.

711: உன் கையிலே அம்பிட்ட பிறகு, உசிரு இருக்குமாடா அதுக்கு?

இதற்குள் 111 சிவலிங்கத்தின் கைகளில் துணியை முறுக்கி விலங்கு போட்டுவிட்டான். லாக்-அப்புக்கு யாத்திரை ஆரம்பித்துவிட்டது.

சிவலிங்கத்தின் அஸ்தியில் ஜுரம் கண்டுவிட்டது. ஒரு பக்கம் அன்புக்கு இலக்கான குழந்தை, மறு பக்கம் தூக்குத் தண்டனை! 'ஹோ' வென்றலறினன்.

சாயங்காலம் ஐந்து மணிக்கு டாக்டர் ராமன் அவர்களின் கார் என் வீட்டு வாசலில் வந்து நின்றது. அந்த மோட்டார் ஊதுகுழலைக் கேட்ட வுடனேயே பேனவில் நிறையமை யடைத்துக்கொள்ள ஆரம்பித்தேன். அவர் தொழிலில் ஏதாவது ஆச்சரியங்கள் நிகழ்ந்தால், உடனே என்னிடம் ஓடிவந்து சொல்லாவிட்டால் அவர் தலை வெடித்துப் போகும்.

மாடிப்படியில் பூட்ஸ் சத்தம் கேட்டது. "வாங்கோ வாங்கோ" என்று கூறினேன். வந்து உட்கார்ந்தார்.

ராம: என்ன சார், சுப்பிரமணியம்!

நான்: சமாசாரத்தைச் சொல்லுங்கள்.

ராம: என்ன ஸார் சொல்றது, நம்ம ராம்னுத் இருக்காரே பாரிஸ்டர்.

நான்: ஆமா.

ராம: அவர் வீட்டுக்கு டிரீட்மெண்டுக்குப் போனேன் சார். அந்த மனுஷன் அப்படியே பாவம் ஹோன்னு அலறுகிருர். மிஸஸ் ராமநாதனுக்கு மூஞ்சியெல்லாம் அதைச்சுப்போச்சு பாவம். அந்த அம்மாளுக்கு T. B. கம்ப்ளெயிண்ட் வேறே.

நான்: ஏன்? என்ன விசேஷம்! யாருக்கு டிரீட்மெண்ட்?

ராம: அவர் டாட்டரில்லே அந்தச் சின்ன கேர்ல்.

நான்: ஆமா, ருக்மணி அதுக்கா?

ராம: அதைத்தான் ஸார். சமீபத்திலே ரிலீஸா ஞன் பாருங்கோ சிவலிங்கம், அண்ணுப்பட்டிப் பேர்வழி. அவன் குழந்தையைத் தூக்கிக்கிண்டு போய் நகையெல் லாத்தையும் கழட்டிக்கிண்டு ஆத்திலே குழந்தையையும் எறிஞ்சுட்டாஞம். அப்பறம் கான்ஸ்டபில்ஸ் அவனைக் கையும் களவுமா பிடிச்சு அவனை அரஸ்டு பண்ணிருக்கா! குழந்தையை அவா வீட்டிலே ஒப்பிச்சுப்பிட்டா.

நான்: குழந்தை புழைச்சுடுமா?

டாக்டர்: புழைச்சுடும். டிலிரியத்திலே, "மாமா, என்னை ஆத்துக்குத் தூக்கிண்டு போறியா?" என்று புலம் பறது. அதைப் பத்தி ஒண்ணுமில்லே. ஒரு இஞ்சக்ஷன் குடுத்திருக்கேன். ராத்ரிலே எழுந்திருந்துடுவள். ஆனலும், அந்தச் சிவலிங்கம்தான் தீர்ந்து போயிடுவான் போலிருக்கு.

நான்: அவனுக்கென்ன வந்தது?

ராம: அதுதான் சார் ஆச்சரியமாயிருக்கு. ஜெயி லுக்கும் சர்ஜனுக இப்ப நாந்தானே அட்டெண்ட் பண் றேன் தெரியுமோல்லியோ.

நான்: அதுதான் அன்றைக்கே சொன்னேளே.

ராம: ஆமா சொன்னேனு. ஈவினிங் அங்கே போயிருந்தேன். அந்தக் கேடிக்குத் தன் நினைவே யில்லை. ஜன்னி பொறந்திருக்கு. அநேகமா நைட்கூடத் தாண்ட றது சிரமம் போலிருக்கு.

நான்: ஒரு பாவி தொலைந்தான்.

ராம: பாவியாவது மண்ணுவது சார்! இந்த ஹோப்லஸ் நிலைமையிலே அவன் அடிக்கடி "ருக்கு ருக்கு!" என்று கத்தருன். ராமனுதனைவிடப் பரிதாபமா யிருக்கு அவன் கத்தறதெக் கேக்கறபோது.

சிவலிங்கத்திடம் மறுநாள் டாக்டர் ராமன் ஒரு டிக்ள ரேஷன் வாங்கினர். அந்த டிக்ளரேஷனில் சொன்ன விவரங்களையும், குழந்தை அந்த மாமாவைப் பற்றியே படுக்கையில் பிதற்றியதையும் கேட்டபோது, சிவலிங்கம் இந்தத் தடவை நிரபராதி என்பது புரிந்தது.

ஆனல், அவன்தான் நேற்று இறந்துவிட்டானமே. இனிமேல் அவனைப்பற்றி யார் கவலைப்படப் போகிருர்கள்?

# கமல மங்கல்யம்

நீ இ இ இ கே ஏ ஏ த கூ உ உ ரா

நீ இ ர அ அ ஜா அ க்ஷா அ அ அ அ அ அ (நீ)

என்ற காம்போதி வர்ணத்தின் நாதத்திலே மிதக்கும் அன்னம்போல, ஒரு மடமயில் அந்தக் கானத்திற்கிசைய நர்த்தனம் செய்துகொண் டிருக்கிறாள்.

'கோவிந்தா', 'கோவிந்தா' என்ற பக்தர்களின் ஆரவாரம் ஒருபுறம். ஏழு ரூபாயையும் கொடுத்துவிட்டு, வேங்கடேசன் தரிசனத்துக்கு டிக்கெட் வாங்கக் காத்திருப்போரின் கூக்குரல் இன்னொரு புறம். இத்தனைக்கும் நடுவிலே, அந்த நாட்டியக் கச்சேரியும் வெகு அமரிக்கையாகவே பிரான் சன்னதியில் நடந்துகொண் டிருந்தது.

நட்டுவனார் தமக்குத் தெரிந்த ஜதி வரிசைகளை யெல்லாம் கொட்டி முழக்குகிறார். பார்த்த கண்கள் பார்த்தபடியே அந்த மின்னல் கொடியின் எழிலை அள்ளிப் பருகிக் கொண்டிருக்கிறான் சங்கீத வித்வான் சந்தானம். 'நாம் முதலில் கச்சேரி செய்துவிட்டோமே. நமக்குப் பின் கமலம் கச்சேரி செய்வதால், நமது பெயர் மங்கிவிடுமோ?' என்ற கவலை அவனுக்கு உண்டாகவில்லை. சில சமயங்களில் மட்டும் 'சீ! சீ!! இந்த உடம்பைப் போட்டு இப்படி வாட்டினால் உடம்பு என்னத்துக்கு ஆகும்?' என்று மாத்திரம் அவன் முணுமுணுத்துக்கொண்டான்.

* * * *

கமலம் பொங்கணத்தூர் ஜமீன்தார் பெரிய மைனரின் குமாரி. ஆனாலும், பட்டத்து முத்தம்மை நாச்சியாயி வயிற்றில் பிறவாமல், ஆசை நாயகி பொன்னியோகுவுக்குப் பிறந்தவள். ஜமீன்தார் உயிருடனிருக்கும் வரையில் தாசி பொன்னுவின் வாழ்க்கையிலும் பெருமை நிறைந்திருந்தது. அவர் உயிரை அந்தகன் பற்றிச் சென்ற நிமிஷமே அவள்

வாழ்வைக் கலியன் பற்றிக்கொண்டான். அவர் பிரேதம் அரண்மனையை விட்டு வெளியேற்றப்படு முன்னேயே பொன்னுவையும் கமலத்தையும் வெளியே விரட்டிவிட்டார்கள். அப்பொழுது கமலத்துக்கு எட்டு வயது.

பொன்னுவின் குடும்பக் காலட்சேபம் மிகவும் சிரமத்தில் நடந்தது. எவ்விதத்திலேனும் கமலத்தை உருவாக்கி விட வேண்டுமென்று அவள் பட்டபாடு அனந்தம். நகையை விற்றும், புடைவையை விற்றும், நிலைக்கண்ணாடியை விற்றும் குழந்தைக்கு ஒரு குறையு மின்றிக் காப்பாற்றினாள். மீதமிருந்த தன் சரீரத்தையும் சுப்பிரமணிய நட்டுவனுக்கு விற்று, அவனைக் கொண்டு கமலத்துக்குப் பரத நாட்டியம் கற்றுக் கொடுத்தாள். இது மாத்திரமா? ஆஸ்தானத் தமிழ்ப் பண்டிதருக்கும் அதே காணிக்கையைச் செலுத்தி, தன் செல்வக் கமலத்துக்குத் தமிழ் இலக்கிய ஞானமும் புகட்டச் செய்தாள். கமலம், சிறு வயதிலேயே வயதுக்கு மீறிய ஞானமும், வாக்குச் சாதுர்யமும் பெற்று விளங்கினாள். வெடுக்கு வெடுக்கென்ற அவளுடைய துடிப்பான பேச்சு, சிலரிடம் அதிகப்பிரசங்கி என்ற பட்டத்தைக்கூட அவளுக்கு வாங்கித் தந்துவிட்டது. இவ்வளவு கஷ்டத்தையும் சகித்துக்கொண்டு சிரித்த முகத்துடன் பொன்னி விளங்கியதன் காரணம் என்ன?

அவள் கற்பனையில் கமலம் ஒரு பொன் பழுக்கும் செடி. அது பருவமடையும் வரை அதை ஒழுங்காகப் புஷ்டியுள்ளதாக வளர்த்துவிட வேண்டுமென்பது அவள் எண்ணம்.

கமலத்துக்குப் பதினைந்து வயது ஆயிற்று. பரதநாட்டிய வித்தையில் கைதேர்ந்தாள். அவள் சாரீரத்தில் ஓர் இனிமை உண்டானதையும், சரீரத்திலே திடீரென்று வனப்பு அதிகரித்ததையும், அவளது வாள்வீச்சுக் கண்வெட்டுகளையும் கவனித்தாள் பொன்னு. மகள் தோட்டத்துப் புஷ்பங்களில் ஒன்றுகூடப் பாக்கி விடாமல் பறித்து அடிக்கடி அலங்காரஞ் செய்துகொள்வதையும், கண்ணாடிக்கு முன் நின்று தன்னழகைத் தானே பார்த்துப் பார்த்துப் பருகுவதையும், விதவிதமான சோப்புகளைப் பூசுவதையும், பஞ்சும் கையும், பவுடருமாய்த் திரிவதையும், ஆண்பிள்ளைகளைக் கண்டபோதெல்லாம் வெட்கம் பிடுங்கித் தின்பதுபோல் பிலுக்கி ஓடி மறைவில் நின்று எட்டி

எட்டிப் பார்ப்பதையும் கண்டு குறிப்பாக உணர்ந்தாள் தாய். எட்டு வருஷங்களாக இளைத்த அவள் உடம்பு பத்து நாளில் பூரித்துவிட்டது. கமலத்தின் பாட்டும் ஆட்டமும் கண்ட வாலிபர்கள் சொக்குவதைக் கண்டு பொன்னு மகிழ்ந்தாள்.

அவர்கள் வழக்கப்படி விளம்பரத்தையும் செய்ய நினைத்தாள். நாள் பார்த்துப் பொட்டுக் கட்டினார்கள். சாதாரணக் கமலம் ஸ்வாமி மலை சாமிநாதன் சன்னதியில் தாசிக் கமலமானாள்.

அங்கிருந்தபடியே திருப்பதிக்குப் பிரயாணக் காரியங்கள் ஜரூராக நடந்தன. இரண்டு அணுவுக்கு உப்பு வாங்க இரண்டு நாள் யோஜித்த காலமும் உண்டு. அதற்கு இரண்டு பேரிடம் கடன் வாங்கியும் வெகு நாளாகவில்லை. இப்பொழுதோ கேட்பதற்கு முன்னே நோட்டு நோட்டாய்க் கொடுக்க எத்தனையோ மைனர்கள் சுற்றிக்கொண்டு திரிகிறார்கள்.

கமலம் என்னும் கோழிக்குஞ்சைப் பற்றிக்கொண்டு போக எத்தனையோ பருந்துகள் சுற்றிச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருக்கையில், பருந்தின்மேல் ஏறும் பரந்தாமன் கோவிலில் அரங்கேற்றுவதற்காக (அவன் கிருபையைப் பெறுவதற்காக)த் திருப்பதி போய்ச் சேர்ந்தார்கள்.

மலைமேல் டோலியில் ஏறிச் செல்லும்போது, "இது என்னம்மா சனியன்! அப்படியும் இப்படியுமா ஆடுதே. நேக்குப் பயமாக இருக்கம்மா" என்று சொல்லி, டோலியின் இருபுறக் கயிறுகளையும் இறுகப் பிடித்துக்கொண்டாள் கமலம்.

பொ: என்ன? பயமாவா இருக்கு....உம்....இப்ப இது பயமாத்தான் இருக்கும், நாளைக்கு....என்று மேலே சொல்லாமல் முதுகுப் புறம் திரும்பிச் சிரித்துக்கொண்டாள்.

கம: என்னம்மா நாளைக்கி? நாளைக்கி வேறே எங்கே யாவது மலைமேலே சவாரி இருக்கோ?

பொ: (சிரிப்புடன்) இல்லை, குஞ்சு! நாளைக்கு ஸ்பிரிங் கட்டிலிலே நீயும் மாப்ளையுமா உட்கார்ந்திருக்கிறப்போ இந்த ஏழுமலையாங் கோவிலுக்கு வந்துட்டுப்போன நோவெல்லாம் மறந்து போயிடும்னு சொன்னேன் என்று

கூறிக் கமலத்தின் கன்னங்களில் கையை வைத்து இரண்டு சொடுக்குச் சொடுக்கித் திருஷ்டி கழித்தாள் தாய்.

தனக்குப் பொட்டுக் கட்டினது முதல் தன் வாழ் நாளில் தன்னால் தாங்க முடியாத ஒரு பாரத்தை, சமூக வழக்கம் கட்டிவிட்டதாக வருந்தினாள் கமலம்.

தாய் இப்படிச் சொன்னவுடன் குறும்பாக, "அப்ப நம்ப வீட்டு வாசல்லே ஏரோப்ளேன் வந்து குதிக்கும்" என்று சொல்லி, திரும்பிச் சிடுசிடுத்துக் கொண்டாள் கமலம்.

பொ: அது ஏண்டி அம்மா?

கம: ஏன? ஸ்வாமி மலையிலே இருந்து மாப்ளெ வர வேண்டாமோ?

பொ: உம். நீ அம்புட்டுப் படிச்சுக்கிட்டியானா ஏன் வரமாட்டாரு? நல்லா வருவாரு. அவர் இல்லாமலா நாம்ப இருக்கம்?

இந்தச் சமாதானம் கமலத்துக்குத் திருப்தி யளிக்க வில்லை. தெய்வத்தையும்கூடத் தன் தாய் ஏமாற்ற நினைப்பது கமலத்துக்கு மிக வெறுப்பாக, கேவலமாக இருந்தது. "அவர்தான் எனக்குப் புருஷன்னு பொட்டுக் கட்டியாச்சே. இனிமேல், உன் பெண் மாப்பிள்ளையோடே யாவது அல்லது மாப்பிள்ளை பெண்ணோடேயாவது இருக்க வேண்டியதுதானே ஞாயம்?" என்று அவள் வினவினாள்.

தாய்: நான் ஒண்ணு சொன்ன, நீ என்னமோ ஞாயம் பேசறியே?

கம: அம்மா, இது நல்ல வழக்கமம்மா! கல்லெக் காட்டிக் கழுத்திலே கட்டறது; ஆனாலும், ஆயிரம்பேர் வருவா போவா; எப்படி இருந்தாலும் வீட்டுக்காரர் அவர் தான்! ஏன், அம்மா! இதை யாரம்மா கண்டு பிடிச்சா? அவா ரொம்பக் கெட்டிக்காரா யில்லே?

பொ: உ....உ....உம் மனசு....எனக்குத் தெரியாது? தாசிக்கு மகளாப் பொறந்துட்டுத் தர்ம பத்தினியா வாழனும்னு முடியுமோ? நம்ம தர்மத்தை நாம்ப நழுவாமே நடத்திக்கிட்டு வந்தாப் போதும்.

கமலம்: அப்படிச் சொல்லு அம்மா. நிஜமா இது தாம்மா நல்ல தர்மம்! எனக்கு இதை நினைக்கிறபோது

என்ன கர்வம் தெரியுமோ? ரொம்பப் பெருமையா யிருக்கு!

தாய்: எதை?

கம: எதையா? இண்ணைக்கோடு நம்ம குலம் அழிஞ்சு போனாலும் நம்ம குலக் கதை இன்னும் இருபதினாயிரம் வருஷத்துக்கு அழியாமலிருக்குமோல்யோ, அதைத் தான்.

பொ: ஆமா, இண்ணைக்கு இம்புட்டுப் பேச்சுப் பேசுறியே, ஒரு தாசி புது வழியை ஆரம்பிச்சுக் கடேசி வரையிலே பத்தினியா வாழ்க்கை நடத்திப் பிட்டாலும் அவளுக்குன்னு தனியா ஒரு கௌரவம் வந்துடுமா, பொறந்த பேரு போயிடுமாங்கறேன்? தாசி மகள் தாசி தானே?

கம: ஆமா, அது நிஜந்தான். பதிவிரதையாய் வாழ்ந் தாலும் அவள் பதிவிரதை யென்று பேரடையப் போற தில்லை. நாம்தான் நேத்துவரையில் அப்படிக் காரியங்கள் செஞ்சு வரல்லையே. இந்தப் பழக்கங்களை விட்டு நம்மிலே ஒருத்தி லேசிலே தப்ப முடியாதே—என்று சொல்லிவிட்டு, —திருடன் திடீரென்று யோக்யனாகி விட்டாலும், அவனை உடனே உலகம் நம்புமா?—என்று மனதில் நினைத்துக் கொண்டாள்.

பொ: என்னடீ நாம்ப செஞ்சுப்பிட்டோம்? குஞ்சு! இதுக்குன்னு நாலு ஆம்பிளை நம்மைத் தேடி ஓடி வராட்டா, நாம் ஏண்டி தாசிகள்னு இருக்கப்போறோம்?

கம: அம்மா, ஆணைப் பத்தி நீ சொல்லாதே. பிசகோ சரியோ நம்ம தொழிலை நாம்ப செய்யறோம். இதுதானே உன் முடிவு?

பொ: அதென்ன நான் சொன்னா மட்டும் ஒனக்கு முணுக்கின்னு கோபம் வருதே. அவங்க குத்தம் பண்ண லாம், அதை நான் சொல்லப்பிடாதோ?

கம: அது குத்தமில்லை என்று சொல்லலை யம்மா, முதல்லே நாம் குத்தம் செய்றதை நிறுத்துவோம். பிறகு அவங்க அம்மாதிரி செய்தால் அதுக்குத் தகுந்த மரி யாதையை நடத்துவோம்—தானாகவே அவங்க....

பொ: இந்தா குஞ்சு, நீ இன்னும் மூளச்சு மூணு இலை கொள்ளலே. உனக்கு உலகத்திலே எதைப் பார்த் தாலும் எல்லாம் புதுசு புதுசா யிருக்கு.

கம: ஆமாம்மா. என் ரத்தத்திலே இன்னும் இதெல்லாம் ஊறலேம்மா.

பொ: அடியே, குறுக்கே பேசாதே. கேளு. நூத்தோடே நூத்தி ஒண்ணு, அத்தோடே நாமும் ஒண்ணுன்னு போக வேண்டிதுதான்.

கம: இப்படியே போயிண்டிருந்தால் எப்பதானம்மா இந்த விபசாரத்துக்கு முடிவு?

பொ: அதுவா? ஆம்பிளேங்களெல்லாம் விபசாரம் பண்றதில்லேன்னு நிறுத்தற போதுதான்.

கம: ஓஹோ! ஆம்பிளேகள் நிறுத்தணுமோ? நியாயந்தான். பலாப் பழத்தெ மூடி வைக்கவும் மாட்டேன், ஈயும் வரப்படாதுன்னு எப்படியம்மா வராமெ யிருக்கும்? இதைக் கேளு. ஒரு பொம்மை, கடையிலே இருக்கிற வரையிலே எல்லாருந்தான் போய்க் கேழ்ப்பா. பொது இடத்திலே கொண்டு போய் ஸ்தாபிச்சுப்புட்டா சுத்தி நிற்கிற கும்பலுக்குக் கணக்கே யில்லே. எங்கே, யாராவது அதை வாங்கிண்டு போய் வீட்டில் வைக்கட்டும். முந்தி யெல்லாம் சுத்திக்கொண்டே யிருந்தவன் எவனாவது அந்த வீட்டு வாசப் பக்கம் போறானு பார்ப்போம்.

பொ: ஆமாடீ, ஆமா. கிறுக்குத்தனமா ஒளறுதே. அப்படி ஒன்னேயும் ஒத்தங் கையிலே பிடிச்சுக் கொடுக்கணும்னு ஒன் தலேயிலெழுதி யிருந்தால், நீ என் வயத்திலே ஏன் பொறக்கிறே?

கம: போம்மா, ஒன் வயத்திலெ பொறந்தது பாவமா?

பொ: பாவம்னு நெனச்சாப் பாவந்தான்; திண்டாட வேண்டியதுதான். புண்ணியம்னு நெனச்சுப் பொறந்த இடத்துக்குத் தகுந்தாப்புலெ நடந்தா, குச்சு வீட்டெ மச்சு வீடாக் கட்டலாம். நாலு தேவிடியாளேப் போலே நாமும் பணங் காசோடே யிருக்கலாம். காசு சேந்தாக் கௌரவம் தானே சேருது.

கம: ஆஹா! இல்லியோ நல்ல வழியிலே யில்லேயா பணம் சேருது?

பொ: ஏண்டி, அதிருக்கட்டும். வேப்பெண்ணெய் வித்த காசு கசக்குமாடி? அந்தக் குதிரை வண்டிக்காரங் கிட்ட வாடகை போகக் கால் ரூபா வாங்கினியே........

கம: ஆமா. நிக்கல் காலணு, இதோ யிருக்குதே.

பொ: அந்தக் காசு நரச்சிருக்கோ பாருடீ. பஞ்சுத் தலைக் கிழவன் கொடுத்த பணம்டீ, பாரு—என்று சிரித்தாள்.

இதற்கு மேலும் தாயுடன் பேசுவதில் பிரயோஜன மில்லை யென்றறிந்த கமலம் "அம்மா, டோலிக்காரன் கவனிக்கிறான் பேச்சை" என்று நாசுக்காய் எச்சரித்தாள்.

பொ: சரி, நீ கீழே யிறங்கு. கோவில் வந்துடுத்து. 'ஸ்வாமி வேங்கடாஜலபதி! இனிமேல் என்னை எப்பொழுதும் நாலு பிரபுக்கள் கவனித்துக் கொண்டே யிருக்கணும்'னு சொல்லி, கன்னத்தில் போட்டுக்கோ என்று சிரித்துக் கொண்டே சொன்னாள்.

* * * *

டோலியில் இருந்து இருவரும் கீழிறங்கிச் சென்றார்கள்.

நட்டுவனார், முன்பே சென்று, தேங்காய் பழங்களெல்லாம் வாங்கி வைத்திருந்தார். ஸ்வாமி தரிசனம் ஒழுங்காய் நடந்தது. காணிக்கையைச் செலுத்தி உத்தரவு பெற்றுக் கொண்டு, அரங்கேற்றுவதற்காக நூற்றுக்கால் மண்டபத்திற்கு எல்லோரும் வந்து சேர்ந்தார்கள்.

மண்டபத்தில் தாங்க முடியாத கூட்டம். இவர்களைப் போலவேதான் சந்தானமும் ஒரு பிரார்த்தனைக் கச்சேரி செய்வதற்காக வந்தான். அகப்பட்ட பக்க வாத்தியங்களை வைத்துக்கொண்டு கச்சேரி அமளிப்படுகிறது.

சந்தானத்திற்கு வயது சுமார் இருபத்து நான்கு அல்லது இருபத்தைந்து இருக்கும். அரையில் பட்டுக்கரை வேட்டி. மேலே விசிறி மடிப்புப் புதுத் துப்பட்டா. சில்கு அடையாறு ஜிப்பா. நெற்றியில் அழகிய நாமம். அதன் மத்தியில் ஒண்ணரைத் தம்பிடி அகலத்தில் ஜவ்வாதுப் பொட்டு. புஷ்பராகக் கடுக்கன். எலுமிச்சம் பழச் சிவப்பு. நல்ல அழகு. சாரீர சம்பத்திலும், ஞான பாவத்திலும் நல்ல மேதை.

பொதுவாகவே சங்கீத வித்வான்களுக்குப் பணத்துக்காகச் செய்யும் கச்சேரிகளைவிட, ஆசீர்வாதக் கச்சேரிகள் மிகவும் நன்றாக அமைவது வழக்கம். இதுவோ பிரார்த்தனைக் கச்சேரி. ஆத்மானுபவமாகப் பாடுகிறான். பவ்யமும் பக்தியும் கலந்து பிரவகிக்கின்றன. ஆனந்தமாக

வேங்கடேசன் சன்னிதானத்தில் சங்கீத தேவதைகள் தாண்டவமாடிக் கொண்டிருக்கிறார்கள்.

தாண்டவமாட வந்த தாசியும் இதைக் கவனித்தாள். சங்கீதம் அவள் உள்ளத்தைப் பற்றியது. பற்பல விஷயங்களை எழுதி அழித்து அழித்து மங்கல் ஏறி இராத அவளது உள்ளமாகிய கற்பலகையில், சந்தானத்தின் சங்கீதமும், ஏன், அழகு வழிந்தோடும் உருவமும்கூட, இடம் பெற்றன.

கவனித்தாள் தாய். பெண் பார்க்கும் பார்வை அவளுக்குப் பிடிக்கவில்லை. பெண்ணின் மனதைத் திருப்ப எண்ணினாள்.

தாய்: குஞ்சு.

"ஏம்மா?" என்று கேட்டபடி திருப்பினாள் கமலம்.

திரும்புங்கால் அங்கிருந்த நிலைக்கண்ணாடியில் சந்தானத்தின் உருவம் பிரதிபலித்தது. அதையே கூர்ந்து நோக்கினாள். கண் ஒன்று செய்கையில், காது எப்படி வேறொன்றைக் கேட்க முடியும்?

"என்னத்தேடி அந்தக் கண்ணாடிலே பாக்கறே?" என்று குமுறினாள் தாய்.

ஒண்ணுமில்லே, அம்மா.

தாய்: ஒண்ணுமில்லாட்டீ, இப்படித் திரும்பேன்.

கம: ஆகட்டும். நீ சொல்ல வேண்டியதைச் சொல்லேன்.

தாய்: ஒண்ணுஞ் சொல்ல வேண்டாம். நீ பாக்குற பாருவை எனக்குப் புடிக்கல்லெ.

கம: எது புடிக்கல்லேம்மா? என் பார்வையா, அவர் சங்கீதமா? திவ்யமாப் பாடுறாரே. அவருடைய உருவத்தைப் பார்க்கப் படாதா?

தாய்: பார்க்கலாம். நீ பாக்கறமாதிரி பார்க்கப் படாதுடீ.

கம: உம்........உம்....நான் எப்படிப் பாக்கறேன். அதைத்தாஞ் சொல்லேன்.

தாய்: சொல்லணுமா? வேசிக் கண்ணோடே பாக்கணும். ஆசைக் கண்ணோடே பாக்கப்படாது.

கம: நீபாட்டுக்கு எதையாவது சொல்லாதேம்மா— என்று முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

தாய்: இல்லே குஞ்சு. தாசியெ நாலுபேர் பாக்க ஆசைப் படணுமே ஒழிய, தாசி நாலுபேரைப் பார்த்து ஆசைப் படப்படாதுடீ.

"ஐயோ! தாசி வயத்திலே பொறந்தத்துக்காக மனிதர்களுக்குள்ள உணர்ச்சிகளைக்கூட உதறிவிட வேண்டுமா?" என்று நினைத்த கமலம் பெருமூச்சு விட்டாள். "ஆசைப்படப் படாதாக்கும். ஏனோ?" என்று தனக்குத் தானே பேசுவது போல் மெல்லிய குரலில் கேட்டாள்.

தாய்: ஏனா? நீ தாசி இன்கிறதற்காக; நீ பணக்காரியாகவேணும் இங்கிறதற்காக; வாலிபத்திலே ஒத்தனையே கட்டிண்டு அழுதுப்புட்டு வயசுக் காலத்திலே கஞ்சிப் பிச்சைக்குப் போயும் கிடைக்காமெத் திண்டாடப்படாதுங்கிறதுக்காக.

"சரிதான்" என்றது கமலத்தின் வாய். கண், கண்ணாடியிலேயே இருந்தது.

தாய்க்கு அசாத்தியக் கோபம் வந்துவிட்டது. "என்னடி! நான் சொல்லிக்கிட்டே யிருக்கேன்; செவிடன் காதிலே சங்கு ஊதுறவளா என்னை வச்சுப்புட்டு, நீ அதையே பார்த்துக்குட் டிருக்கியே. எனக்கு வருகிற கோபத்திலே இந்தத் தேங்கா மூடியை விட்டெறிஞ்சேன்னாத் தெரியுமா? அந்தக் கண்ணாடியும், உங்க வித்வானும் சுக்கு நூறாப் போகும்" என்று உறுமினாள்.

கமலம் சிரித்துக்கொண்டே, குத்தலாக மொழிந்தாள்: "அம்மாம்மா! அப்படி யெல்லாம் பண்ணிப்புடாதே. நீ நெனைக்கறதற்கு நேர் விபரீதமாய்ப் போயிடும். கண்ணாடி ஒடஞ்சுபோகும். ஆனால்! அப்புறம் ஒவ்வொரு கண்ணாடிச் சில்லிலேயும் ஒவ்வொரு வித்வான் உட்கார்ந்து பாடுமே, ஐயோ, பாவம்! நல்ல யோஜனை பண்ணினே. அவசரத்திலே ஒண்ணை ஆயிரமாச் செய்துவிடாதே" என்று கேலியாகச் சொல்லிவிட்டுச் சபையின் மத்தியில் போய் உட்கார்ந்தாள்.

தாய்: (தனக்குள் முணுமுணுத்துக் கொண்டே) ஸ்ரீனிவாஸா! உலகத்திலே என்னென்ன அற்புதமோ வெல்லாம் பண்றியே. தாசி வீடுகளிலே தாய்க்குப் பொண் அடங்கி நடக்கறுப்லெ கிருபை செய்யப்படாதா?—என்று மனதில் நினைத்துக் கொண்டாள்.

சங்கீத வித்வான்கள் சபையை அடிக்கடி கவனித்துக் கொள்வது வழக்கம் அல்லவா? ரசிகர்களது அபிப்பிரா யத்தை உணர்ந்து கச்சேரி செய்தால்தானே வித்வான் களுக்கு நல்ல கியாதி கிடைக்கும்? அதில் சந்தானமும் சளைத்தவன் அல்ல.

மண்டபத்திற்குள் கமலம் நுழைந்தபோதே அவன் அவளைப் பார்த்துவிட்டான். மின் வெட்டுப் போன்ற அவள் நடையைக் கண்டு அப்போதே வியந்தான். கை தாளம் போட, வாய் பாட, மனம் கமலத்தின் பின்னுலே ஓட, கச்சேரி நடத்திக் கொண்டிருக்கையில், கமலம் சமீபத் தில் வந்து உட்காரவும், வித்வானுக்குக் குஷி பிறந்து விட்டது. ஒரு கனைப்புக் கனைத்துக் கொண்டான். கமலத் தைக் கண்டும் காணுதவன்போல் பாட ஆரம்பித்தான்.

அதற்குள் ஒரு பேர்வழி, "ஒரு பதம் நடக்கட்டும்" என்ருர். ஆரம்பித்தான் அவனுக்குத் தகுந்தாற்போல். கவிக்குஞ்சர பதங்களில் ஒன்று ஞாபகம் வந்தது. கச்சித மாக அரை நிமிஷத்தில் பைரவியை ஆலாபனம் செய்து முடித்துக் கொண்டான்.

"வேலவரே உமைத் தேடி ஒரு மடந்தை
விடியுமுழுதும் காத்திருக்கின்ற வகையென்ன!" (வே)

இந்தப் பல்லவியை இவன் பாட ஆரம்பித்ததும், கமலத்தின் மனதில் சுருக்கென்றது. குபீரென்று முகத் தில் இரத்தம் ஏறியது. உதடு படபடத்தது. கண் சிறிது கலங்கிற்று. மனமோ தவித்தது.

அனுபல்லவியை நன்ருய் விஸ்தரித்துப் பாடினுன். அடிக்கடி இவள் பக்கம் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டான்.

தான் பார்க்கும் பெண் கவிஞரின் கற்பனைக்குச் சிறிதும் குறைந்தவளல்ல என்ற அபிப்ராயம் மேலோங் கியது.

பதம் பாடி முடிவதற்குள் கமலம் மிகவும் வேதனைப் பட்டு விட்டாள். முத்து முத்தாக முகத்தில் வியர்வை அரும்பியது. கைக் குட்டையை எடுத்துத் துடைத்துக் கொண்டு எழுந்து வந்து தூண் மறைவில் நின்ருள்.

பெண்ணின் நடவடிக்கைகளைக் கண்ட தாய், வேங்கடா சலபதியைச் சபித்துக் கொண்டே நின்ருள்.

கச்சேரி முடிந்தது. பிரசாதங்களைப் பெற்றுக் கொண்டு எல்லோரும் எழுந்திருக்கப் போகும்போது அர்ச்சகர் ஒரு விக்ஞாபனம் செய்து கொண்டார்.

"பொங்கணத்தூர் தாசி பொன்னியோகுவின் குமாரி ஸ்ரீமதி கமலம் கொஞ்சநாழி இப்படிப் பரத நாட்டியம் அரங்கேத்துப்படி பண்ணப்போரு; அதையும் பெரியவா எல்லோரும் இருந்து பார்க்கணும்" என்று கேட்டுக் கொண்டார்.

கூட்டம் மறுபடியும் உட்கார்ந்தது. சந்தானத்திற்கு வெளியே போகவும் முடியவில்லை. உள்ளே உட்கார்ந்திருப்பதும் மரியாதைக் குறைவோ என்று எண்ணினன்.

நல்ல வேளையாக அப்பொழுதுதான் கமலம் அவள் தாயின் பக்கம் திரும்பி, "அம்மா, அவங்க, வெளியே சென்றுவிடுவாங்க போலிருக்கு. எத்தனை பேர் சொன்னலும் ஒரு வித்வான் வாயாலே சபாஷ்னு சொன்னல், அந்தத் திருப்தியே அலாதியா யிருக்கும்மா. இருந்து நாட்டியத்தைப் பார்த்துட்டுப் போகலாம்னு சொல்லம்மா அவர் கிட்டக்க" என்ருள்.

தாய் சொல்லும்வரை காத்துக் கொண்டிருக்கவில்லை சந்தானம். "அதனலென்ன, பாதகமில்லை. நான்தான் பார்த்து ஸர்ட்டிபிகேட் கொடுத்துடப் போறேன். ஆகட்டும், இருக்கேன்—உம்! கச்சேரி எப்படி யிருந்தது?" என்ருன்.

கமலத்தின் மனம் பேசும்படி தூண்டிற்று. வாய் மறுத்தது. தாயின் பக்கம் திரும்பினள். தாய் முகத்தைக் கோணிக்கொண்டு நின்ருள். "என்னம்மா? என்னமோ கேக்கருங்களே, இவா சங்கீதத்துக்கு நம்ம எப்படி அபிப்ராயம் சொல்றது? நம்ம மனசுக்கு ரொம்ப நன்னத்தான் இருந்தது. கச்சேரி பண்ணினவாளுக்கு மனசில் எப்படி இருந்ததோ—அப்டீன்னு சொல்லேம்மா" என்ருள்.

சந்தா: எப்படி யிருந்தால்தான் என்ன, உங்களுக்குத் திருப்தியாய் இருந்தால் போதும்.

இவ்வளவு சம்பாஷணைகளுக்கும் மத்தியில் கல்தூணும் பொன்னியோகுவும் எவ்விதச் சலனமுமின்றி நின்று கொண்டிருந்தார்கள்.

வேங்கடாசலபதியின் சன்னதியில், சந்தானம் முன்னிலையில், பரத நாட்டியம் நடந்தது.

கமலத்தின் ஒவ்வொரு அபிநயமும் சந்தானத்தின் மனதில் அப்படி அப்படியே, சித்திரம் சித்திரமாகப் பதிந்தது. கடைசியில் அவள் பாடிய——

வந்து கந்தெனைச் சொந்தமாக
நினைந்தணைந்து, கலந்திடச் சொல்லடி (வந்)

என்ற பதமும், பதத்தின் அபிநயங்களும் கமலத்தின் உருவத்தில் சந்தானத்தின் மனத்தைப் பதிய வைத்தது.

கச்சேரி முடிந்தது. இருவருக்கும் உரிய கோவில் பிரசாதங்கள் ஒரே வீட்டிற்கு வந்து சேர்ந்தன. வேங்கடாசலபதியின் சன்னதியில் இருவரது காதலும் அரங்கேறியது.

* * * *

ஜாகை கும்பகோணத்திற்கு மாற்றப் பட்டது. சாப்பாட்டு நேரம் தவிர மற்ற நேரங்களில் சந்தானம் கமலத்தின் வீட்டிலேயே இருக்கத் தலைப்பட்டான். கமலத்தையும் பரத நாட்டியம் செய்யப் போகவேண்டாமென்று தடுத்துவிட்டான். கமலத்துக்கும் அது சம்மதமாகவே இருந்தது. தாயின் பிடிவாதம் பிரயோசனப் படவில்லை.

சந்தானம் எங்கே கச்சேரி செய்யப் போனாலும் கமலமும் கூடவே செல்லுவாள். சங்கீதப் பித்தேறிய இந்தத் தம்பதிகளின் வாழ்க்கை இடையூறின்றி ஓடியது.

வர வர இந்த விஷயம் சந்தானத்தின் மாமியார் ஸ்ரீமதிக்குக் காற்று வாக்கில் எட்டிவிட்டது. பிறகு, சந்தானம் வீட்டிற்குப் போனால், பழைய சோறும் புளித்த குழம்பும் பல வசைச் சொற்களும் சண்டையுமே வரவேற்பில் பிரதானமாக விளங்கின.

ஸ்ரீமதிக்குத் தன் பெண் திருப்தியாய் வாழவில்லையே என்ற வருத்தம் அதிகமிருந்தாலும், அதைவிட மாப்பிள்ளை தனக்கு அடங்கி நடக்கவில்லையே என்ற கோபம் தான் அதிகமாகப் பொங்கிக்கொண்டிருந்தது.

தாயும் மகளும் சேர்ந்து செய்த தர்பார்களில் அகப்பட்டுத் தவித்துக்கொண்டிருந்த சந்தானத்திற்குக் கமலம் ஓர் ஊன்றுகோல் போலக் கிடைத்ததினால், இவர்களது

ஆத்திரம் அதிகப்பட்டதென்பதைச் சொல்ல வேண்டியதே இல்லை.

வைகுண்ட ஏகாதசி அன்று மாமியாரின் திருக் கரத்தால் இட்டலிக்குள் வைக்கப் பட்ட வசிய மருந்து சந்தானத்தின் வயிற்றுக்குள் சென்றது.

பல நாட்களுக்குப் பிறகு சுவாச காசத்தால் உரு வழிந்த சந்தானம் கமலத்தின் வீட்டிலிருந்து கட்டிலுடன் தன் வீட்டிற்குக் கொண்டு வரப்பட்டான். அதுவும் சந்தானத்தின்பேரிலுள்ள பிரியத்தினலல்ல. அந்தப் 'பொல்லாத' தாசி வேறு மருந்து கொடுத்து இந்த மருந்தைக் கரைத்து விடுவாளோ என்ற பயத்தினல்தான்.

வீட்டிற்கு வந்து பத்துத் தினத்தில் சந்தானத்தின் உயிர் அந்தத்தை நாட ஆரம்பித்தது.

கடைசியில், வைத்தியர் கொடுத்த மருந்துகூட இறங்காமல் சந்தானம் கட்டிலில் கிடக்கும் பொழுது, குப்பிப் பாட்டி ஒரு யோசனை சொன்ஞள். அந்த யோசனைப்படி கமலத்துக்கு ஆள் அனுப்பினர்கள்.

இந்தப் பத்துத் தினங்களாய், நாள் ஒன்றுக்கு மூன்று தடவை சந்தானத்தின் வீட்டிற்குக் கமலம் வந்திருக்கிருள். அப்பொழு தெல்லாம் அவளை உள்ளே நுழைய விடாமல் ஸ்ரீமதியும் சண்பகமும் கழுத்தைப் பிடித்து நெட்டித் தள்ளினர்கள். இதையெல்லாம் பொருட் படுத்தவில்லை கமலம். ஆள் வந்தவுடன் அலறிப் புடைத்துக் கொண்டு ஓடினள். சந்தானத்தின் வீட்டிற்குள் நுழைந்தாள். வாயிற்படி தடுக்கியது. கட்டிலில் கிடந்த சந்தானத்தைப் பார்த்தாள். துக்கம் நெஞ்சை அடைக்க, கிட்ட நெருங்கி "அத்தான்!—அத்தான்—!" என்று கூப்பிட்டாள். குப்பிப் பாட்டி கமலத்தைப் பார்த்து மூக்கில் விரல் வைத்து ஆச்சரியப் பட்டாள்.—"இந்தப் பாலை எடுத்துக்கொடு" என்ருள்.

"அத்தான், அத்தான்! கொஞ்சம் வாயைத் திறவுங்கள்" என்று சொல்லி, பால் டம்ளரைக் கையில் எடுத்தாள் கமலம். சந்தானம் பேசவே இல்லை.

"கொஞ்சம் பால் சாப்பிடுங்களேன்" என்று கூறி, முன்ருனையால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். "அத்தான்....நான்....கமலம் வந்திருக்கிறேன்............அத்

தான்! எங்கே கண்ணை முழிச்சுக்குங்கோ....இந்தாங்கோ பாலு" என்றாள்.

மெல்லக் கண்ணை விழித்தான் சந்தானம். வாய் தானாகவே திறந்தது.

"க....ம....லி....! க....ம....லி" என்று கிணற்றுக்குள் இருந்து சத்தம் வருவது போல் பேசினான். அவன் கண்களில் கண்ணீர் பொங்கிற்று. கமலம் வெள்ளி உத்தரணியில் இருந்த பாலை வாயில் ஊற்றுவதற்குக் கொண்டு போனாள். சந்தானத்தின் கை மெல்லக் கமலத்தின் மேல் விழுந்தது. கமலம் அவன் மேலே சாய்ந்து பாரம் கொடுக்காமல் அவனை அணைத்தாற்போல் நெருங்கினாள். அவன் இரு கைகளும் கமலத்தின் முதுகில் விழுந்தன. தலையை ஒரு கையால் தூக்கிப் பிடித்துக் கொண்டாள். பாலை வாயில் ஊற்றினாள். 'கர்' என்று ஒரு சப்தம் கேட்டது. கமலத்தின் மேலிருந்த கை தானாகவே கீழே விழுந்தது. வாயிலிருந்த பால் கீழே வழிந்தது. "ஐயோ! மண்ணை வாரிப் போட்டுப் பிட்டியளே" என்று அலறி மேலே விழுந்தாள் கமலி. வீடு முழுதும் ஒரே அலறல். சந்தானத்தின் மனைவி சண்பகமும், அவள் தாய் ஸ்ரீமதியும் போட்ட கூச்சல், ஊராருக்கு விசேஷத்தை அறிவித்தது.

"ஐயோ! அத்தான்! இதுக்காகவா ஓடோடியும் வந்தேன்!" என்று கதறினாள் கமலி.

"ஆமாடி, சண்டாளி! நீ வந்த காரியம் ஆச்சுடி போடி வெளிலே" என்று கத்தியபடி, கமலியின் நீண்ட கூந்தலைப் பிடித்திழுத்து அவளை வெளியே தள்ளினாள் ஸ்ரீமதி.

வாயில் நிலைப்படியில் விழுந்தாள் கமலம்.

கதவைப் பிடித்துக்கொண்டு எழுந்திருந்தாள். மறு படியும் சந்தானம் கிடக்கும் கட்டிலை நோக்கி இரண்டடி எடுத்து வைத்தாள்.

"அம்மா! அந்த ப்ரும்மஹத்தியைப் போகச் சொல்லேன். என் கண்முன்னே நிற்காமெ" என்று கத்தினாள் சண்பகம்.

"ஏண்டி நிக்கறெ, கண்ணைத் துடச்சுக்கிண்டு? அதான் துடச்சுத் துடச்சு ஒரே வழியாத் துடச்சிப்

பிட்டியே, போடீ" என்று குறுக்கே வந்து நின்ருள் ஸ்ரீமதி.

கம: அவர் முகத்தை இன்னும் ஒரு தடவை........

"என்ன! என்ன!! இன்னுமொரு தடவையா? ஏன், பார்த்ததெல்லாம் போராதா! போடீ, அவன் போன இடத்திற்கு நீயும் போயிப் பாரு" என்று கூறிவிட்டு, உறுத்து விழித்தாள் ஸ்ரீமதி. கமலம் சரேலென்று வெளியே வந்தாள். வாயிற்படியில் சற்று நின்ருள். ஒரு தடவை உமிழ் நீரை விழுங்கினுள்.

"அம்மா, உன் பெண்ணையும் என்னையும் உருப்படி இல்லாமல் ஆக்கி விட்டாயே! இந்தா, இது எனக்குச் சாமி ஞதசாமி சன்னதியிலே கட்டின பொட்டு........உனக்கு இந்தப் பலனுவது கிடைக்கட்டும்" என்று கூறி, படக் கென்று தன் கழுத்தில் இருந்த கயிற்றை அறுத்தெறிந் தாள் கமலம். கருக மணிகளும் தங்கப் பொட்டும் தரையில் சிதறி உருண்டோடின. கமலியின் உடல், ஒரு சாணுகக் குறுகியது. விரித்த தலையுடன் வீதியிலே வந்து, பயந்து பயந்து, பதுங்கிப் பதுங்கி ஓடினுள். வீட்டுக்கு வந்தாள். ஏழு மணி இருக்கும். தாய் "ஏம்மா, விளக்கேத்து" என்ருள்.

அதைக் காதில் வாங்காமல், கட்டிலில் போய் விழுந் தாள். ஒரு பெருமூச்சு விட்டாள். சந்தானத்தின் நெற்றி ஜவ்வாதாலும் தன் தலை மயிராலும் வாசனை ஊட்டப்பட்ட தலையணையை, கொதிக்கும் தன் கண்ணீரால் வேக வைத் தாள். "அத்தான்! அத்தான்! அத்தான்!" என்ற வார்த்தைகள், நெருப்புக் கலந்த அவள் மூச்சிலே அலை பட்டு, முகாரியின் அவரோகணம் போலப் படிப்படியாய் நலிந்து, சிலிர் சிலிர்த்த மென் காற்றிலே மறைந்தது.

# கப்பலேறுவாயோ?

"மண்ணை நோண்டி மானத்தைப் பாத்து என்ன பலனைக் கண்டம்? உளுதவன் கணக்குப் பாத்தா ஒளக்குக்கூட மிஞ்சாதுங்குறது சரியாருக்கப்பேன்" என்று சலிப்புடன் சொன்னான் ராக்கன்.

ராக்கனுக்கு இருபத்தோரு வயது இருக்கும். மாமரப் பட்டியிலே, நல்ல முகவெட்டும், வெடுக்கு வெடுக்கென்று பேசும் தன்மையும் உள்ள அவன்மேல் அந்த ஊரிலுள்ள கிழவன் முதல் குமரி வரையில் எல்லோருக்கும் பிரியமதிகம். கட்டிலில் படுத்திருந்த கருப்பண்ணத் தேவன் எழுந்து உட்கார்ந்து கொண்டான்.

கருப்பண்ணத் தேவன் ஜெயிலிலிருந்து வந்து பதினைந்து இருபது நாளாயின. ஐந்து வருஷங்களுக்கு முன்னே, மஞ்சி விரட்டுப் பொட்டலிலே, தேவர் பிள்ளைமார் வகுப்புச் சண்டையில், அவன் தேவர் வகுப்புத் தலைவனாக இருந்து பெரிய கலவரையை உண்டு பண்ணியதால், நான்கு வருஷங்கள் ஜெயில் வாசம் அனுபவிக்க வேண்டியதாயிற்று. இப்போதுதான் திரும்பி வந்திருக்கிறான்.

கரு: நீயோ குடியானவப் பய. வேறே என்னத்தைத்தான் பண்ணலாம்னு முடிவு கட்டி இருக்கே?

ரா: முடிவு என்ன கட்டறது, அப்பேன். கம்மாயிலே தண்ணி காக்கை முழுவக்கூட நிக்குதில்லே. மளை பேஞ்சு தண்ணி வந்தாலும், எண்ணெத் தலேலே தண்ணி விட்டாப்லெ சொட்டுக்கூட நிக்காமெ வழிச்சிட்டுப் போயிருது. ஊரே எனக்கு வரவரப் பிடிக்கல்லெ. ஆகக்கூடி ஒரு ரோசனை பண்ணி யிருக்கேன்.

கரு: என்னடா, ஊரு பிடிக்கலையா! அட பாவி! ஏதோ ரெண்டு வருசமா ஊரிலே ரொம்ப ஒளுங்கு பண்ணி யிருக்கிறீங்கன்னு சொல்ராக! நீயோ இப்படிச் சொல்ரியே! என்று இளக்காரமாகக் கேட்டான் கருப்பண்ணன்.

மஞ்சி விரட்டுக் கலகத்திலே கருப்பண்ணனுக்கு எதிர்க்கட்சியி லிருந்த பொன்னுச்சாமி, அக்கரைச் சீமை சென்று சம்பாதித்து வந்த பணத்தில் ஒரு பகுதியைச் சொந்த ஊருக்குச் செலவழித்து, செய் நேர்த்தி பண்ணி யிருந்தான்.

இதைக் கிண்டல் செய்த கருப்பண்ணனுக்குப் பொன்னுச்சாமியின் பெருமைகளை எடுத்துக்கூற விரும்பினன் ராக்கன். சந்தர்ப்பமும் நேர்ந்தது.

ரா: ஏன் நாங்க செஞ்சதுலே கொறச்சலா? ஊர்ப் பொதுவிலே ஒரு பள்ளிக்கூடம், போட்டிருக்கம். அதுக்கு, கூடம் சுத்தி அடைப்பு,கல்லுக்காலு....எல்லாம் பொன்னுச்சாமி யண்ணஞ் செலவிலே போட்டுக் கொடுத்திருக்காரு, தெரியுமா? இதெல்லாம் என்னத்துக்கு அப்பேன். ஊர்லே ஒத்துமையைப் பண்ணிருக்காரா இல்லியா? என்று ஒரு கேள்வியைப் போட்டுவிட்டு பதிலுக்காகக் காத் திருந்தான் ராக்கன். கருப்பண்ணன் பிரமித்து உட்கார்ந் திருப்பதைப் பார்த்தான். பிறகு இப்போ நீ வந்துட்டே! பளயபடியும் ஏதாவது வத்தி கித்தி வச்சிருவியோன்னு பயமா யிருக்கு.

கரு: சீ, காலிப்பயலே. ஒங் குறும்பை விடமாட் டியே!....நிசமாச் சொல்ரேன், ராக்கா! நான் செயில்லே இருக்கிற நாளெல்லாம் எனக்கு இந்த ஊர் நெனப்புத் தாண்டா!

ரா: அது உம்மைதான்! சொப்பனங்கூடக் கண் டிருப்பே! எதை மறந்தாலும் நம்ம ஊர்க் கள்ளுக் கடையை மறக்க முடியாமெ நீ அவதிப் பட்டிருப்பே. இப்போ நம்மூரிலே நீசுக்காரன் கடை கிடையாதே தெரி யுமா? எல்லாம் பொன்னுச்சாமி யண்ணே முயற்சி! நீயும் ஊரிலே யில்லாததாலே நல்லாச் செய்ய முடிஞ்சுது.

கரு: ஏண்டா காலிப்பயலே! நான் செயிலுக் குள்ளர இருந்தாப்லெ ஒண்ணுமே தெரியாதுன்னு நெனச்சுக் கிட்டே! இந்தச் சீமைச் சங்கதி எல்லாம் அங்கே வந்து அத்துபடி யாயிடும்டா. செயிலுக்குப் புதுசா வராங்க பாரு அவுக சொல்லுவாக! வடக்கே சேலமாம், சித்தூராம், கொடப்பையாம், அங்கெல்லாம் கள்ளுக் கடேங்களெச் சர்க்காரு எடுத்துட்டாகளாம். நம்ப ஊரிலே நீங்களா

எடுத்துப் பிட்டிங்கோன்னு கேள்விப்பட்டேன்" என்று கூறிவிட்டு ராக்கன் காதோடு காதாக இன்னொன்றும் சொன்னான்; "டே நானும் இப்போ குடிக்கிறதில்லே தெரியுமாடா!

ரா: அடெ. ஒங்கொப்பனனெ நெசம்மா ?—என்று கேட்டு எழும்பிக் குதித்தான் ராக்கன்.

கரு: ஆமடா. நான் கும்பிடர கோவிலுக்குப் பொது வாச்சொல்றேன். இனி, கருப்பண்ணனுக்கும் கள்ளு மொந்தைக்கிந்தான் பகை! செயிலுக்குப் போனாலும் போனேன், குடிப்பளக்கத்தையும், குடிகெடுக்கிற வளக்கத்தையும் தொலேச்சுப்பிட்டேன். இனிமே நானும் ஒரு....பொன்னுச்சாமி தாண்டா என்றான்.

ஒரு காலத்தில் தன் எதிரியாக இருந்த அந்தப் பொன்னுச்சாமியின் பெயரை இன்று உச்சரிக்கும்பொழுது கருப்பண்ணத் தேவனுக்கு மயிர் கூச்செரிந்தது.ஜெயிலிலிருந்து வந்து ஊரைப்பார்த்தவுடனே, அவனையறியாமலே பொன்னுச்சாமியின் பேரில் ஏற்பட்ட பிரியம்தான் இதற்கு காரணம்.

எதிரே யிருந்த மரத்தின்மீது ஒரு புல்லுருவிக் கொடி ஓடுவதை அவன் கண்கள் பார்த்தன. பெருமூச்சு விட்ட பின்னர் கூறினான்:

"ராக்கா! நல்ல மரத்திலே புல்லுருவி ஓடுது பாரு; அதுபோலே நான் இந்த ஊரிலே கிளம்பி கிலாகத்தை உண்டாக்கினேன். அந்தப் பலனையும் அனுபவிச்சுட்டேன். இனியேப் பொன்னுச்சாமி கிளிக்கிற கோட்டைத் தாண்ட மாட்டேண்டா! நம்பின நம்பு, நம்பாட்டாப் போ—அது கெடக்கட்டும்—நீ என்னமோ ரோசனே பண்ணியிருக்கேன் இன்னியே, என்னடா அது?"

ரா: இந்தப் பதினோராந் தேதி பொளேயில்லாத நாளா யிருக்காம்.

கரு: (சிரித்துக்கொண்டே): எதுக்கு டாப்பா? எவளே யாவது ஒரு குட்டியைப் புடிச்சுத் தாலியைக் கட்டிப்புடலாம்னு பாக்கிறியாக்கும்?

ராக்கன் சூ கொட்டிக்கொண்டே சொன்னான்: "இங்கே ஒரு வவுத்துக்கே ஒம்பாடு எம்பாடா யிருக்கு. நீ மேக்கொண்டு சொல்றே, போய்யே!"

கரு: பின்னே ?

ரா: பின்னே என்ன? மேத்துண்டே ஒதறிப் போட்டுக்கிட்டுச் சிங்கப்பூரைப் பாக்கப் போயிரலாம்னு பாக்கறேன்.

இதைக் கேட்டவுடன் கருப்பண்ணனுக்குத் தூக்கி வாரிப்போட்டது. ஆத்திரத்துடன் கீழ்க்கண்டபடி கேட்டான் :

கரு: என்னடா பயலே. என்ன ? மருக்கொண்டா திரியுறே! அவனும் மறுபடி பொயித்தானும் சிங்கப்பூருக்கு! நீயும் பொயித்தா ஊர் எப்படிடா போறது!

ரா: யாரு இன்னொருத்தன் ?

கரு: நம்ம பொன்னுச்சாமி தான்.

ரா: என்ன ? அவர்தான் வந்திட்டாரே! நான் ஒங்க வீட்டுக்கு வாரப்பொதான் கருப்பன் சொன்னான். ஒங்கிட்டேச் சொல்லிப்பிட்டு அவர் கிட்டக்கவும் வருதி கேட்டுக்கிட்டுப் பயணம் வைப்போம்னு பாத்தேன்.

பொன்னுச்சாமி வந்துவிட்டான் என்று சொல்லவும் கருப்பண்ணத் தேவன் கட்டிலிலிருந்து துள்ளிக் கீழே குதித்தான்.

கரு: என்ன வந்துட்டானா? எப்பொடா ? எங்கேரா அவன் ? அவனைப் பாக்கணுண்டா ? ஆதீனங்காத்தான் மூதல் தெய்வம், அவன் ரெண்டாவது தெய்வம்டா எனக்கு வாடா என்கூட—என்று சொல்லிவிட்டு, துண்டை எடுத்து மூண்டாசு கட்டிக்கொண்டு வெளியே நடந்தான்.

நடு வழியில் இரண்டு பிரப்பம் பாய்களைத் தூக்கிக் கொண்டு எதிரே வந்துகொண்டிருந்தான் பொன்னுச்சாமி. கண்ணுக்கெட்டிய தூரத்திலிருந்தே "ராக்கா சொகந்தானா?" என்று கேட்டான்.

ராக்கன் ஓடிவந்து சொன்னான்: "அண்ணே, ஐயன் வருரே பாக்கல்லியா? ஒன்னைப் பார்க்கணும்னு தானே ஓடியாராரு" என்று சொல்லி, கொஞ்ச தூரத்தில் வரும் கருப்பண்ணனைச் சுட்டிக் காட்டினான்.

பொன்னுச்சாமி தேவரை நிமிர்ந்து பார்த்தான். "தேவரையா சொகந்தானா? ஐயோ ஒடம்பு அரை ஒடம்பாப் போச்சே?" என்றான்.

தேவரது கண்கள் கண்ணீர் விடுவதைக் கவனித்த பொன்னுச்சாமி மேலும் சொன்னன் :

"மஞ்ச வெரட்டுக் கலகத்துலே நானுவது கொஞ்சம் தணிஞ்சுபோயிருக்கலாம்! முட்டாத்தனமா வீம்பு பண்ணி ஒங்களையும் தெண்டுனேக்கி ஆளாக்கிப்பிட்டேன் பாவி" என்று அவன் சொல்லி வாய் மூடுமுன் "தம்பி" என்று அலறியபடி கட்டிக்கொண்டான் கருப்பண்ணத் தேவன்.

பொன்னுச்சாமியின் தோளின்மேல் தலையைச் சாத்திக்கொண்டு விசும்பி விசும்பி ஒரு குழந்தையைப்போல் அழுதான். அழுகை ஓய்வதாகக் காணும்.

பொன்னுச்சாமி இரு கைகளாலும் தேவனின் தோளைப் பிடித்து நிமிர்த்தித் தன்னுடைய தோள்மேல் கிடந்த சரிகை வேஷ்டியின் மடிப்பைப் பிரித்துத் தேவனின் கண்களையும் முகத்தையும் துடைத்தான்.

"தம்பீ.........நீ.........தரும புத்திரண்டா. நான்தாண்டா ஊரைக் கெடுத்துப்பிட்டு இன்னும் உசிரோடே இருக்கேன். எம்பொளேயை" என்று மேலே கூறமுடியாமல் மென்னு மென்னு முழுங்கினன் கருப்பண்ணத் தேவன்.

"சரி, சரி வாங்க. சும்மா மனசைப் போட்டு உவத்திரியப் படுத்திக்காமே" என்று சொல்லி, தேவனைக் கைலாகு கொடுத்துக் கூட்டிச் சென்முன் பொன்னுச்சாமி.

கீழே விழுந்துகிடந்த அந்தப் பாய்களை ராக்கன் தலையில் தூக்கிச் சென்ருன்.

பரம வைரிகளாக இருந்த பொன்னுச்சாமியும் கருப்பண்ணனும் ஒன்ருகச் சேர்ந்து வருவதைக் கண்டு ஊரார் மகிழ்ந்தார்கள். அந்தக் காக்ஷி ராமனும், ராவணனும், தர்மபுத்திரரும், சகுனியும் ஒன்ருகத் தோளின்மேல் கை போட்டுக்கொண்டு வந்தால் எப்படி இருந்திருக்குமோ, அப்படியிருந்ததாகச் சொல்லிக் கொண்டார்கள்.

கடைசியாய்ப் பிள்ளையார் மடத்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

மடத்திலே குந்திக்கொண்டு பத்திரிகை படித்துக் கொண்டிருந்த இளவட்டப் பையன்கள் விலகி உட்கார்ந்தார்கள். ராக்கனிடமிருந்த பாயை வாங்கித் தரைமேல் விரித்தான் பொன்னுச்சாமி. 'தம்பீ! யாருக்குப் பாயி? நம்ப மடத்துக்கு வாங்கியாந்தியா ?" என்று நெஞ்சு தாங்க

முடியாத சந்தோஷத்தோடு கேட்டான் கருப்பண்ணத் தேவன்.

பொன்னுச்சாமி அன்புத் தொண்டையில் கூறினன்: "ஏன்? அய்யனுக்கு வேணும்னலும் ஒண்ணு வீட்டுக்குப் போய் ராக்கங்கிட்டேக் கொடுத்து அனுப்பறேன்."

கரு: எனக்கா? எனக்கு எதுக்கப்பேன் பாயி? நீங் கள்ளாம் சின்னப் புள்ளேக! போட்டுப்படுக்க வேண்டியது நாயம்.

இதற்குள் இடைமறித்து ராக்கன் பேசினன்: "ஆமாண்ணே! அவருக்கு வேண்டாண்ணே! அவரு வெந் ததைத் தின்னுட்டு விதிவந்தாச் சாகரவரு....நீ....நமக் கொரு பாய்குடு! பணத்தை டேமணியாக கொடுத்துப் பிடறேன்"

பொன்: அடபயலே, சும்மா இங்கே நின்னு கத்தா தெரா! வேணும்ன வீட்டிலே போயி, ஒண்ணே எடுத்துக் கிட்டு ஓடிரியா. இங்கே நின்று கதை விடறியே! என்று அன்பு ததும்பும் குரலில் கூறினன்.

அன்றுபகல் தேவனுக்குப் பொன்னுச்சாமி வீட்டில் விருந்து நடந்தது. சமையல் கட்டிலேயே முதலில் சாப் பிட்டுவிட்டு, ராக்கன் அன்று பந்தி விசாரணை செய்தான். சாப்பாடு முடிந்ததும் எல்லோரும் திண்ணையில் வந்து உட் கார்ந்தார்கள்.

ஊரார் ஒவ்வொருவராகப் பொன்னுச்சாமியிடம் க்ஷேமம் விசாரிக்க வந்து சேர்ந்தார்கள். சம்பாஷணை உருள ஆரம்பித்தது.

தேவன் இடிபட்ட வெற்றிலையை எடுத்து வாயில் போட்டுக்கொண்டு "என்ன தம்பீ? அந்தச் சீமைகள்ளே என்னடாப்பா விசேஷம்?" என்று கேட்டான்.

பொ: என்ன விசேஷம்? இக்கரைக்கி அக்கரை பச்சைதான். அக்கரைக்கு இக்கரை பச்சைதான்.

கரு: அதானெ கேட்டேன்! நீ அங்கே யாருக்கோ கடன் கொடுத்திருந்தயாமே. அது திரும்பி வந்திருச்சா இல்லையா?

பொ: ஹூம் ஹூம். போனவுடனே கையிலே தூக்கித் தந்துட்டான். ராக்கா! பொறந்த ஊரை விட்டுட்டு பொளைக்கப்போறம்கிறியே. இந்த கதையை கேளு.

தேவரையா, நீங்களும் கேளுங்க. ஏன் ? எல்லாருமே கேளுங்க''—என்று சொல்லிவிட்டுக் கீழிறங்கி வெற்றிலை யைத் துப்பிவிட்டு வந்து நிமிர்ந்து உட்கார்ந்து சொல்ல ஆரம்பித்தான் பொன்னுச்சாமி :

"என் பணத்தை ஒரு சீனங் கிட்டக்கொடுத்திருந் தேன். அவுக ஊரு சுங்கிங்."

ரா. அவன் பேரு?

பொ : நிவாங்நூய்னு பேரு.

ரா : இதை யெல்லாம் மூக்கு வழியாத்தான் சொல்ல ணும் போலே யிருக்கு!

கரு : ஊடே கரடி விடாதேடா. சொல்றதைக் கேப் பம். சொல்லு தம்பி என்று ஆவலுடன் கேட்டான். கருப்பண்ணன்.

பொ : அவுக ஊருலே அதாவது சீன தேசத்திலே செப்பான் காரங்க வந்து சண்டை போடறுங்களாம். அதுக் காவத் தங்க ஊருக்குப் போகணும்னு லப்பர் தோட்டத்தை வித்துப்பிட்டு ரெடியா யிருந்தான். என் தலையைக் கண்ட வுடனே நாகூர்ச் சல்லி பாக்கி இல்லாமே, கையிலே தந் தூட்டான் அண்ணே பணத்தே. அப்படின்ன ரோக்யதை இருக்கணும்!

கரு : அட பாவி! அவுங்க ஊருலேதான் சண்டை யின்னியே. ஏன் சண்டை நடக்கிற ஊருக்கு விளுந்தடிச்சிக் கிட்டுப் போருன் ?

ராக்கனுக்கு அந்தச் சீனனது தேச பக்தியைக் கேட்டவுடன் மனதில் ஒரு எழுச்சி உண்டாயிற்று. உடனே சிரித்துக் கொண்டே "என்ன கேக்கரே? புத்தி யில்லாமெத்தான் போனன். எங்க ஐயனெ வந்து கேட்டிருந்தா, அந்த மாதிரி அக்கிரமம் செய்ய அவனே விட் டிருக்கமாட்டே யில்லையா ?" என்று கூறி நகைத்தான்.

கரு : என்னடா பொட்டுலே அடிச்சாப்பலே பதில் சொல்றே! அவன் உத்தக் களரீலே விளுந்து உசிரை விடத்தானே போருங்கறேன்.

ரா : ஒனக்கு மூக்கணங்கவுத்தைச் சுண்டிக்கிட்டே இருக்காட்டிப் புத்திவராது, அய்யேன். பொறந்த ஊரிலே எதிரிங்க வந்து கொள்ளை வைக்கிருன்ன, மீசை மூளச்ச குடியானவன் சும்மாவா இருப்பான் ? அதுதான் வந்ததை

வரப்படுத்திக்கிட்டு ஊரைக் காப்பாத்த ஓடரூன். இவ்வாறு சொல்லிவிட்டு அரும்புவிடும் தன் மீசையை இடதுகை விரல்களால் தடவி விட்டுக்கொண்டான்.

கரு: சரிதாண்டா. நீ மெத்தப் படிச்சவன், அப்பறம் என்ன தம்பீ?

பொ: ராக்கன் சொல்லறது தான் உண்மே. அதுலெயும் அவன் பொண்டாட்டி இருக்காளே அந்தச் சீனச்சி. அடாடா! பொல்லாத ஈஞ்சனுட்டுக் குறத்தி. அவளும் புறப்படு புறப்படுன்னு பொடணியைப் புடுச்சுத் தள்ரூ அவனே!

கரு: ஏன்? வலத்து மாடு இடத்து மாடோ? ரண்டுக்கும் புடித்த மில்லியோ?

பொ: சேச்சே....அப்படியில்லே. நல்ல சோடி தான். அவ சீனத்திலே ஒரு அபினிக் கடைக்காரன் மக! இவன் நிவாங்னூய் அந்தப் பளக்கம் உள்ளவன்.

ரா: சரித்தான். தொலெஞ்சானு? தென்னம் புள்ளெக்கி வண்டு விழுந்தாப்பலே தான். நாத்தங்காலிலே தண்டட்டீ விளுந்தாப்லே அளிஞ்சு போகவேண்டியது தான். நல்லா வந்திச்சு நமக்குக் கள்ளுத் தண்ணியும் அவங்களுக்கு அபினியும்?

பொ: அபினிக் குடியன்னு....ஒங்க வீட்டுக் குடியன் எங்க வீட்டுக் குடியனில்லே. எப்பப் பாத்தாலும் அந்தக் கடையிலே தங்கிக் குடிச்சுப்பிட்டு, காத்துலேயே பறந்துக்கிட் டிருப்பான்.

கரு: சேச்செ! இந்த போதைப் பளக்கம் மாத்திரம் கெட்ட சல்லெவாரிப் பளக்கம்டா. மனுசனைப் புடிச்சுக்கிச்சுன்னு கத்தாளெப் பூச்சிதான்! ஆள் இருந்த இடம் பொட்டலாப் போரமட்டும் விடாது என்று சொன்னுன் அனுபவம் மிகுந்த கருப்பண்ணன்.

ரா: ஆமாய்ய! அது நெசந்தான். அந்தப் பூச்சி மொதல்லெ எப்படி வந்திச்சுத் தெரியுமா? பொட்டைக் குட்டிக பொட்டு வச்சாப்லே எலெக்கெலே வந்து உக்காந்திச்சுக. பாக்கவும் அளகா யிருந்திச்சு. கொஞ்ச நாள்ளே பாத்தியா சப்பாத்திக்கள்ளீங்கற பூண்டே அத்துப் போச்சு ஊர்லே!

பொ: அப்பறம், புஞ்சைக் காட்டுக்கு வேலி யடைப் பில்லே; ஆட்டுக்குட்டிக்கி இரையில்லே; பாம்பு, பல்லி

யெல்லாம் தங்க இடமில்லாமே நம்ப குடிசைக்குள்ளே வந்துக்கிச்சு!

ரா: அண்ணேண்ணே! ஒரு சங்கதில்லே. தஞ்சாவூர்லேந்து வாரப்ப ரயில்லே பேசிக்கிட்டாங்க. இதுகூட ஏதோ ஒரு துரை பண்ணின சூச்சியாம்! வேலிக்கி அடைக்கிற முள்ளுக் கம்பி இதுக விக்கணும்னு இந்தப் பூச்சியைக் கொண்டாந்து அவன் விட்டுப்புட்டானும்.

இவ்வாறு ராக்கன் ஒரு புதுக் கதை சொல்லவே எல்லோரும் சிரித்தார்கள்.

கரு: எலே சும்மா யிருடா! பொன்னுச்சாமி கதையைக் கேப்பம்.

பொ: வளக்கம்போலே ஒருநாள் அவன் வந்து அபினியை வாங்கிக்கிட்டுத் திரும்பிப் போறபோது கடை வாசப்படிலே, ஒரு கொண்டை யூசி கிடந்தது. அந்த ஊசி தங்கத்தினலே பண்ணினது. அதுமேலே ஒரு பாம்புத் தலையும், அந்தத் தலையில் ஒரு வயிரக்கல்லும் பதிச்சிருந்தது. மெள்ள நலுங்காமெ அதை எடுத்து டபக்குனு கால் சட்டைப் பையிலே போட்டுக்கிட்டுப் பொய்த்தான் அந்தச் சீனப் பய.

கரு: அதிட்டக்காரப் பயதான்........அப்பறம்.

பொ: அப்பறம் என்ன? அமளிதான்! அன்னக்கி முளுக்க அந்தச் சீனச்சி அபினிக் கடையிலேயும், தன் வீட்டிலேயும், தேடுதேடுன்னு தேடின! அந்த ஊசி கம்மிங் சூவுது. மறந்திட்டேண்ணே—அந்தக் குட்டி பேரு கம்மிங்சூ. ஊசி ஆம்பிடலே. பிரியமான கொண்டை ஊசி போச்சேன்னு ரொம்ப வருத்தப்பட்டா அவ.

கரு: இருக்குமா இல்லியா—என்று ஆமோதித்தான்.

பொ: அன்று சாயங்காலம் கடையில் உட்கார்ந்து கொண்டு வியாபாரத்தைக் கவனிச்சாள் கம்மிங்சூ. அன்று பகல் முழுவதும் ஊசி பையிலேதான் கிடந்திச்சுனலும் மனதிலே நறுக்கு நறுக்குன்னு குத்திக் கிளரிக்கிட்டே இருந்திச்சு சீனனுக்கு. எங்கேயாவது வித்துப்பிடலாமான்னு நெனேச்சான். ஏற்கெனவே, வெரிச்சிக்காரன்; நகையோ திருட்டு நகை. இதைக் கொண்டுபோய் விக்கப் போன கைக்கி காப்பு வந்திருமில்வியா? பயந்து வெலவெலத்துப் போனன். பொளுது சாயுர நேரத்திலே

அந்தக் கடையெ நாடி கால் இளுத்திச்சு. போனுங் கடைக்கி.

ரா: ருசி கண்ட பூனே விடுமா. எங்க ஐயம்மாதிரிதாம் போலிருக்கு அவனும்.

கரு: ஏண்டா என்ன துணியைப் போட்டா தாண்டச் சொல்றே? இப்போ கடையாதுராங்கறேன். சும்மாயிருடா. அந்த சினச்சியைப்பத்திச் சொல்லு அப்பா!

பொ: அங்கே அவ தண்ணிக்கிச் செத்த பசலிக் கொடியாட்டம் உக்காந்திருந்தா. அவமூஞ்சி உச்சிப் பொளுதிலே கிடந்த பரங்கிப் பூவாட்டம் தொவண்டு குமிஞ்சுக்கிட்டிருந்தது. அதைப் பாத்தான் நம்ப சினன். அரைப் பொட்ளம் அபினி கேட்டான். அவ தந்தா. இவன் வாங்கிக்கிட்டான். "இந்தா எங்கிட்டப் பணமில்லே; இதை வச்சுக்க" அப்பிடின்னு சொல்லி, அந்த ஊசியைத் தூக்கி அவள் கையிலே போட்டான். பாருவே. என்ன திமிரு பாத்தியா அந்தப் பயலுக்கு!

ரா: ஏண்ணே--என்ன எங்களெப் பெருமாள் மாடுன்னு பாத்தே நீ சொல்றதுக் கெல்லாம் ஊம்....ஊம்....போட?

பொ: ஏண்டா?

ரா: ஆமாண்ணே! கேப்பையிலே நெய் ஒளுகுதுன்னு கேப்பாருக்குப் புத்தி எங்கே போச்சு, அண்ணே. கைச்சரக்கெல்லாம் விடறியே! திருடனுவது திருப்பிக் குடுக்கவாவது?

பொ: நானு கைச்சரக்கு விடறேன்! அந்தச் சினஞ் சொன்னுண்டாங்கறேன் அப்பறம் அவ அப்படியே பிருமிச்சுப் போனுளாம். ஏதுரா யிதுன்னு கேட்டாளாம். சினன் சங்கதி எல்லாம் சொன்னுனம். அதிலேருந்து "மனிசன் ரோக்கியந்தான். போதையினலே கெட்டுப் போனன்னு அவளுக்கு ஒரு பிரியம் ஏற்பட்டுச்சு." பின்னலே ஒரு நாள் நிவாங்நுய்க்குத் தைரியம் வந்து "என்னைக் கல்யாணம் பண்ணிக்கிரியா"ன்னு அவளைக் கேட்டானம்.

கரு: அது நாயந்தானே. நல்ல தண்ணி உள்ள இடத்திலே அள்ளிக் குடிக்க நெனச்சிட்டானுக்கும்.

பொ: போதை போடாமல் இருந்தா, ஆகட்டும்னு அவ சொன்னுளாம். சடக்கினு விட்டுட்டான். கல்யாணம்

ஆச்சு. பொண்டாட்டியும் புருசனும் கடுக்கன் செதை சேந்தாப்பிலே அமைஞ்சு போச்சு! சிங்கப்பூரைப் பாக்க வந்தாக. கடை நடத்திருக. பணமும் சேர்ந்துது.

ரா: அதோடே அதிட்டமும் சேர்ந்தது இல்லியா?

பொ: நல்லா லெச்சப் பணக்காரரு வாரபோது யுத்தமும் வந்திச்சு! மூட்டையைக் கட்டுடா ஊருக் கூன்னுட்டா அந்தச் சீனச்சி.

கரு: சரிதான்—ஊருக்குப் புறப்பட்டது அவ ஏற் பாடுதானு?

பொ: அதோடயா விட்டா அவ? கறுப்புக் கால் சிராயையும் சட்டையையும் போட்டுக்கிட்டு, வெட்டிவிட்ட குடுமியும் தானுமா, உண்டியப் பெட்டியைக் கொண்டாந்து எம் முகத்துக்கு நேரே கிண்ணு கிண்ணினு ஒரு குலுக்குக் குலுக்கினளே பாரு! நான் அசந்துட்டேன் அப்படியே "என்னடி யாத்தா? இன்னேன். யுத்தத்துக்குப் பணம் போடு இன்னு! ஒரு பத்து ரூபாயைப் போட்டேன்.

கரு: அடி சவ்வாசு! அப்படில்லே இருக்கணும் பொம்பளே. இம். சரிதான்....அப்பறம்.

பொ: அப்பறமென்ன! சொந்தச் சீமையைக் காப்பாத்தறத்துக்காக நிலம் நீச்செல்லாம் வித்துப்புட்டு, கடன் ஒடனெல்லாம் கட்டிப்பிட்டு ஊரைப்பார்க்கப் போயிட்டாக.

கரு: கேள்ரா! ராக்கன் பயலே கேளு. அக்கரைச் சீமைக்குப் போறேன் போறேன்னு அடிச்சுக்கிறையே அந்தச் சீனனைப் பார்ரா—அவன் சொந்த ஊரை நல்லா வாக்கணும்னு ஓடிப்போயிருக்கான். நீ சொந்த ஊரை விட்டுட்டு ஓடணும்னு பாக்கறே! முட்டாப்பயலே!

பொ: அட ராக்கா? நீயாடா சிங்கப்பூருக்குப் போகணும்னு சொன்னே? எப்போடா சொன்னே! அங்கே யெல்லாம் இம்மேப்போயி ஒண்ணும் நாம்ப வாரிக்கட்ட முடியாது. சம்பளமெல்லாம் கொறஞ்சு போச்சு. கப்பக் கப்பலா நம்ப ஆளுங்க திரும்பி வந்துண்டிருக்கு. இப்போ இவன் போருனும்! நல்ல கதெ!

கரு: வெள்ளை வேட்டியும் பல்லுக் காவியுமாத் திரியறத்துலே பிரயோசனமில்லே. இனி ஔவன் புத்தியைக் கொளுமுனையிலே தான் பாக்கணும். எங்கே எள

வட்ட மெல்லாம் கூடி வெள்ளாமையைப் போடுங்க பாப்பம். ஊர் சொகமாகாதே போகுமா?

ரா: உங்களுக்கென்ன சும்மா சொல்வீங்க! எனக்கு வார கருக்கா மூணு மாசத்துக்குத் தான் காணும். மிச்ச நாளைக்கி? இதையெல்லாம் பாத்துத்தான் அக்கரைச் சீமைக்குப் புறப்படலாம்னு அய்யனை ரோசனை கேட்டேன். ஊரிலே என்னைப் போலே காணி இல்லாதவன் எப்படிப் போறது?

பொ: இருந்து தரிசு போட்டிருக்கான் பாரு—அவன் நிலத்தை வாரத்துக்கு உழுறது.

ரா: அவன் ஒத்துக்குவானு?

பொ: ஒத்துமையா யிருந்து ஒத்துக்கப் பண்றது.

கரு: வெரை நெல்லுக்கு எங்கே போறது?

பொ: நாங் குடுக்கறேன்! பின்னலே திருப்பித் தாங்க! நான் இந்த வூரிலே இல்லாமெத் தொலைஞ்சு பொயித்தா நீங்க சிங்கப்பூருக்குத் தான் போங்க—புலி யூருக்குத் தான் போங்க. இப்ப கூடாது.

ராக்கன் குளிர்ந்த முகத்துடன் கீழ்க் கண்டபடி கூறினன்:

"அண்ணே, ஆண்டிக்கி அதுவும் சொல்லாதேம் பாங்க. ஊரிலே அம்பிட்டுப் பேர்களும் பஞ்சத்திலே அடி பட்ட ஆண்டிக! நீ பாட்டுக்கு வாக்குக் கொடுக்காதே. அப்பறம் முருங்க மரத்துலே கம்பிளிப்பூச்சி அடையறுப் பலெ வந்து ஒட்டீருவாங்க"

பொ: சரித்தாண்டா. அதிலே நீயும் ஒருத்தன் தானே.

ரா: ஆமா, அதுலே என்ன இக்கா வச்சுப் பேசச் சொல்றே! சந்தேகமே யில்லை; நான் தான் முதல் ஆளு!

பொ: அப்படி ஒட்டினலும் கோதுல்லேடா. ஒருத் தனும் மரத்துக்கிட்டே வரமாட்டான்.

காவல்காரன் வந்து வெளியே யிருந்த கம்பத்தில் விளக்கேற்றினன். எல்லோரும் கையெடுத்து விளக்கைக் கும்பிட்டார்கள்.

"சரிதாண்டப்பா. இந்த வருஷம் முதலாவது வெள் ளாமையக் கோசா நடத்துவம். அடுத்த வாரத்துலே கூட்டம் போட்டு நாளேரு பூட்டறத்துக்கு நாள் பார்ப்பம்" என்று கருப்பண்ணத் தேவன் சொன்னன்.

எல்லோரும் எழுந்திருந்து பொன்னுச்சாமி யிடமும் கருப்பண்ணத் தேவரிடமும் விடை பெற்றுக்கொண்டு வீட்டுக்குச் சென்றார்கள்.

ராக்கனது கப்பல் பிரயாணம் இவ்வாறு நின்று போகவே, அவன் கையைப் பிடித்திழுத்துக் கொண்டு கருப்பண்ணன் தோப்பிலிருக்கும் தனது குடிசை நோக்கிச் சென்றான்.

# பதினெட்டாம் பெருக்கு

தஞ்சாவூர் ஜில்லா மிராசுதார் துயரம் என்று பிரபலமாகப் பத்திரிகைகளில் அடிபடுகிறதே, அங்கே தண்ணீர் பாயும் காவேரிக் காலில் ஜலம் பொங்கி வழிந்தோடுகிறது.

புதிதாக நட்ட வேப்பங்கன்றுகளும் ஆலமரங்களும் சித்திரை வெய்யிலில் காய்ந்து, ஆனித் தூரலில் ஜீவன் பெற்று, தழைத்து ஆனந்திக்கும் காட்சி அற்புதமாக இருக்கிறது. அன்று பதினெட்டாம் தேதி. வருஷத்தில் மாதந்தோறும் தான் பதினெட்டாம் தேதி வருகிறது. ஆனல் தமிழ்நாட்டுப் பஞ்சாங்கத்தில் இந்தப் பதினெட்டாந் தேதிக்கு மாத்திரம் ஒரு தனிப்பெருமை; மதிப்பு. ஆடிப் பெருக்கு ஆறுகளெல்லாம் கரைபுரள்வதுதான், பதினெட்டாம்பேறு என்றல் குழந்தைகள் முதல் பெரியோருக்கும் மானந்தம்.

*　　　　*　　　　*

அக்கிரகாரத்து தினசரிச் சட்டப்படி இன்றைய தினம் பெண்கள் தினம். அழகிய கிராமிய அலங்காரங்களுடன் ஸ்திரீகள் வகைவகையான சித்ரான்னங்களுடன் வந்து காவேரிக் கரையிலிருந்து மக்களுடன் உண்டு களிக்கும் திருநாள். அவர்கள் உல்லாச மனநிலைக் கேற்றபடி மரக் கிளைகளிலிருந்து குரங்குகளும், குருவிகளும் அவர்களுடன் விளையாடக் காத்திருக்கின்றன.

அக்கிரகாரத்தில் ஒரு வீட்டுக் கூடத்தில் மாஜி சுமங்கலிகளான சில மாமியார்களின் மகாநாடு நடக்கிறது. ஒவ்வொரு பிராமணனும் துணிந்து அல்லு அசல் வீட்டுப் பிராமணனை விருந்துக்கு உபசரித் தழைக்கிறர். விசேஷ நாட்களில் எந்த கிரகஸ்தன் அயல்வீட்டு விருந்துக்கு வருவான் என்ற தைரியம் தான்!

முத்துசுப்பா சாஸ்திரி அந்த ஊர்ப் புரோகிதர். வயது அறுபது. தலையில் நாலைந்து மயிரால் கட்டப்பட்ட உச்சிக் குடுமி முடிச்சு. நெற்றியில் கீற்றுச் சந்தனமும் சுருக்கமும் சேர்ந்து ஐந்து கோடுகள். இரண்டு காதுப் பக்கத்திலும்

வெள்ளெழுத்துக் காலம் இருபது வருஷமாகத் தரித்து வரும் மூக்குக் கண்ணாடிக் கம்பித் தழும்புகள். காதில் வில்வம். அரையிலே நீர்க்காவி வேஷ்டிப் பஞ்சகச்சம். காலிலே குமிழ் பாதரக்ஷை.

சாஸ்திரி ஒரு வீட்டுவாசலில் போய் நின்று "வெங்குச் சாமி" என்று கூப்பிட்டுக்கொண்டே உள்ளே நுழைந்தார். வெங்குச்சாமி அய்யரும் "ஏன்?" என்று கேட்டுக் கொண்டே வெளியே வந்தார். வெய்யிலில் வதங்கிய வெள்ளரிப் பழம் போன்ற சரீரமும், கண்ணீரால் ஒளி மழுங்கிய வதனமும் அவர் துன்பத்தை எடுத்துக் காட்டின.

சாஸ்திரி "வெங்குச்சாமி! மத்தியானம் ஆத்திலேயே சாப்பிடலாம்" என்று சகஜ பாவத்துடன், தந்தை மகனை அழைப்பது போலக் கூப்பிட்டார். விருந்துக்குத் தான் அழைக்கிறார்; ஆனல் விருந்தாளியைக் கூப்பிடுவது போலல்ல.

என்னமோ, பாரத நாட்டில் துக்கத்தில் அடிபட்டவனுக்கு எல்லோரும் பந்துவாகப் போய்விடுகிறார்கள். பண்டைச் சிறப்புகளில் மற்றவை அழுக்கடைந்து போனலும்,பச்சாத்தாபம் என்பது மட்டும் மெருகேறிக்கொண்டே வருகிறது. நார்ப்பட்டில் சாயம் ஏற்றி அனுப்பி நமது கைத்தொழிலில் போட்டிபோட்ட சீனனுக்குக் கூட அவன் அவதிப்படும் இந்நேரத்தில் வைத்திய உதவிப்படை அனுப்புகிறோம்.

"என்னத்துக்கு வேண்டாம்" என்றார் வெங்குச்சாமி அய்யர்.

"ஆனு குழந்தையிடம் கொடுத்து இங்கே அனுப்பி விடுகிறேன்" என்றார் சாஸ்திரி.

வெங்குச்சாமி அய்யர் சிரமத்துடன் மறுக்கும் பாவனையில் கையை ஆட்டி, "வேண்டாம், உயிருள்ள வரையில் நான் பதினெட்டாம் தேதி விரதம். சாப்பாடு வேறே வேணுமா?" என்றார். அவர் கண்களில் கண்ணீர் துளிர்த்தது.

"சரி, சரி; நீ ஒரு கிறுக்கன்" என்று சொல்லிவிட்டு, அவருடைய துக்கத்தை மேலும் கிளற விரும்பாமல் வெளியேறினர் சாஸ்திரி.

உள்ளே திரும்பிய வெங்குச்சாமி அய்யர் "முனியா! குப்பாயி! இந்தப் பாவி இன்னும் உயிரோ டிருக்கிறேனே" என்று கூறிப் பெருமூச்சுடன் கட்டிலில் சாய்ந்தார்.

படகுக்கார முனியனை அந்தப் பக்கத்தில் இரண்டு வயதுக் குழந்தைகளுக்கும் தெரியும். வருஷத்தில் ஆறு மாதம் ஆற்றில் ஜலம் வரும். அதிலும் மாதத்தில் ஆறு நாளில் தான் அவனுக்குக் கூலி வரும். பாக்கி நாளெல்லாம் பட்டிகளில் உள்ள பையன்களுக்கு நீஞ்சச் சொல்லிக் கொடுப்பான். விறகு உடைத்துக் கூலி சம்பாதிப்பான். இருக்கிற காணியை உழுவான். தாய்க்கு ஊட்டித் தானும் உண்பான். சிலர் அவனைக் கொஞ்சம் கட்டுப்படாதவன் என்பார்கள்; ஆனால் முரடனல்ல.

அவனுடைய பிதிரார்ஜிதம் பரிசல். வயது ஆக ஆக அவன் தோல் எவ்வளவுக் கெவ்வளவு உறுதிப்பட்டு வந்ததோ அவ்வளவுக் கவ்வளவு பரிசல் தோல் நைந்து கொண்டு வந்தது. தான் வளர, தானே தேயும் பரிசலில் அவன் மூன்று பேர்களுக்கு மேல் ஏற்றமாட்டான். மற்றப் பரிசல்கள் முக்கால் மணியில் அக்கரை சேர்ந்தால், முனியன் பரிசல் ஒருநாழிகையில் சேரும். மற்றவர்கள் மூன்றணுவுக்குப் பரிசல் விடுவார்கள்; முனியன் நாலணுக் கேட்பான். இருந்தாலும் என்ன? போட்டி யெல்லாம் தொலைந்து அவனே அந்தப் பரிசல் துறைக்கு ஏக போகாதிபதியாக விளங்கினன். பத்து மைலில் சர்க்கார் பாலமிருக்கிறது. பாலத்தில் போகிறவர்களைப் பார்த்தால் முனியன், "பலகாரக் கடைக்குப் போயும் தோசையைத் திம்பாங்களா சாமி! ஆறுதாண்ட பரிசல்தாஞ்சாமி சொகம். அதுதான் பெருமை" என்பான்.

* * *

வெங்குச்சாமி அய்யர் பெரிய மிராசுதார். அதிலும் ராசாங்கி. அவர் குமாரி லக்ஷ்மி அக்கரைக் கிராமத்தில் வாழ்க்கைப்பட் டிருக்கிறாள். அவளுக்கு உடம்பு முடிய வில்லை யென்று தந்தி வந்தது. அய்யர் பதறிக் கொண்டு புறப்பட்டு வந்தார். காவிரியிலோ பாலத்துக்கு மேல் பாய் கிறது வெள்ளம். பரிசல் துறைக்கு வந்து சேர்ந்தார்.

முனியனின் தாயாருக்கு வலிப்பு வியாதி. "தண்ணியி லேயே பொறந்து வளர்ந்த குப்பாயிக்கு அந்தத் தண்

ணியே பகைச்சுப் போச்சு" என்று ஊரார் சொல்லு வார்கள். தண்ணீர்த் துறையைக் கண்டு விட்டால் மயக்கம் வந்துவிடும். நாலு வருஷமாக முனியன்தான் ஆற்றி லிருந்து வீட்டுக்குக் குடத்தில் தண்ணீர் கொண்டு வருவான். அவள் ஆற்றைப் பார்த்து வெகு நாளாயிற்று.

முனியன் தண்ணீர்க் குடத்தை எடுத்துக் கொண்டு குடிசை வாசலுக்கு வரவும், வெங்குச்சாமி அய்யர் வரவும் சரியாயிருந்தது. அவர் துடித்த துடிப்பைப் பார்த்து குப்பாயி குடத்தைக் கீழே வைத்துவிட்டுப் பரிசலை ஓட்டிக் கொண்டு போகும்படி உத்திரவிட்டாள் முனியனுக்கு. முனியன் தண்ணீர் கொண்டுவந்து வைத்துவிட்டுப் போவ தாகச் சொன்னான். தாய் தடுத்தாள்.

"கூலியை மாத்திரம் முன்னடி வாங்கிக் கொடுத்துட் டுப்போ. இங்கனேக் குள்ளே யாரையாச்சும் தண்ணி கொண்டாரச் சொல்லி, அரிசியும் வாங்கியாரச் சொல் றேன். நீ திரும்பி வாரத்துக்குள்ளே கஞ்சியும் காச்சி வெக்கறேன். நீ போ. சாமி மொகத்தைப் பாக்க முடி யல்லையே" என்றாள்.

வெங்குச்சாமி அய்யர் பதட்டத்தில் முனியன் வார்த்தை அவளிடம் ஏறவில்லை. அவள் கூலியை வாங் கிக்கொடு என்றவுடன் அய்யர் நாலணாவுக்கு பதில் ஒரு ரூபாயை எடுத்துக் குப்பாயி கையில் வைத்தார். முனியன் குடத்தை வைத்து விட்டுத் துறைக்கு நடந்தான். அன்று பதினெட்டாம் பேறு. ஏதோ ஒரு கிராமத்தையே சூறை யிட்டுக் கொண்டு கொம்மாளமடித்து வருகிறாள் காவிரி. வைக்கோல் போர்களையும் மரங்களையும் இழுத்துப் புரட்டிக் கொண்டு வரும் ஆற்றில் முனியன் பரிசல்போவது அற்புதக் காட்சியாக இருந்தது. புதிதாகப் பட்டணத்துக்கு வந்த கிராமவாசி, மோட்டார்களையும், பீட் போலீஸ்காரன் கையையும், டிராம் வண்டியையும் மிரண்டு மிரண்டு திரும் பிப் பார்த்து வீதியைக் கடக்க முயலுவது போல உயிருக் குப் பயந்து ஓடுகிறது பரிசல். பரிசல் பாதியாற்றில் வந்து கொண் டிருந்தபோது அவனுக்கு இன்னொருவரைப் பற்றிய யோசனை தோன்றியது.

தன்னுடைய தாய் பசி தாங்கமாட்டாளே. அக்கம் பக்கத்திலும் வீடுகள் இல்லையே. அரிசியைக் கண்ணால்

கண்டவுடன் தாய் ஆற்றுக்கு வந்தால் என்ன விபரீதம் நேருமோ என்ற பயம் எழுந்தது. ஆனால் இப்போது என்ன செய்யமுடியும்! குழம்பிய ஆற்றில் அதனிலும் குழம்பிய மனத்துடன் பரிசலை விட்டான். ஒரு மணி நேரத்தில் பரிசல் அக்கரை போய்ச் சேர்ந்தது.

* * *

பத்துநாள் கழித்து, சௌக்ய மடைந்த லக்ஷ்மியுடன் கிராமத்துக்குத் திரும்பினர் வெங்குச்சாமி அய்யர். வரும் போது அக்கரையில் அகப்பட்ட ஒரு பரிசலில் ஆற்றைக் கடந்தார். ஊருக்கு வந்தவுடன், தன் சமயத்துக்குப் பரிசல் விட்ட முனியனுக்கு ஒருஜோடி சாய வேட்டியும், குப்பாயிக்கு ஒரு சேலையும் வாங்கி வரச்சொல்லி எடுத்துக் கொண்டு முனியன் வீட்டுக்குப் புறப்பட்டார்.

முனியன் வீட்டு வாசலில்வந்து நின்று கூப்பிட்டார். பக்கத்தில் படுகையில் வேலை செய்துகொண் டிருந்த கிழவன் வந்து அவர் எதிரில் நின்ருன்.

"எங்கேடா முனியன் ?" என்று கேட்டார் அய்யர்.

"ஐயோ! அந்தக் கதை தெரியாதுங்களா ? பய பரிசலை ஓட்டிக்கிட்டுப் போயிட்டான். கிழவி எங்கிட்ட ஒரு ரூவாயைக் கொடுத்து அரிசி வாங்கியாரச் சொன்னு. கிழவிக்குப் பசி ஒரு பக்கம். எங்க வீட்டுக் குட்டியை கூட்டிக்கிட்டுக் கொடத்தையும் தூக்கிக்கிட்டு ஆத்துக்குப் போனு. குட்டியாலே கொடம் தூக்கமுடியல்லே. அவளே எறங்கினு." என்ருன் கிழவன்.

"உம்; அப்பறம் ?"

"அப்பறமென்ன ? அதுதான் மயக்கம் வந்திருச்சு. தண்ணீலெ சாஞ்சுட்டா. காவேரியாத்தா இழுத்துக்கிட்டா கிழவியை."

"அய்யய்யோ! முனியன் சங்கதி !"

"அவன் சங்கதியா ? வந்தான்; பாத்தான். குட்டி சொல்லிச்சு. விழுந்து புரண்டான்; தலையிலே அடிச்சுக் கிட்டான். படுகையிலேயும் கரையிலேயும் ஆத்தா ஆத்தான்னு கதறிக்கிட்டு ஓடினன். பயித்தியம் புடிச்சமாதிரித் திரிஞ்சான். கடைசியிலே நாலுநாள் முந்தி ஆத்துக்கரையிலே நிண்டுக்கிட்டு "காவிரியாத்தா! வருசமெல்லாம் ஒன்னைக் கட்டியாண்டு படகு ஓட்டினேன். என்னைப் பெத்த

வள்னுகூட மதிக்காமெ ஆத்தாளெ முளுங்கிட்டே. இந்தா என்னெ முளுங்கு பாப்பம்"ன்னு சொல்லிட்டுத் தண்ணிக் குள்ளரப் பாஞ்சுட்டான். "இந்தச் சீமையிலேயே அவன் தான் பெரிய நீச்சுக்காரஞ் சாமி. இருந்தும், என்னமோ" என்று இழுத்து நிறுத்தினன் கிழவன்.

வெங்குச்சாமி அய்யருக்கு நாவெழவில்லை. "சாமி! பெரிய மனுசி வாயாலே சொல்ரேன் சாமி. ஒங்க புள்ளே நல்லா பொளெச்சு எழுந்திருச்சு நல்லா இருக்கும்" என்று இருகையையும் கூப்பி குப்பாயி வாழ்த்திய காட்சி, அவளது கடைசி வாழ்த்து அப்பொழுது அவர் கண்முன் தோன் றிற்று. 'போ போ' வென்று அவள் முனியனைப் பிடரி யைப் பிடித்துத் தள்ளிய வேகத்துடன் பாய்ந்தது சிந்தனை.

* * *

இன்று பதினெட்டாம் பேறு. லக்ஷ்மி பிழைத்து எழுந்து 'நல்லா' இருக்கிறள். ஆனல் என்ன விலையில்?

முத்து சுப்பா சாஸ்திரி விருந்து சொன்னது நினைவு வந்தது. இரக்கமும், ஏளனமும் கலந்த புன்னகை யொன்று நொண்டி நொண்டிக் கொண்டு படர்ந்தது அவர் முகத்தில்.

# கலங்காப் புலி

இருபது வருஷங்களுக்கு முன்பு அந்த வடக்குப் பார்த்த வீட்டுத் திண்ணையில் மணலைப் பரப்பி, பிள்ளைகள் அ, ஆ, எழுதிக்கொண் டிருப்பார்கள்.

இப்பொழுது நெல்லுப்பட்டரை போட்டிருக்கு மிடத்தில், முந்திரி லெக்கம் முறை வைப்பதில் தவறிய பையன்கள் வெய்யிலில் நின்று தண்டனை அனுபவிப்பார்கள்.

ஒடிந்த மூக்குக் கண்ணாடி, பட்டை உரித்த பூவரசங் குச்சி, பத்து ஏடு, ஒரு சூண்டு எழுத்தாணி சமேதராக ஆறுமுகமய்யர் குரு ஸ்தானத்தில் வீற்றிருப்பார்.

அந்த சமயம் அவர் இந்த ஊருக்கு வந்த புதுசு.

பஞ்சனத அய்யரின் தமக்கை புருஷன் ஆறுமுக மய்யர். அவருக்குக் கல்யாணமான போது கொடுத்த மஞ்சக்காணி மாவடிச்செய் நிலத்தை விவசாயம் செய்து, அந்த வரும்படியுடன் பள்ளிக்கூடமும் வைத்து, காலக்ஷேபம் செய்து வந்தார்.

பட்டா மாறுதல், மனு, பிராது, ஒத்தி, அடமானமுறி எல்லாம் எழுதுவார். அவருக்குக் கொஞ்சம் இங்கிலீஷும் தெரியும். தந்தி எழுதுவார், தந்தி படிப்பார், தந்திக்கு ஓரணாக் கூலி என்று திட்டம் போட்டு வாங்கமாட்டார். உபாயமாக முக்குறுணி நெல் பெற்றுக்கொள்வார்.

அவர் தந்தி எழுதுகிற தோரணையே அலாதி. அவருக்கு அவ்வளவுதான் தெரியும். முத்துராக்கனை உடனே அனுப்பவும் என்பது தந்தி விஷயமானால், உடனே அனுப்பவும் என்பதற்குச் சரியான இங்கிலீஷ் பதங்களை எழுத வேண்டுமே என்று பிரமிக்க மாட்டார். "முத்துராக்கனை உடனே அனுப்பு" என்பதை அப்படியே இங்கிலீஷ் அட்சரங்களில் எழுதிவிடுவார்.

எப்படியோ, பணம் சேர்ந்துவிட்டது இப்பொழுது மிராசுதார்.

பஞ்சனதய்யர் தந்த மஞ்சக்காணி வயலும் சேர்ந்து நஞ்சை, புஞ்சை எல்லாம் மூணுவேலிக்கு மேலிருக்கிறது.

முன்னூறு வேலிக்குள்ள அகம்பாவமிருக்கிறது; மூவாயிர வேலியாக்கிவிட வேண்டுமென்ற ஆசையுமிருக்கிறது.

"இந்த ஒரு பொண்ணுக்கே ஊர் முதலெல்லாம் கொள்ளையடிக்கிறன். ஒரு புள்ளையிருந்துதுன்னு ஊரையே அழிச்சுப்பிடுவான்" என்று குளத்தங்கரை மகாநாடுகளில் அவரைப்பற்றி பிரஸ்தாபம் நடக்கும்.

அவருடைய பெண்ணுக்கு வயது பத்து. பெயர் மங்களம்.

பஞ்சனதய்யர் புதல்வன் தஞ்சாவூரில் படிக்கிறன். மங்களத்தின் தாயாருக்கு, மருமகனை மாப்பிள்ளையாக்கிக் கொள்ள வேண்டுமென்ற யோசனை.

கல்யாண விஷயத்தைப்பற்றி ஆறுமுகமய்யர் யோசிக்கவே யில்லை. எப்படி யோசிப்பது? விவசாயத்தைக் கவனிக்கவேண்டும். அவருடைய அதிருஷ்டம் பண்ணைக்காரன் நிலைப்பதில்லை. வேலையைப் பார்த்துவிட்டு ஐயர் தயவிருந்தால் போதுமென்று அவர்கள் போவதில்லை. பணம் பணம் என்று கேட்கிறார்கள். ஆறுமுகமய்யருக்கு அது பிடிக்காது. இந்த வேலையைப் பார்க்காவிட்டால் சும்மா கிடக்கவேண்டியவர்கள் தானே. "கம்பெனி வேலையா பாழைபோறது. பண்ணைக்கார வேலைக்கு கணக்குப் பார்த்துக் கொடுத்துக் கட்டுமோ?" என்பார் ஆறுமுகமய்யர்.

அதோடு மாத்திரமா? "இந்தப் 'புடிக்கிப்புடி நமசிவாயம்' என்ற எண்ணம் இருக்கிறவரையிலே இந்த வூர்க் குடியானவன் உருப்படரது மண்ணுதான். இதை வேணு எழுதி வச்சுக்குங்கோ" என்று தீர்க்க தெரிசனமும் சொல்லுவார். இது ஒவ்வொரு வருஷ விவசாயமும் முடிந்தவுடன் சகஜமாகக் கேட்கும் குரல்.

இதற்கு நேர் எதிரிடை பஞ்சனதய்யர். கலங்காப்புலி அவருடைய பண்ணையாள். ரொம்ப விசுவாச முள்ளவன். அதைச் சொன்னால் போதுமா; பஞ்சனதய்யரும் அப்படி நடத்தினர்.

அவனும், சாகுபடியைப் பற்றிய கவலை கொஞ்சங் கூடப் பஞ்சனதய்யருக்கு ஏற்படாத வண்ணம் உழைத்து வந்தான்.

கிழமேல் வண்டிப்பாதை; பாதைக்கு வடக்கே வாய்க்கால். வாய்க்காலுக்கு அடுத்தது மாவடிச்செய். ஒரே வயல்; அஞ்சுமா நிலத்தில் நடுவில் வரப்புப் போட்டு, மஞ்சக்காணி நிலம் பிரித்துக் கொடுத்திருந்தார்கள். பஞ்சனதய்யர் பாதிக்கு தெற்கு மாவடிச்செய் என்றும், ஆறுமுகமய்யர் பாதிக்கு வடக்கு மாவடிச்செய் என்றும் பெயர்.

* * * *

பஞ்சனதய்யர் உஷத்கால தாம்பூலந் தரித்துக்கொண்டிருந்தார். கலங்காப் புலி கையைக் கட்டிக்கொண்டு எதிரில் நின்றான்.

"வருஷந் தவரிச்சின்னலும் வம்பு தவர்ரதில்லே. நெதம் இதுவே வளமையாப் போச்சு," என்றான் கலங்காப் புலி.

அன்று காலையில் அவன் வழக்கம்போல் வயலுக்குப் போனான். நடுவரப்பு உள்வாயிலிருந்த அவுரிச் செடிகளையும், நீர்முள்ளிப் புதர்களையும் காணவில்லை. உதியம் போத்துக் கீழே விழுந்து கிடந்தது. அவனுக்குப் பதை பதைத்தது. கவனித்தான். செடிகளுக்கு மேல் புது மண் விழுந்து அமுக்கிக் கொண்டிருப்பதையும். தலைக்கொண்ட சம்பா நாத்தில் வெட்டு மண் கிடந்து அமுக்கி இருப்பதையுங் கண்டான். மண்ணீரம் காயவில்லை.

வரப்பு வெளிவாயில் அப்பொழுதுதான் மண் வெட்டப்பட்டிருந்தது. இது ஆறுமுகமய்யரின் வேலைதானென்றும், மாப்பிள்ளை அய்யர் வரப்பை வெட்டி வயலைச் சேர்த்திருக்கிறார் என்பதையும் தெரிந்துகொண்டான்.

ஆத்திரத்துடன் எஜமானனிடம் வந்து அவரையெழுப்பி, இந்தச் சங்கதியைச் சொன்னான்.

வருஷா வருஷம் அந்த வயல் விஷயத்தில் சச்சரவுகள் நடப்பதில் குறைவில்லை. பஞ்சனதய்யர் யோசித்தார்.

"அதுதான் தெரிஞ்சிருக்கே...............என்ன செய்யலாங்கறே," என்றார்.

"வேறே யாராவாச் சுமிருந்தா, எனக்காச்சு அவனுக்காச்சுன்னு பாத்திருப்பேன். எசமானுக்கு, சொந்தங் கிறதை நெனைக்கரப்போ......."

"சொந்தமா? எதுலெ சொந்தம்?" என்று இடைமறித்தார் அய்யர்.

"இனிமேத் தெரியும். ஒம்பாடு பதினுயிரமுடா பாத்துக்கடா பயலேன்னு சொல்லிருங்க. அந்த மம்புட்டி புடிச்ச கை மணிக்கட்டையைப் பேத்துப்புடறேன்" என்ருன் கலங்காப்புலி. புகையிலையைச் சுண்டித் தட்டிவாயில் போட்டுக்கொண்டார் பஞ்சனதய்யர்.

"ஏண்டா, திருடனை ஓட விட்டுவிட்டு தடம் பார்க்கிரே? இதைச் செய்துப்பிட்டு வந்துன்னுடா எங்கிட்டச் சொல்லணும் நீ? போக விட்டுட்டு வீராப்புப் பேசருன்! இளிச்ச வாப் பயல்!" என்று கோபித்தார்

........எம் பண்ணைக்காரனு யிருந்தா வாலே ஒட்ட...........

கலங்காப்புலிக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. எஜமான் இந்த மாதிரி சொல்வாரென்று கனவிலும் அவன் எதிர்பார்க்கவில்லை. அவனுடைய வேலையில் குற்றங்கண்டு பிடிப்பதென்பது அவனுக்குப் பொறுக்காது. தான் செய்தது பிசகென் றெண்ணினுன். அவனும் பதிலுக்குப் பதில் செய்திருப்பான். எஜமானனுடைய கோபம் வந்துவிடுமோ வென்று பயந்தான்.

அப்படி ஒண்ணுமில்லீங்க. "ஏண்டா பயலே, ஒரு வார்த்தை சொல்லப்படாதான்னு கேப்பியளேன்னு பாத்தேன். அஃலாமே ஆளும் கையிலே சிக்கல்லே. சாயங்காலம் பாருங்க, இந்தக் கலங்காப்புலிப் பய கைவரிசையெ" என்று சொல்லிவிட்டுச் சென்ருன்.

அன்று பகல் கஞ்சி குடிக்க அவன் வீட்டுக்குப் போகவில்லை. நேரே வயலுக்குப் போனுன். அரைக்கால் முழம் வரப்பை வைத்துக் கொண்டு, மீதம் எல்லாவற்றையும் உள் (வரப்பில்) இருந்து வெட்டி வெட்டி வடக்கு மாவடிச் செய்யில் போட்டான். இப்போது பஞ்சனதய்யர் நிலம் கீழ் மேலாய் முக்காலடி விரிந்து காட்டியது.

* * * *

அக்கிரஹாரப் பஞ்சாயத்து முன்னிலையில் ஆறுமுகமய்யர் வகுத்த பாதையில் தான் கலங்காப்புலி சென்ருனென்றும், அவனைக் கண்டிக்க முடியாதென்றும் பஞ்சனதய்யர் கண்டிப்பாய்ச் சொல்லிவிட்டார்.

கலங்காப்புலியோ, "செஞ்சவனுக்குச் செய்யறது செத்தபெறகா? எனக்குத் தோணிச்சு. செஞ்சுட்டேன். இதுலெ புத்தி வந்தாச் சரி....இல்லே....ஓங்கற கை மேலே

நிக்குது; பாத்துக்குவம்" என்று சொல்லி விட்டான்.

அத்துடன், தன்னைக் கூப்பிட்டு விசாரித்ததே நியாய மில்லை யென்றும், "எங்கய்யரு முகத் தாச்சணியத்துக் காக வந்தே"னென்றும் பஞ்சாயத்தாரிடம் சொல்லிவிட்டுச் சென்றான்.

கலங்காப் புலி நியாயம் பேசியது பஞ்சாயத்தார்களுக் குப் பிடிக்கவில்லை.

"ஊரிலே பணக்காரப் பெரிய மனிதர்களிருக்க, எத்தனையோ லா ஏஜண்டுகள் இருக்க, ஒரு குடியானவன் ஞாயத்தைப் பற்றிச் சொல்லுவதா? தற்குறிப்பய! மழைக்கி ஒதுங்க ஒரு குச்சுக் கிடையாது. அந்தப் பயல் ஞாயத்தைப் பத்திச் சொல்றான். நீங்கள்ளாங் கேட்டுக்கிண்டு இடிச்ச புளிமாதிரி இருக்கியள்" என்று ஆறுமுகமய்யர் பஞ்சாயத்தை இளக்காரம் செய்துவிட்டு வீட்டுக்குச் சென்றார்.

கலங்காப்புலிக்கு, தான் ஏழை என்றும், தான் பிறக்கும் பொழுதே அடிமை யென்றும், தன் தோளில் வெள்ளை வேஷ்டி யேறக்கூடாதென்றும், தன்னிடம் இருக்கும் சிந்தனை என்ற மனித அம்சம் ஒரு குறையாகவே கருதப் படுமென்றும், நடுக்கடலில் அலைபடும் கட்டுமரம்போல் காற்றடிக்கிற பக்கமெல்லாம் சஞ்சாரம் செய்து நாலு பேருக்கு நல்லவனாக நடக்கவேணு மென்றும், இது போன்ற இதர முக்கியமான விஷயங்களும் கொஞ்சங் கூடத் தெரியாது.

இவன் வரப்பை வெட்டும்போது "முண்டனுக்கு ரெண்டாள்" என்றபடி ஆறுமுகமய்யர் நான்கு ஆட்களுடன் வந்து ஏதேனும் விபரீதங்கள் நடத்தியிருந்தால் என்னவாகி யிருக்கும்!

கலங்காப்புலிக்குத் தெரியும் என்பது மட்டும்தெரிந்தே தான் வரப்பை வெட்டி அவர் வயலிலே போட்டான்.

கல நெல்லும் ஒரு ரூபாயும் மாதச் சம்பளமுள்ள அவனுக்கு எங்கிருந்து இவ்வளவு துணிச்சல்! சொத்து அவனுடையதல்ல; உத்யோகமோ நின்றவரையில் நெடுஞ் சுவர்; வேண்டாத பெண்டாட்டி வாழ்க்கை அவனது. கைபட்டால் குற்றம், கால் பட்டால் குற்றம். சூலத்திலே

வடக்கே பார்க்க ஏர் பிடித்தான், மரண யோகத்திலே தண்ணீரைத் திறந்து விட்டான், என்று ஏதாவதொரு காரணத்தைச் சொல்லி பஞ்சனதய்யர் எந்த நேரத்திலும் அவனை விலக்கிவிட முடியும். அதோடு எதிரியோ பிரபல மிராசுதார். அய்யரின் தமக்கை புருஷன்; மாப்பிள்ளை. அவனுக்கு அந்தக் கவலைகளெல்லாமில்லை.

கலங்காப்புலியிடம் ஒப்புவித்துக் காப்பாற்றும்படி பஞ்சனதய்யர் கட்டளையிட்ட குழந்தை மாவடிச் செய்.

அதில் நாத்து முளைப்பதைக் கண்டு மகிழ்வான். பொதி கட்டுவதைக் கண்டு களிப்பான். தலைதூக்கி நிற்கும் பயிரில் விழுந்து வரும் காற்றின் மழலை மொழி கேட்டு ஆனந்திப்பான். மணிமுடி தாங்கிய பயிர் வா, வாவென்று தலையசைத்துக் கூப்பிடுவதைக் கண்டு குதூகலம் கொள் வான். அவனுடைய உலகம் மிகச் சிறியது. சத்திய மென்னும் மணம் பொருந்திய புஷ்ப மரங்களைக் கொண்ட ஒரு வேலியினிடையே, நன்றி மறவாமையென்னும் குடிசை யில், உழைப்பென்னும் மைதானத்துடன், வீர சரீரமாகிய அவன் வசிக்கிறுன். அதற்குமேல் அவன் வாழ்க்கை விரியப்போவதில்லை. விரிய வேண்டுமென்று அவன் விரும் பவுமில்லை.

பஞ்சனதய்யர் காலில் முள் குத்தினல், தன் கண்ணில் ஆணி யடிக்கப்பட்டதைப் போலெண்ணுவான். பஞ்சன தய்யர் வெற்றிலை போட்டுக்கொண்டால், கலங்காப்புலி பசி தீர்ந்து ஏப்பம் விடுவான். விசுவாசத்தில் அவன் ஒரு நாய். எஜமானன் ஏவுதலை எதிர்பார்த்துக் கொண்டே யிருப் பான்.

அதிலும் நியாயமுண்டு. சாதாரண நாயை யார் பேரில் வேண்டுமானுலும் ஏவலாம். இவனையோ, திருடன் பேரில் மாத்திரந்தான் ஏவ முடியும்.

இரண்டு பண்ணைக்கும் விவகாரம் முற்றியது.

ஆடி மாதம் பதினைந்தாந்தேதி :—

பஞ்சனதய்யரின் குற்றமற்ற மாடுகள் பவுண்டிலிருந் தன.

அடைத்தது ஆறுமுகமய்யர்.

ஆடி மாதம் பதினறுந்தேதி :—

வடக்கு மாவடிச் செய்யில் மாட்டை மேய்த்துக்கொண்டு நின்றான் கலங்காப்புலி. ஆறுமுகமய்யரிடம் அடிபட்டான்.

பதினேழாந்தேதி :—

அடிபட்ட கலங்காப்புலி, அதற்காகப் பஞ்சனதய்யரிடம் வசவும் வாங்கினன்.

பதினெட்டாந்தேதி :—

வடக்கு மாவடிச் செய்யில் பயிர்கள் தலைசாய்ந்து கிடந்தன. தண்ணீரை வெட்டி வடித்துவிட்டவன் கலங்காப்புலி.

ஸரஸ்வதி பூஜை :—

கலங்காப்புலியின் குடிசையில் நெருப்பு பற்றி எரிந்தது.

விஜயதசமி :—

நெல்லுப் பட்டரையிருந்த இடத்தில் பொரி பொறுக்கித் தின்ற சிறுவர்களை ஆறுமுகமய்யர் அடித்து விரட்டினர்.

இருபத்தோராந்தேதி :—

கலங்காப்புலி கையைக் கட்டிக்கொண்டு பஞ்சனதய்யர் முன் நின்றான்.

"ஏண்டா பயலே, பத்து ஆள் வேணும்னுச் சேத்துக்க வேன்?" என்றார் அய்யர்.

கல: "என்னத்துக்குங்க, நான் பொணமாவா போயிட்டேன்?"

பஞ்: "இல்லே........இந்த மாதிரி நீளத்துலே விட்டுக்கிண்டே போனக் கடேசிலே, அது, ஆட்டைக் கடிக்சு, மாட்டைக் கடிச்சு, அய்யனரையும் சேத்துக் கடிச்சு துன்னு வந்துடும்."

கல: 'சும்மா இருங்க, எசமான். கொஞ்சம் வேடிக்கை தான் பாருங்களேன்! அவன் எவன் ஆனைக்கிப் பொறந்தவன்! இந்த நாய்க்குட்டிக்கு ஒத்த மூக்குலே மூச்சு இருக்கிற வரையிலே உங்களுக்கு யோசனேயே வேண்டாம்."

இது இங்கே.—

"அந்தப்பயல் இந்த ஊருலே யிருக்கிற வரையிலே, நம்ம ஒண்ணும் செய்ய முடியாது" என்ருர் ஆறுமுகமய்யர்.

"இந்தச் சமயத்துலே யெல்லாம், பணத்தைப் பணமாப் பாக்கக் கூடாது. செலவுக்கு இல்லாத பணம் செம்பத்துக்கா? ஆளுக்கு ரெவ்வெண்டு ரூபாய் விட்டெறிங்க, சாமி" என்ருன் குடிகாரன்.

இது ஆறுமுகமய்யர் கோஷ்டியில்.—

* * * *

கலங்காப்புலி வீட்டுக்குப் போய்க்கொண் டிருக்கிருன். ஆறுமுகமய்யர் எதிரில் வந்துகொண் டிருக்கிருர். ஆறுமுக மய்யர் காரி உமிழ்ந்தார். கலங்காப்புலி கனைத்துக் கொண்டான்.

ஆறுமுகமய்யர்: ஹூம்....(செருமிக்கொண்டே) அவ்வளவு ஊத்தமா?........எம் பண்ணைக்காரனு யிருந்தா வாலை ஒட்டப்புடிச்சுக் கத்திரிச்சிருப்பேன்.

கலங்காப்புலி: "எங்க எசமானுயிருந்தா, அன்னிக்கே இதெல்லாம் அக்கிரமம்னு சொல்லி யிருப்பேன்" என்ருன்.

"அந்த மாதிரி மடையந்தான் பண்ணைக்காரன் யோசனையைக் கேட்பான்."

"இந்த மாதிரிப் புத்தியுள்ளவுகள்ளாம் சட்டை அளுக்காகப் போனப்புறம் தான் ஏண்டா சகதிலே கல்லை விட்டெறிஞ்சோம்னு யோசிப்பாக." இனி நேருக்கு நேர்.

ஆறு: அயோக்கியத்தனமாப் பேசினல் பல் ஒடஞ்சு போகும்.

கல: மருவாதிக்கித்தானே வேட்டிகட்டறது. வேண்டாம்....வயலோடே நிக்கட்டும்னு பாத்தேன்....ஒங்களைத் தான் எசமான்....நேருக்கு நேரா சண்டைக்கி நிக்கணும் னியன்னலும் சரிதான்."

ஆறுமுகமய்யருக்கு வந்த கோபத்துக்கு அளவில்லை. அவர் வைது கொண்டே யிருக்கவேண்டும். கலங்காப்புலி கேட்டுக்கொண்டே யிருக்க வேணுமென்ற அவர் அபிப்பிராயத்தைக் குலைப்பதாக இருந்தது அவன் போக்கு.

"ஏண்டா, அதிகப் பிரசங்கிப் பயலே! உங்களையெல்லாம் இந்த ஊருலே குடிவச்சது பிசகு" என்ருர் அதட்டலாக.

"அதைச் சொல்லுங்க, சாமி, நூறு தடவை. நாங்க உழவும் மாட்டோம்; நெலத்தை உழுது சாகுபடி செய்யாட்டி இந்தக் கலகமெல்லாம் ஏது? போங்க சாமி. நீங்க போங்க. கல்லும், கல்லும் மோதினுப் பொறி பறக்கும்! கண்ணாடி வந்து மோதிச்சுனு....போங்க நீங்க, வீட்டுக்குப் போயி உங்க சிப்பாய்களெ படையெடுத்துக்கிட்டு வரச்சொல்லுங்க" என்று கலங்காப்புலி நையாண்டியாக சொல்லிவிட்டு அவரைப் பொருட்படுத்தாமலே நடந்தான்.

நூறு ஆறுமுகமய்யர் சேர்ந்து எதிர்த்தாலும் ஒரு கலங்காப்புலி அதற்கு வகை செய்து விடுவான். இந்தத் தடவை அவன் புத்தியும் சொல்லிவிட்டுப் போகவே, ஆறுமுகமய்யர் வெகுண்டார். அவருடைய மனதில் வெகு நாளாக ஒரு கற்பனை ஓடிக்கொண்டிருந்தது. அந்த கற்பனைப்படி நடந்துவிட்டால் கலங்காப்புலிக்குக் காப்புப் போட்டு விடலாம் என்று எண்ணியிருந்தது வீணுகி விட்டது.

கலங்காப்புலிக்கு பலம் மாத்திர முண்டு. ஆறுமுகமய்யருக்கோ, பணமிருக்கிறது.

பலத்தின் விளையாட்டெல்லாம் பத்து கஜந்தான். பணம்!

ஆகவேதான் கலங்காப்புலியின் கை தன்மேலே பட்டுவிட வேண்டுமென்று அவர் நினைத்ததும். அதற்காகவே, இன்று அவனைக் கண்டும் காணுததுபோல் காரி உமிழ்ந்து வலுச்சண்டைக் கிழுத்ததும்.

இந்தத் தடவையாவது கலங்காப்புலி அடித்துவிடுவான் என்றெண்ணினுர். அதுவும் நடக்கவில்லை.

யோசித்துக்கொண்டே நடந்தார். வீட்டு வாசல் தாண்டி வடக்கே ஒரு பர்லாங்கு போய் மறுபடியும் திரும்பி வீட்டுக்கு வந்தார் என்ற பிரஸ்தாபம். அவ்வளவு யோசனை.

* * * *

ஆறுமுகமய்யரும் ஊரை இரண்டுபடுத்தி வேடிக்கை பார்க்கும் நான்கு கூத்தாடிகளும் தெற்கு மாவடிச் செய்க்குள் நின்று கதிர் பறியாத பயிர்களை அறுவடை செய்துகொண்டிருந்தார்கள்.

பாலில் ஊறவைத்த ஓமம் போன்ற தாவள்யமான கதிர்ப் பொதிகள் கருக்கரிவாள்களினுல் நறுக் நறுக் கென்று சாய்ந்தன.

இந்தப் பால்பிடித்த பயிரை அறுப்பவர்களும் விவசாயிகள்தான்!

கலங்காப்புலி கெட்ட கனவுகள் கண்டுகொண்டே வீட்டில் படுத்திருந்தான். திடீரென்று எழுந்தான்.

பகல் முழுவதும் உழைத்த குடியானவன் இரவில் அயர்ந்து தூங்குவான். அவன் கனவு காணுவதே இல்லை. சிரமமின்றி உண்டு ஈசிச்சேரில் சாய்ந்துகொண்டேயிருந்து மலச்சிக்கலுக்கும், தாதுபுஷ்டிக்கும், மருந்து சாப்பிட்டுக் கொண்டிருக்கும் 'சிலர்' கனவு காணுவதும், கனவில் கனவு காணுவதும் சகஜம்.

விவசாயிக்கு அப்படியல்ல.

விவசாயி கனவை தேவர்களின் எச்சரிக்கையாக எண்ணுவான். உடனே அதன் பலனை அறியவும், அடையவோ அல்லது விலக்கவோ முயற்சிப்பான்.

குற்றங் கோளாறு இருக்கிறதா வென்று உடுக்கடித்துக் கேட்பான். இப்பொழுதோ கலங்காப்புலி சவுகரியமாக இருக்கிறுன். கெடுதல் ஏதேனும் வந்திருந்தால் நிலத்தில்தான் வந்திருக்க வேணுமென்று எண்ணினுன்.

விழுந்தடித்துக் கொண்டு வயலுக்கு ஓடினுன். ஐந்தாறு கரிய உருவங்கள் குனிந்து குனிந்து ஏதோ செய்வதைக் கண்டான்.

குதித்தான் வயலுக்குள். புலிபோலப் பாய்ந்து எதிர்ப்பட்டவர்களை எல்லாம் கைகொண்ட மட்டும் சாடினுன். 'சரக்' 'சரக்' கென்று அரிவாள் உராயும் சத்தத்தைக் கேட்டான். தன்னுடைய ஆபத்தை உணர்ந்தான்.

சிறிது விலகிக்கொண்டு யோசித்தான்.

"....ஐயோ—செத்தேன்" என்று அலறினுர் ஆறுமுகமய்யர்.

"ஆத்தே! சாமியா........?" என்றுன் அவருடைய ஆள்.

மாஜிஸ்திரேட் கோர்ட்டு வாசல் புளிய மரத்தடியில் ஆறுமுகமய்யரின் ஆட்கள் உட்கார்ந்திருந்தார்கள்.

தலையிலே முண்டாசைக் கட்டிக்கொண்டு கோர்ட்டுக்கும், வக்கீல்கள் அறைக்கும், குறுக்கும் நெடுக்குமாக அலைந்துகொண் டிருந்தார் பஞ்சனதய்யர்.

மூன்றே கால் மணிக்கு கைகளில் விலங்குடன் கலங்காப்புலி கோர்ட்டுக்கு அழைத்துச் செல்லப்பட்டான்.

கிருமினல் கேசில் குற்றவாளி தரப்புக்கு ஆஜராவதில் பிரசித்தி பெற்ற வக்கீல் ஒருவரே கலங்காப்புலி தரப்புக்கு ஆஜராகி இருந்தார்.

அன்று விசாரணையில், கலங்காப்புலி, தன் கையில் அரிவாளை எடுத்துப் போகவில்லை யென்றும் ஆறுமுகமய்யரை தான் குத்தவில்லை யென்றும் எவ்வளவோ சொன்னான். ஆனால் அவனுக்குச் சாட்சி யேது?

ஆறுமுகமய்யர் ஆஸ்பத்திரியில் கிடந்தார். பிழைத்து விடுவாரென்று நம்பிக்கை யேற்படுவதற்கு மூன்று நாட்களாகி விட்டன.

பஞ்சனதய்யரும் அவர் மனைவியும், பஞ்சனதய்யர் தமக்கையும், தமக்கை பெண்ணும் கூடியிருந்தார்கள்.

பஞ்சனதய்யர் பையனும் லீவு வாங்கிக்கொண்டு வந்திருந்தான்.

ஆறுமுகமய்யர் கண்ணை விழித்தார். "வாயிதா நடந்துதா?—என்ன முடிவாச்சு?" என்று கேட்டார்.

பஞ்சனதய்யர் வந்து பக்கத்தில் நின்றார். "ஆறு மாதம் ஜெயில்...." என்று சொல்லிக் கீழே குனிந்தார். அவரது கண்களிலிருந்து இரண்டு சொட்டு ஜலம் ஆஸ்பத்திரிச் சிமிண்டுத் தரையில் சொட்டியது.

ஈன ஸ்வரத்தில் "பஞ்சனதம்" என்றார் ஆறுமுகமய்யர். "....நான் பொழச்சுடுவேனா?" என்று கேட்டார்.

கவலைப் படாதீங்கோ. பொழச்சுடுவியன்னு டாக்டர் சொல்றார்."

"பஞ்சனதம்....உட்காரு....இங்கேவா" என்று, ரகசியமாக "கலங்காப்புலிதான் குத்தினான்னு நிச்சயமாகச் சொல்ல முடியாது. அவன் கையிலே, அரிவாளிருந்துதான்னு நான் பாக்கல்லே. எனக்குக் கூட கருப்பன் மேலே சந்தேகம்...."

"அய்யய்யோ! அப்போ வாக்கு மூலம் ஏன் அப்படிக் கொடுத்தியள்? கருப்பனையும் காணமே பத்து நாளாய். எங்கேயோ ஓடிப் போயிட்டானுமே!" என்று கூவினர் பஞ்சனதய்யர்.

ஓடி இருக்கலாம். நான்....பிழைக்க மாட்டேனேன்னு ....சந்தேகமா இருந்தது....நாமே சாகப்போறேம்—எதிரி வாழ்வானேன்? என்று நினைத்தேன். கலங்காப்புலி குத்தினன்னு சொன்னேன்" என்றார் ஆறுமுகமய்யர் மரண பயச் சோர்வில்.

பஞ்சனதய்யர் பிரமித்து நின்றார். ஒரு புறத்தில் அப்பீல் யோசனையும், ஒரு புறத்தில் 'அத்திம்பேரு'க்கு தண்டனை வந்துவிடுமோ என்ற பயமும், அல்லல் படுத்தின.

தை மாதம் 5-ம் தேதி சிரஞ்சீவி ராகவனுக்கும் சௌபாக்கியவதி மங்களத்துக்கும் கலியாணம் நடைபெற்றது.

ஆறுமுகமய்யரும், பஞ்சனதய்யரும் பிரப்பம் பாயி லுட்கார்ந்து சிரித்துப் பேசிக்கொண் டிருந்தார்கள்.

மூன்று மாதமாக ஜெயிலில் அவதிப்படும் கலங்காப் புலியின் ஞாபகம் இருவருக்கும் வந்தது.

கலங்காப்புலி கலகங்கள் நடந்திராத பக்ஷத்தில் பஞ்சனதய்யரும் ஆறுமுகமய்யரும் ஒன்று சேர்ந்திருக்க மாட்டோமென் றெண்ணினர்கள்.

கத்திக் குத்துப் பட்டது, ஆஸ்பத்திரிக்குப் போனது, அங்கே பஞ்சனதய்யர் அவசியம் வரும்படி நேர்ந்தது, இவைகள் எல்லாம் நன்மைக்காகவே என்று தோன்றியது ஆறுமுகமய்யருக்கு. அன்றைய தினம் சம்பந்திக ளிருவரும் சேர்ந்து ஒரு தீர்மானமும் செய்துகொண்டனர். இருவர் மனமும் விரிந்து உயர்ந்த நிலையில் செய்துகொண்ட தீர்மானம்.

மூன்று மாதம் கழித்துக் கலங்காப்புலி வந்து சேர்ந்தான்.

பஞ்சனதய்யர் மனமாரத் தழுவிக் கொண்டார். யோசனைப்படி வடக்கு மாவடிச்செய், தெற்கு மாவடிச் செய் இரண்டினுடைய கிரயப் பத்திரங்களும், கலங்காப்புலி கையில் தூக்கிக் கொடுக்கப்பட்டன.

பண்ணையாள் கலங்காப்புலி ஐந்து மா நிலத்துக்கு அதிபதியானன்.

இரண்டு நிலங்களுக்கும் இடையிலிருந்த வரப்பை அவன் நீக்கி விடுவானென்று அவர்கள் எதிர்பார்த்தார்கள்.

ஆனல்!

மறுநாள் சப் ரிஜிஸ்திரார் ஆபீஸில் தெற்கு மாவடிச் செய்யும் வடக்கு மாவடிச் செய்யும், ஊர்ப்பொது அம்மன் கோவில் சொத்தாகப் பதிவு செய்யப்பட்டன. இடையிலிருந்த வரப்பு தானே கலங்காப்புலிக்கு அஸ்திவாரம்; அவன் ஸ்வபாவம்!

"கோடாலியும் கம்பும் கூடினப்புறம் கலங்காப்புலிக்கு என்ன சோலி? என்ன மரியாதை?" என்று ஊரைவிட்டு வெளியேறினவன் தான்.

# ஜமீன்தார்

அந்தக் காலம் தானியத்துக்கு மதிப்பு மிகுந்திருந்த காலம். வியாபாரத்துக்குப் பண்ட மாற்றுத்தான் அமுலிலிருந்ததே யன்றி பணம் காசு புரளாத காலம். 'அரைப் பணத்தை வைத்துக் கொண்டு அசுவமேத யாகம் செய்துவிடலாமே' என்று சொல்லுவார்கள் ஊரார். ஆனல் காரியத்தில் புகும்போது அவர்கள் அநுபவமோ வேறுவிதம். உழைப்புக்குக் கூலி தானியமாக அளக்க வேண்டுமென்பது சட்டம். ஜமீன்தார் பரமேசுவரனின் ஆட்சி பலமா இருந்த காலம் அது.

கணேசன், ஜமீன்தார் பரமேசுவரன் அவர்களின் குமாரன். பையன் கொஞ்சம் சோம்பேறி. தந்தைக் கடங்கிய குடிகளின் மண்டையை உடைத்துக்கொள்ளச் சொல்லி வேடிக்கை பார்ப்பது தான் பையனின் பொழுது போக்கு.

கணேசனுக்கு ஒரு தறுதலைத் தம்பி உண்டு. ஒரு சமயம் அந்தத் தம்பி யாரோ குயவன் ஒருவனைத் தண்டித்து விட்டானும். அந்தக் குயவன் கணேசனுக்குக் கொழுத்த எலி ஒன்றைச் செய்து கொடுத்து எஜமானனின் மூத்த பிள்ளையின் தயவைச் சம்பாதித்துக் கொண்டானும். அன்று முதல் கணேசன் அந்த எலியோடு ஒரு குளக் கரையிலே உட்கார்ந்து விளையாடுவது சகஜமாகி விட்டது. சாப்பாட்டிலே ரொம்ப ருசிகண்ட பிள்ளையாண்டான்.

இதை எல்லாம் பார்த்த ஊரார் இவனைத் தொந்தி என்றும் சோம்பேறி என்றும் அழைக்கத் தலைப்பட்டார் கள்.

இந்தப் பிள்ளைகளைத் தகப்பனரும் அதிகமாய்க் கவனிப்பதில்லை. மொத்தத்தில் பெரிய இடத்துப் பிள்ளைகள் என்பதற்குத் தகுந்தபடி இவர்களும் அடங்கின பிள்ளைகளில்லை. தவிர அவருக்கும் பையன்களால் ஆகவேண்டிய வேலை ஒன்றும் கிடையாது. ஜமீன் வேலைகளைத் தனித்தனியாகப் பிரித்து, ஒவ்வொரு வகுப்புக்கும், ஒவ்வொரு தலைவனை ஏற்படுத்தி இருந்தார். கடமையை ஆள் விட்டு அவர்

வசூல் செய்வதில்லை. அதை அவன், அவனாகவே கொண்டு போய்க் கொடுக்கவேண்டுமென்பது அவர் சட்டம். அதை வற்புறுத்துவதற்காக, ஒன்பது பேரை நியமித்திருந்தார். இயந்திரங்கள்போல எல்லாம் அதன்படி இயங்கி வர வேண்டும்.

இது நிர்வாக விஷயத்தில். அவர் சொந்த வாழ்க்கையோ ஒரு விநோதம். அது ரகசியம். அவருடைய ஆஸ்தானத்தில் எப்பொழுதும் சங்கீதம் நிறைந்திருக்கும். அவருக்கு நாட்டியத்திலே உயிர். தலையில் அரைச் சோமனைத் தரித்துக்கொண்டு கூத்தாடுவாராம்.

இதைப் பார்த்து, சபாஷ் போடுவதற்கென்று பிரமுகர்கள் சிலர் எப்போதும் அரண்மனையில் இருந்து கொண்டிருப்பர். ஆனால், அவருக்கு, அந்தஸ்துக்குச் சரியான சிநேகிதர்களே கிடையாது.

ஜமீன்தார் அரண்மனையில் நுழைவதென்பது நாமெல்லாம் நினைக்க முடியாத காரியம். தவறி நுழைந்துவிட்டாலோ தொலைந்தோம். வெளி உலகைக் காணவே முடியாது. நிற்க,

* *

இந்த ஜமீன்தாரரின் ஆட்சியை மகா உயர்ந்தது என்று கூறிக்கொண்டிருந்த குடிபடைகளும் பலர் இருந்தனர். அவர்களில் ஒருவன் புலைப்பாடியில் இருந்தான். விவசாயத்தில் சிறந்தவன், அவன் கையால் தொட்டதெல்லாம் தங்கமாகும் என்னும்படி விவசாயத்தில் கைராசி உள்ளவன். ஜமீன்தார் நாட்டியக் கலை நிபுணர் என்று கேள்விப்பட்டு அவர் ஆடுவதை ஒரு நாள் பார்க்கவேண்டுமென்று ஆசைப்பட்டான். ஆனால் இந்த ஏழைக்கு அரண்மனையில் புகுவதற்குச் சந்தர்ப்பம் தான் ஏது? சலுகை தான் ஏது?

ஒருநாள் ஜமீன்தார் அரண்மனைகளில் ஒன்று இருந்த திருப்புன்கூர் ஊருக்குள் அந்த ஏழை சென்றான். இத்தனை நாள் பாடியில் நரக வாழ்க்கை அநுபவித்தவனாதலால் இந்த இடம் அவனுக்குச் சொர்க்க லோகம் போலத் தோன்றிற்று. வெயிலில் வந்தவன் நிழலைச் சொர்க்கமென்று சொல்வதில் ஆச்சரியமென்ன?

சொர்க்கம் போலிருந்தாலும், அங்கேயே அதிக நாள் வாசஞ் செய்ய அவன் விரும்பவில்லை. நிழலிருக்கும் அந்த

இடத்துக்கும், அவன் பழைய வெய்யில் தொடர்ந்து வருமென்பது அவனுக்குத் தெரியும்.

உள்ளங்காலில் வெள்ளெலும்பாகச் சிறு வயதில் அவன் ஓடி உழைத்த வாழ்க்கையே அவன் மனதில் குடிகொண்டிருந்தது. இன்பத்தின் ஒரு ஓரத்தைக் கிள்ளி விநியோகம் பெறுவதை அவன் விரும்பவில்லை. தானே இன்ப மயமாகிவிட வேண்டுமென்பது இந்தப் பரம ஏழையின் ஆவல். அது ஒருநாளில் கிட்டுமா?

அந்தத் திருப்புன்கூரை விட்டு, பாடிக்குத் திரும்பிப் போக நினைக்கும்போது அவனுக்கு எதிரிலே மட்டை ஊறும் குட்டை ஒன்றிருப்பது கண்டான். அக் குட்டையின் நாற்றம் குடலைப் பிடுங்கியது. சில வேதியர்கள் மூக்கைப் பிடித்துக்கொண்டு அதன் கரையில் ஜபம் செய்து கொண்டிருந்தார்கள்.

தானே உழைப்பாளி. உழைப்பாளியால் தான் குட்டையைக் குளமாக்க முடியும். கொஞ்சம் சிரமப்பட்டு, அதைக் குளமாக வெட்டி விட்டால், அந்த அழகு பொருந்திய இடம், பலருடைய தாகத்தைத் தணிக்குமே என்றெண்ணினான். தயங்கி நின்றான்.

இந்தத் திருப்பணியோ பெரிது. தான் ஒருவனாக நின்று குளத்தை வெட்டுவது எளிதல்ல. ஒரு சிற்றாள் கிடைத்தால் உதவியாயிருக்கும். ஆனால் அவனுக்கு கூலி கொடுக்க வேண்டுமே கையிருப்பு நெல்லோ சிறிது. குருணி நெல்லுத்தா னிருந்தது. பிரயாணச் செலவுக்காக அதைக் கையோடு காவலாய் அவன் கொண்டு வந்திருந்தான்.

அந்தக் குட்டைக் கரையில், எலியோடு விளையாடிக் கொண்டு ஒரு பிள்ளையாண்டான் அமர்ந்திருப்பதை இந்த ஏழை கண்டான். அவன் ஜமீன்தாரரின் பிள்ளைதானென்பதை இந்த ஏழை அறிவானா? கணேசனும் புது ஆளைப் பார்த்தான். "என்ன யோஜிக்கிறே" என்று கேட்டான்.

ஏழை தன் ஆசையைச் சொன்னான். தன்னிடம் குருணி நெல் தான் இருக்கிறதென்பதையும் கூறினான். சோம்பேறியான அந்தக் கணேசனுக்கும் ஆசை தோன்றியது. குருணி நெல்லையும் அப்படியே பொரித்து, உருண்டையாகப் பாகோடு பிடித்துத் தின்றால் எவ்வளவு ருசியாய் இருக்குமென்று எண்ணினான்!

"நாம் என்ன உழைப்பில் இளைத்தவனா? ஊரார் நம்மை வெறும் சாப்பாட்டு வீரனென்று சொல்வது பிசகல்லவா? இன்று முதல் நம்மையும் ஊரார் மதிக்கும்படி செய்யவேண்டும்" என்றும் நினைத்தான். குளம் வெட்ட இறங்கிய புலையனுக்குச் சிற்றாளாக வேலை செய்வதற்கு ஒத்துக்கொண்டான். குளமும் வெட்டி முடிந்தது. குருணி நெல்லும் ஜமீன்தார் பிள்ளைக்குக் கூலியாகக் கிடைத்தது.

* * * *

கணேசன் தலையில் மூட்டையுடன் வருவதைக் கண்டதும், தகப்பனார் ஆச்சரியமடைந்தார். பெற்றவனுக்குத் தெரியும் பிள்ளை அருமை! ஏதோ மனது திடுக்கிட்டது. கொழுக்கட்டையைக் கொடுத்தால் கூடக் கணேசன் மூட்டை கட்டி வைத்துக்கொண்டு தின்பதில்லையே. இன்று ஒரு மூட்டையோடு வருகிறானே? என்று திகைத்தார்.

தமது அருமைப் பிள்ளை, சீமந்த புத்திரன், என்றுமில்லாமல் ஒரு மூட்டையைத் தலையில் தூக்கிக்கொண்டு வருவதைக் கண்டதும், "ஐயோ, குழந்தைக்கு என்ன வலி வலிக்குமோ!" என்று கூட ஏங்கினார். சட்டென்று கீழிறங்கி வந்து மூட்டையைத் தாங்கித் தம் தலையில் மாற்றிக்கொண்டார். உலகத்துச் சுமைதாங்கியில் கூட ஒரு குருணி நெல் கூடிற்று.

"அடியேனுடைய சம்பாத்யம்" என்று சொல்லி, மார் தட்டிச் சுற்றி இருந்தவர்களைப் பார்த்தான் கணேசன். சிரித்தான். ஆனாலும், பையன் சிரிப்புத்தானே அது. ஒன்றும் செய்துவிடவில்லை.

அந்தச் சுமை கனப்பதுபோல் ஜமீன்தாருக்குத் தெரிந்தது. பையனைப் பார்த்து, "ஏதுடாப்பா? இது எவ்வளவு நெல்லு?" என்று அன்போடு கேட்டார். "சிவம்" என்று கூறி மவுனமாயிருந்தான் கணேசன். சிவம் என்றால் குருணி யென்று எல்லோருக்கும் தெரியும். ஆனால் சிவம் ஆகிய தனக்குக் கிடைக்கவேண்டிய கடமையை யாரோ ஒரு குடியிடமிருந்து தன் பிள்ளை வாங்கிவந்ததில் அவருக்குச் சந்தோஷம்.

கெண்டாமணி அடித்தது. ஸாமவேதம் முழங்கிற்று. ஜமீன்தாரின் அன்றாட நாட்டியம் ஆரம்பமாக வேண்டிய வேளை. ஜமீன்தார் உடனே ஓடினார். பிள்ளை கொண்டு

வந்த சம்பாத்தியத்தைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டபடியே அன்று ஆடினர்.

மிருதங்கத்தில், நன்ருக ஆவர்த்தனம் வாசிக்கும் போது, சில மிருதங்கக் காரர்களுக்கு முகம் நீளுவதைப் பார்த்திருக்கின்றோம். அப்படி முகம் அடிக்கடி நீண்டு, ஜமீனின் மிருதங்கக்காரருக்கு முகம் நீண்டே போயிருந் தது. அவர் பெயர் நந்தியென்று சொன்னர்கள்.

தான் தந்த குருணி நெல்லை ஜமீன்தார் தலையில் வைத்துக்கொண்டு குதித்துக்கொண் டிருக்கிருரென்பதை ஆதனூர்ப் பாடியிலிருந்த அந்த ஏழை அறிவானு? அவனை அடிமையாகக் கொண்டிருக்கும் கிராமாதிபதி என்றேனு மொரு நாள் ரஜா தருவார், தில்லை செல்லலாம், திருக்கூத் துக் காணலாம் என்று அவன் காத்துக்கொண்டே இருந் தான். ஆண்டையின் மனது இளகவில்லை. ஆண்டை அருள் செய்யவில்லை. அதற்குப் பதிலாக ஆக்ஞையும் கடுமையாகச் செய்துவிட்டான். நந்தன் வாழ்வு அலுத்து விட்டது. புலம்பினன்.

“ஐயோ சிவமே, இலவு பழுக்கும், பழுக்குமென்று கிளி காத்திருந்தாப்பலே காத்துக்கிட் டிருந்தேனே. இலவு வெடிச்சுப்போச்சே! பறயஞ் சொல் லிக்கிட்டே இருக்கான், போகட்டும், பொளச்சுப் போரான்னு ஆண்டெ சொல்லுவாருன்னு, நெனச்சேனே. நாற்பது வேலியும் அறுவடை முடிச்சிட்டு அப்பறம்வந்து கேளுன்னு ஆண்டெ சொல்ருரே! ஐயோ! நாளைப் போவேனென்று அலறினேனே. அந்தச் சொல்லுப் பழுதாப் போச்சே! அட பறயா, நீ சிதம்பரமென்னு சொல்லப்படுமோடா? போகப்படுமோடா? என்றெல்லாம் ஆண்டே சொன்னது நெசமாயிடுச்சே!” அப்போ, பயிரு பெரிசா? பக்தி பெரிசா? நாற்பது வேலி விளஞ்சு நடமாடும் சீவன்கள் சாப்பிடுவது பெரிசா? நான் மட்டும் உன் நட னத்தைப் பார்ப்பது பெரிசா? திருப்புன்கூரிலே குழம்பி யிருந்த குட்டையை வெட்டித் தெளியவைத்தேனே? என் குட்டை தெளியவில்லையே? என்ன செய்வேன்? என்று தவித்தான் அலறினன்.

அந்தச் சொற்கள் எல்லாம் அப்படி யப்படியே ஆடிக் கொண்டிருந்த ஜமீன்தார் காதில் விழ ஆரம்பித்தன.

அவருக்கும் என்ன செய்வதென்று தோன்றவில்லை. குருணி நெல்லைத் தானாகவே அனுப்பிய அந்த ஏழை மூலம் உலகத்துக்கு ஓர் அற்புதத்தைச் செய்து காட்டிவிட வேண்டும் என்று எண்ணினார் பெருமான்.

கதையோ கட்டுரையோ எழுதும்போது பாதிக் கடுதாசிகள் தீர்ந்தவுடன் கற்பனை ஓடாத ஆசிரியன், பென்சிலைக் கடித்துச் சாப்பிட ஆரம்பிக்கிறான்.

வேறு சிலர் காகிதம் முழுவதும் பொம்மைகளைப் போட ஆரம்பிக்கிறார்கள். இவைகள் எல்லாவற்றையும் விட யோசனை புலப்படாதபோது தலையைச் சொறிவது அனைவருக்கும் இயல்பு.

கூத்தாடும் எம்பிரான் தன் தலையைச் சொறிந்தார். கோரைகள்போல் ஏதேதோ அவர் கையில் தட்டுப்பட்டன. இடுகாட்டுச் சாம்பலில், கங்கையின் ஜலத்தைப் பாய்ச்சிச் சந்திரனது குளுமையால் காப்பாற்றப்பட்டு ருத்திரனின் தலைமேல் தங்கியிருந்த அந்தக் குருணி நெல்லும் முளைவிட்டு நாற்றாகி இருப்பதை அறிந்தார். உடனே அவர் நிலைத்துவிட்டார்.

நந்தன் அலறுவதும் இதற்காகவேதான்! அவன் கடமையைத் தீர்த்துவிட்டால் கட்டு அறுபடும். அவன் ஓடியே வந்துவிடுவான் என்று நினைத்தார். தன் சேவகர்களான பூதகணங்களை அனுப்பி அந்த நாற்றுகள் அத்தனையையும் ஆதனூரிலே பயிரிட்டு வருமாறு சொன்னார். ஆதனூரில் அற்புதம் நிகழ்ந்தது. ஒரே இரவில் அந்த நாற்றுகள் முற்றி அறுவடைக்கும் தயாராகி விட்டன.

ஆண்டையும் உத்தரவு தந்து விட்டான். ஏழையாகிய நந்தனும் சிதம்பரத்துக்கு வந்து சேர்ந்தான். அய்யனின் ஆனந்தக் கூத்தை தரிசித்தான். காலமெல்லாம் பக்தி செய்தாலும் கடமையை மறவாமல் உழைத்த அந்த விவசாயிக்கு முன் அய்யன் திருக் கூத்து ஆடிக் காட்டினான். அதோடு மட்டுமல்ல; முன்பு அவன் கொடுத்த நெல்லை தலையில் தூக்கி வைத்துக்கொண்டு ஆடினான். நந்தன் வந்தவுடனே அவனை வாரி எடுத்துத் தலைமேல் வைத்துக்கொண்டு ஆடினான்.

# கட்டைமுத்தன் கலாசாலை

ரப்பர் தோட்டக் கூலிகளுக்கு எல்லா வகையிலும் சிரமம் அதிகம். மற்றவர்களை விடக் கொஞ்சம் அதிகம் கூலி கிடைத்தாலும் நெருக்கடி கூடுதல். லாலான் புல் அதிகமாக வளர்ந்துவிட்டால் நெருப்புப் பிடித்துவிடும். புலி முதலிய கொடிய மிருகங்கள் சஞ்சாரம் அதிகமாக இருக்கும். இவைகளுக்குத் தப்பினாலும் புலியிலும் கொடுமையாய் பாய்ந்துகிழிக்கும் கங்காணி நெருப்புக்கட்டியாய் எரிப்பான். ஆனாலும் ராஜாத் தோட்டக் கங்காணி முத்தன் விஷயம் மட்டும் அப்படியல்ல. பத்துக் கங்காணிகளுக்குள் முத்தன் கங்காணிதான் நல்லவன். பாலை வடிக்கும் மரங்களுக்குக் கூட சோர்வும், உழைக்கும் கூலிகளுக்குக் களைப்பும் அவன் தோட்டத்தில் கிடையாது என்பார்கள்.

முத்தன் கரார் கங்காணி. கூலிகளின் கும்பிடுகளுக்ும் வழுக்கி விழுந்த பெண்களின் கண் வெட்டுக்கும் அவன் மயங்கியதே கிடையாது. கண்டித்து வேலை வாங்குவான். கூலிகளின் வியர்வையைத் தன் அங்க வஸ்திரத்தால் துடைப்பான். மேலதிகாரியின் புகாரும் கூலிகளின் குறைகளும் அந்தத் தோட்டத்தில் இல்லை.

* * * *

முத்தனின் மேலதிகாரி ஒரு வெள்ளைக்காரன். முத்தனின் தகப்பனுக்கும் வெள்ளைக்காரன்தான் மேலதிகாரி. முத்தன் நூறு பேரை அதட்டி வேலைவாங்குவான். அவன் தகப்பன் அதட்டியும் அடித்தும் வேலைவாங்குவான். இருவரும் உத்தியோகஸ்தர்கள் தான். ஆனால், அதில் ஒரு வித்தியாசம் உண்டு. இவன் தோட்டக் கங்காணி. அவன் கைதிக் கங்காணி. இவன் வீட்டைவிட்டு ஓடிவந்து கங்காணியானான். அவன் வேறு வீடுகளில் புகுந்து விருதாச் செயல் புரிந்து வார்டரானான்.

தகப்பனின் குணமும் தாயின் தூண்டுதலும் முத்தனையும் பீடித்தது. இவனும் ஒரு தடவை—அதுவே முதல் தடவை—திருடினான். அதன் பயனாக தஞ்சாவூர் பார்ஸ்டல்

ஸ்கூலில் நான்கு வருஷம் படித்தான். விடுதலை யடைந்து வீட்டுக்குப் போகவே தாய் மறுபடியும் சம்பாதிக்கத் தூண்டினாள். அவன் படித்த படிப்பிலும் தாய் தந்தையை மகன் காப்பாற்ற வேண்டியது கடமை என்று படித்திருந் தான். ஆயினும், திருடுவதற்கு அவன் சம்மதிக்கவில்லை. திருடாவிட்டால் கூட கஞ்சிக்கும் கள்ளுக்கும் காசு கிடைக்கு மென்று அவன் தாய் நம்பவில்லை. மகனைக் கடிந்துகொண் டாள். "பிலிக்குப் பிறந்துட்டுப் பூனையாப் போயித்தாயே" என்று வயிற்றில் அடித்துக்கொண்டாள். மூட்டை சுமந்து திருப்பிக் கொடுத்து மூணு காசு வாங்கிரம்கிறியே! வெக்க மில்லையா" என்று கன்னத்திலடித்தாள். ஜெயிலிலிருக்கும் புருஷனை—முத்தய்யாவின் தகப்பனை -திட்டிக்கொண்டே முத்தனை அடித்தாள்.

ஆகவே, குறக் கட்டையன் மகன் முத்தன் வீட்டை விட்டு ஓடினான்.

* * * *

கால் போன வழியே நடந்து நாகபட்டணம் போய்ச் சேர்ந்தான். ஒரு சோத்துக் கடையில் தண்ணீர் வண்டி ஓட்டி நாளடைவில் பரிமாறும் உத்தியோகம் பெற்றான். அந்த நாயக்கருக்கு கப்பலிலும் கடை இருந்தது. ஆறு மாதம் கழித்து முத்தன் கப்பல் கடையில் சேர்த்துக் கொள்ளப் பட்டான். ஐந்து ரூபாய் சம்பளமும் போட்டார் கள். நிம்மதி ஏற்பட்டது.

* * * *

இவன் சஞ்சலத்தையும் சேர்த்துக்கொண்டு அதிக மாக கொந்தளிக்கும் கடலில் கப்பல் புறப்பட்டது. மூண வது நாள் கப்பல் கடையிலே மேஜையிலிருந்து இருபது ரூபாய் களவு போய்விட்ட தென்று கணக்கப்பிள்ளை கத்தி னான். முத்தனையும் விசாரித்தான். இவன் பார்ஸ்டல் ஸ்கூ லில் படித்த விபரம் தெரிந்தவுடன் கட்டிப் போட்டுவிட்டு, மீசையை முறுக்கிக்கொண்டு முதலாளிக்காக ஆள் விட் டான் திருடனைப் பிடித்த தீரன். அந்த அமளியில் அடுப் படி இருட்டில் ஐந்து ஆறு அடிகளும் கிடைத்தன.

கடல் தாண்டி வந்தும் கலி விடவில்லையே என்று கண்ணீர் வடித்தான். தகப்பனின் வாசஸ்தலத்தை எட்டிப் பார்க்கும்படி வந்துவிடக் கூடாதே என்ற பயம்

அவனை ஆட்டியது. தன்மேலிருந்து திருட்டு நாற்றம் அடிக்கிறதோ, தன் முகத்தில் திருடன் மகன் என்று எழுதி இருப்பது தனக்கு மாத்திரம் தெரியவில்லையோ, என்று சந்தேகித்து வருந்தினன். கொள்ளிக்கட்டையின் உதவியால் கயிற்றை அறுத்துக்கொண்டு கடலில் விழுந்து விட நிச்சயித்தான்.

யாரோ, குறவனும், திருடனும், கடலிலே விழுந்தாலும், அந்தக் கடலுங்கூட, ஹா! மனிதனே! தரையைக் கெடுத்தது போதாதோ, தண்ணீரையும் கெடுக்க வந்தாயோ. மண்ணிலே பிறந்தவன் மண்ணிற்கே போய் விடு என்று அவனை வேண்டாமென்று கரையில் ஒதுக்கி விட்டதாம். தரைக்குத் தண்ணீர் தாயாதி. தகப்பனிடம் சண்டையிட்டுக்கொண்டு ஒரு பையன் தாயாதி வீட்டில் புகுந்தால் அவன் எவ்வளவு ஆநந்தமாக அணைக்கப் பெறுவானே அப்படியே தன்னுள் வந்து விழுந்த மனிதனை கடல் கட்டி அணைக்கும். பிறகு அந்தரங்கமாகக் கொண்டு போய் வைத்திருக்கும். தரை சிறிது தேடிய பின் அவனைக் கொண்டுவந்து கரையில் ஒதுக்கி விட்டு, வருந்தும் தரையைப் பார்த்து இரைந்து இரைந்து சிரிக்கும் கடல் என்று, பிறர் பேசாத வண்ணம் எஜமான் வந்து முத்தனை கட்டவிழ்த்துவிட்டு, "நான்தான் சில்லரைக்காக எடுத்துக்கிட்டு, எழுதாமே மேல் தட்டுக்குப் போனேன். அதுக்குள்ளர இப்படியாயிருச்சாம்! கவலைப்படாதே என்றூர்." முத்தன் அழுதுகொண்டே அடிபட்ட தழும்புகளைக் காட்டினன். தடவிக் கொடுத்துக் கொண்டே, "என்னப்பா செய்யிறது. நீ செயிலிலிருந்தவன்னு ஒப்புகிட்டியாம். அவன் உதைச்சானும். யாரும் சந்தேகப்படாமல் இருக்க முடியுமா? இதைக் கேட்டதும் நான் கண்டிக்கவும் இடமில்லை. அவன் மேலேயும் குத்தமில்லை." என்று சொல்லிச் சென்றூர் முதலாளி.

கப்பல் பினங்கில் துறைமுகம்போய்ச் சேர்ந்ததும் முதலில் இறங்கிச் சென்றவன் முத்தன். கடைசிவரையிலும் இறங்காமல் நின்றது அவன் துரதிர்ஷ்டம்.

தெற்கே அடித்த காற்று திரும்பி அடித்தது. கட்டையன் மகன் முத்தன் கங்காணி முத்தையண்ணன் ஆனர். இடையில் கழிந்தது இருபது வருஷம்.

வருஷக் கடைசி கிறிஸ்மஸ் சமயம். மானேஜர் சம்பள உயர்வை எதிர்பார்த்தான். பால் விலை கொஞ்சம் உயர்ந்து விட்டதால் இந்தியக் கூலிகள் கப்பலுக்குக் கப்பல் இரண்டாயிரம், மூவாயிரம் பேர்கள் வருவதாகவும், குறைந்த கூலிக்கு வேலை செய்வார்களென்றும், ஆதலால், நீங்களும் கூலியைக் குறைத்துக்கொள்ள வேண்டுமென்றும் கூலிகளிடம் சொன்னான். பாருங்கள்! உங்கள் ஜனங்களே உங்களுடன் போட்டிக்கு வருகிறார்கள் என்று பச்சாதாபமும் பட்டான். இதற்குக் குறுக்கே நின்றான் கங்காணி முத்தய்யா. அந்த சமயத்தில் ஊர் ஆசையும் வந்து சேரவே, வேலையை ராஜீநாமாச் செய்தான். தான் சேர்த்திருந்த தொகையில் மூவாயிரம் டாலரை பாங்கியில் போட்டு விட்டு எழுநூறு டாலருடன் புறப்பட்டான். தாய் தந்தையரைப் பார்க்கவேண்டிய ஆவல் வந்து தள்ளவே சாமான்கள்கூட வாங்காமல் அவசரமாக கப்பலேறினான். இந்தியா மண்ணில் காலை வைத்தான்.

மையிருட்டு. பனிப்படலங்கள்போல் சில குடிசைகள். மரத்திலடிக்கும் காற்று, மலை புரளுவதுபோல் சத்தமுண்டாக்குகிறது. நாய் குலைத்தது. ஒரு நாய் குலைத்ததும் எல்லா நாய்களும் வாங்கிப் பாடின. கட்டையன் வீட்டுத் தட்டிக்கதவு தள்ளி வைக்கப்பட்டது. சிம்ணி விளக்கு ஒரு தடவை மரணத்தை எட்டிப் பார்த்துவிட்டு வந்தது. கதவைத் திறந்ததும் காக்கிச் சட்டைக்காரன் எதிரில் நிற்கவே, கட்டையனுக்குத் தூக்கி வாரிப்போட்டது. சமாளித்துக்கொண்டு தன் இடுப்பைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான் கட்டையன். முகத்தில் ஒரு துணிச்சல் தெரிந்தது. வந்தவன் பேச ஆரம்பித்தான்.

முத்தன்: ஏம் ஐயா! உங்க பேரு? என்று கேட்கவும் கட்டயனுக்கு முந்தித் தப்பித்துக்கொண்ட சில்லரைத் திருடுகளின் சம்பந்தமாக இருக்குமோ என்று சந்தேகம் ஏற்பட்டது. இருந்தாலும் "எம்பேரா........பேரு தெரியாமலா கதவைப் போட்டு இந்த இடி இடிச்சிய?........ நாந்தான் கருக்க முத்தன்" என்று அமரிக்கையாக பதில் சொன்னான்.

முத்: அப்பிடியானா, நான் தான் பெசகிட்டேன். இங்கே கட்டயன்னு ஒராளு இருந்திச்சே தெரியுமா?

கட்: எங்கே? இங்கிணெக்குள்ளெயா? இந்த வட்டா ரத்திலேயே அந்தப் பேரோடே ஒரு பூண்டுகூடக் கிடை யாதே.

முத்: இதென்ன முளுப் பூசனிக்காயெ பருக்கையிலே அமுக்கறது மாதிரி. பளய சேரி இருந்த எடம் இதுதானே?

கட்: (சிரித்துக் கொண்டான்) சேரியாவது எடமா வதுங்க, ஆடிக்காத்து தூக்கிக்கிட்டுப் போயி அடுத்த ஊரிலே வச்சாலும் போச்சு. போடுர சுருட்டுப் பொகையிலே பத்தி எரிஞ்சாலும் போச்சு. ஏழைக்கு வீடுன்னு ஒண்ணு ஒரே எடத்திலே இருக்க முடியுமா? என்று யோக்கியன் போல் பேசி யோசனை இல்லாமல் நிற்கும் முத்தனைக் கவ னித்தான்.

முத்: சரி, பின்னெ விடிஞ்சுதான் தேடணும், ஏன் ஐயா, இங்கே பசியார ஏதாச்சும் கெடைக்குமா? கையூண்டு வெருஞ் சோறு கெடச்சாலும் போதும் என்று சலிப்புடன் கேட்டான். அவனது குரலில் விரிந்த புல்லாங்குழலில் வரும் சப்தம்போல் ஒரு ஏமாற்றம் ஒலித்தது.

கட்: எங்களுக்குத்தான் அந்தக் கவலெஹ வாரவங் களுமா அப்படி வரணும்.

முத்: அடெ நீங்க திங்கச் சோரு ஆக்கியிருக்க மாட்டியளா? அதுலே ஒரு புடி.

கட்: எங்களெ ஆக்கினவர் சோராக்கராப்லெ ஆக்கல்லேங்க.

முத்: ஐயோ! தெய்வமே!

கட்: அந்தத் தெய்வங் குடுத்த கையும் நல்ல புண்ய வதிக வீடுகளும் இருக்கவே இருக்கு. ராப்பிச்செ தாயேன்னு வெறுங்கையெ நீட்டினு வவுரு ரொம்பிப் போவுது: கஞ்சியாவது காச்சவாவதுங்க என்று பெருமை யுடன் பதில் கிடைத்தது.

முத்: சரி, அதுவும் ஒரு சோதனைதான். ராத்திரிக்கி இங்கெயெ படுத்திருந்து எந்திருச்சுப் போகலாமா? என்று கேட்டான்.

மடியில் கனமிருந்தாலே வழியெல்லாம் பயமாகத் தோன்றும் என்பார்கள். அத்துடன் கூட முத்தனுக்கு மனதிலும் கனம் இருந்தது. பாவம், திருடர்களை பகலில் வீட்டில் காணுவது துர்லபம். காடுகளில்தான் சஞ்சாரம்

செய்வார்கள். அதிலும், யாராவது ஒருவர் தேடுவதாக அறிந்தால் மாதம் ஒன்று ஆனாலும் வீட்டுக்கு வருவது சந்தேகம்தான். ஆதலால் ஆளை பொழுது விடிவதற்குள் தேடிக் கண்டுபிடிக்க ஆவலுண்டாயிற்று. கோபிப்பவன் போல் ஒரு கேள்வியைக் கேட்டான். "என்னய்யா? நரெவிழுந்துபோன மனிசனுக்கே. பதில் சொல்லாமெ நிக்கிறியே. இந்த ஒடம்பக் கொஞ்சம் போட்டுப் பெரட்டக் கூட இஞ்கெ எடந்தர மாட்டியா?" என்று கேவலமான குரலில் கேட்டான். இவன் மிஞ்சவே கட்டையன் கெஞ்ச ஆரம்பித்தான், குழைந்து குழைந்து "இல்லீங்க, இங்கெ நரிப்பண்ணெ தொந்தரவு ரொம்ப. ராமுளுக்க ஊளை யிடும். காஞ்ச கருவாட்டு நாத்தத்துக்கு வீட்டிலே நொளஞ் சிடும். பாத்தியளா கூடமெல்லாம் ஈரம் நொதிச்சுக் கெடக்கு. அது பெருச்சாளி வங்கு. சர்க்காருக் குப்பை யெல்லாம் வேரெ இங்கேதாங் கொட்ராக. கொசுகு வேரெ, மூளு அப்பா அப்பிப் புடுங்கித் தின்னுடும்" என்று அவ் வளவு அபத்தத்தையும் ஒவ்வொன்ருகச் சொல்லி ஒவ் வொன்றிற்கும் விருந்தாளியின் முகபாவத்தில் வித்தியாசம் ஏற்படுகிறதா என்பதைக் கவனித்துக்கொண்டே வந்தான்.

* * * *

முத்தன இவைகளுக்கு நகளுவான்.

முத்: ஆமாமா. போர இடத்திலெல்லாம் மெத்தை யும் கொசு தாங்கியுங் கெடைக்குமா? சேரிக் குடிசேன்ன அப்படித்தான் இருக்கும். அதெல்லாம் நாம் பாக்கறதில்லெ என்று சொல்லி விட்டுத் தரையில் உட்கார்ந்தான். அது கட்டையனுக்குத் தலையில் உட்கார்ந்ததுபோல் இருந்தது. கீழே குனிந்தான். தூக்கி வெளியே எறிந்துவிடத் தயாராயிருந்த கையால், குடித்த கள்ளு நாத்தம் வெளி யேருமல் வாயைப் பொத்திக் கொண்டான். தணிந்த குரலில் "பக்கத்துக் குடிசெலெ பேதி கெடக்கு" என்று பயந்த பாவனையில் முகத்தைச் சுளித்துக் கொண்டு சொன் ஞன். முத்தையா பாடு ஒரு நிமிடம் ஸ்தம்பித்தாற்போல் ஆகிவிட்டது. அதற்குள் அவன் மனது கற்பனை உலகத்தில் ஏராளமாக அலேந்துவிட்டு ஒரு முடிவிற்கு வந்தது.

முத்: அது இல்லாத ஒலகத்திலெயா நாம் இருக்கம். ஒறக்கங் கண்ணைக் கொண்டுபோய் சொருகுது. நாம்

படுக்கறேன் நீங்களும் படுங்க, என்று சொல்லித் துண்டைக் கீழே விரித்தான்.

கட்: நான் இங்கே படுக்கரதில்லை. நீங்கதான் ஒண்டியாக் கெடக்கணும்.

முத்: ஏன்?

கட்: எங்களுக்கு வீட்டுலெ படுக்க முடியுமா? நாங்க நம்பர்க் குடுக்கப் போயிடுவோம். எங்களுக்கு கெடை அவுட்டுப் போலீசு மைதானந்தான் என்றான் கட்டையன்.

முத்தன் மூட்டையில் பணமிருந்தது. ஒண்டியாய்ப் படுத்துத் தூங்குவதற்குப் பயப்படவில்லை. பணத்துடனிருக்கப் பயப்பட்டான். யோசனை இல்லாமல் மூட்டையைத் தூக்கிக் கட்டையன் கையில் கொடுத்து "பொழுது கௌம்பவுங் கொடுங்க," என்று சொல்லிப் படுத்தான்.

முகத்தில் ஒரு மூட்டை வெறுப்பும், கையிலே ஒரு மூட்டை பணமுமாகக் கட்டையன் வெளியே கிளம்பினான்.

தனிமையில் விடப்பட்ட முத்தனுக்கு யோசிக்க சந்தர்ப்பம் கிடைக்கவே தூக்கம் பறந்தது. புகுந்த வீடோ வித்யாசம். மூணு வயதிலேயே பிரிந்த தகப்பனை அடையாளம் தெரிந்துகொள்ளவோ முடிய வில்லை. நாளை இந்த நேரத்திற்குள் தாயையும், தந்தையையும் வேறு எங்கேனும் சீக்கில்லாத பத்திரமான இடத்திற்குக் கூட்டிச் சென்றுவிடவேண்டும் என்று எண்ணினான். தாயின் முகம் அடிக்கடி தோன்றியது. இதே சமயத்தில் அமிருதம் வருஷித்தாற்போல் "ஆளு புலிதானே," என்று ஒரு குரல் கேட்கவே ஆவலுடன் உற்றுக் கேட்டான். குடிசைக்குச் சிறிது தூரம் தள்ளி ஈச்சமரத்தடிப் புதரில் கட்டையனும் காத்தியும் பேசிக்கொண் டிருந்தார்கள்.

* * * *

கட்: அதுக்கும் ரோசனையா? மேக்கே பாக்கப் போரவன் நின்னாலும் இந்தக் கட்டப் பய நெனைப்பு மட்டும் தப்பவே தப்பாது. ஆளும் அவந்தான். மொள்ள மொளஞ்சு மோப்பம் பிடிச்சான்.

காத்: என்ன கேட்டான்?

கட்: என்னவா? கத்தியெ நேரடியே திருப்பிட்டாங் குட்டீங்கறேன். கட்டயனைத் தெரியுமான்னு கேட்டாம் பாருவே....

கா: அட பாவி? நான்தான்னிட்டியோ? நீ நாசமாப் போக. தெரியாமலா கருப்பஞ் சொன்னுன், கட்டயண்ண னுக்கு வாயையும் கழுதைக்கு காலையுங் கட்டிப் போடுன்னு........

கட்: நெறுத்து குட்டீ, பயித்யக்காரப் பயலாக்காமே. நாஞ சிக்குவேன். நாங் கருக்க முத்தண்டான்னு ஒரு போடு போட்டேன்.

கா: நெசமா?....நீ எங்கே வெரிச்சிலெ வெருண்டு ஒப்பிச் சிருவியோன்னு பயந்தேன்.

கட்: சீ, கழுதை போ....சுதாவா அரெப்பொட்டீலெ ஆடரதும் உண்டு. சங்கதீன்னு வந்திருச்சின்ஞ கலயங் கலயமாத்தான் ஏறட்டுமே. கட்டயங் கலங்கிர மாட்டான் தெரியுமா? என்று மீசையை முறுக்கி முகந்து பார்த்தான் கட்டையன்.

காத்: பணம் எம்பிட்டு இருக்குது?

கட்: எட்டு நூறும், தொண்ணூறு வெள்ளையும்.

காத்: வேறெ ஏதாச்சும்?

கட்: ரெண்டு மூணு சட்டெயும், ஒரு தொப்பியும்.

கா: ஹா! புலி தொப்பிதானு?

கட்: நீ என்ன குட்டீ, கொடலப் பிடுங்கி நீட்டினு லும் வாள நாருங்கரெ. நாம் பாத்தேன்: போலீசுதாங்க ரேன். மேக்க தெருவியே போருஞ. ஒசந்த ஆளு, வெட்டு மீசே, சாணி நெறத்துலே சட்டே. காலுலெ தப்ளே கனத்துலெ நடயம் போட்டிருந்தான். ஒரு சாடக்கி, மூக்கு கூட நம்ப பயலாட்டங் கொஞ்சம் அமுங்கி இருந்துச்சி.

கா: ஹா! உம்மையா? அவந்தானே, என்னமோ என்று தாயின் அன்பில் கேட்டாள்.

கட்: ஹூம்! அவந்தான் ஆயிர ரூபா பணத் தோடே வரப்போரானுக்கும். எந்தச் செயில்லெ வாடர்க் கச்சேரி வச்சு நடத்தரானே என்று துயரம் கலந்த குரலில் தீர்மானமாய்க் கூறினன்.

* * * *

முத்தையனுக்கு இதற்கு மேலும் படுத்துக்கொண் டிருப்பதற்கு முடியவில்லை. ஓடிப்போய் தாயைக் கட்டிக் கொண்டு ஆத்தா! ஆத்தா!! வென்று காடு முழுவதும் கேட்கும்படி கதற விரும்பினுன். நாக்குத் தழதழத்தது.

கண்ணீர் ஆறாகப் பெருகியது. எழுந்து தட்டிக் கதவைத் திறந்தான். சீட்டிச் சத்தம் கேட்டது. கதவு திறந்தவுடன் இருட்டில் வெளிச்சம் பாய்ந்ததைக் கண்டபின் தான் கட்டையன் சீட்டி அடித்தான். அந்த வெளிச்சத்தையும் விட வேகமாகப் பாய்ந்தார்கள். கட்டையனும் காத்தியும் ஓட ஆரம்பித்தார்கள். முத்தன் கம்மிய தொண்டையை செருமிக்கொண்டு ஆத்தாவென அலறினான். சத்தம் காற்றோடு கலந்தது. தூரத்தில் ஓடும் உருவங்களை கவனித்து இவனும் கொஞ்ச தூரம் ஓடினான். இவனைக் கண்டு அவர்கள் ஓடினார்கள்.

களங்கமற்ற ஆகாயத்தில் சந்திரன் உதயமானான். காடு முழுவதும் தேடியும் அவர்களைக் காண முடியவில்லை. ஆனால், பத்து மைலுக்கு அந்தப்புறம் அவர்களிருவரும் கீழ்க்கண்டபடி பேசிக்கொள்ளும் வார்த்தை இவன் காதிலெங்கே விழப்போகிறது.

கா: நீ பொக்குன்னு வெளிச்சத்தைக் கண்டது சாமி புண்ணியமாப் போச்சு.

கட்: இல்லியா குட்டீ....தூண்டிக்காரனுக்குத் தக்கையிலெதானே கண்ணு. முந்தி நம்ப சேக்கலியா? அளகனையுங் கேசுலெ சேத்தமில்லே; அந்த மாதிரி இவரு பணத்தை எங் கையிலெ போட்டுப்புட்டு சிப்பாயிகளைக் கூட்டியாந்து பாஞ்சுவிட நெனச்சிருக்காரு. கொள்ளக்காரனைப் பிடிக்க வந்திட்டு கோட்டெ விட்டுட்டுப் போயிட்டான் என்று சிரித்தான்.

கா: அப்பறம் ரோசனெ?

கட்: "ரோசனை என்ன குட்டீ, இனி இந்த லாக்காவிலே தலை நீட்டக்கூடாது. டேசனுக்கு டேசன் படம் போட்டு ஒட்டிப்புடுவாக. போயிர வேண்டியதுதான் அக்கரயப் பாக்க" என்றான்.

* * * *

தேடி அலுத்துக் கல்மேல் படுத்துத் தூங்கிய முத்தனை இளஞ் சூரியன் கிரணங்களைக்கொண்டு தட்டி எழுப்பினான். முத்தன் விழித்தான்.

பொழுதும் விடிந்தது. குரலைக் கேட்டும் கடல் கடந்து ஓடி வந்தும் தாய் தந்தையருடன் கலந்து பழக முடியவில்லையே, ஆசை வியர்த்த மாயிற்றே என்று வருத்தப்

பட்டுக்கொண் டிருந்தான். "கையிலே ஆயிர ரூபாய் கொடுத்திருக்கம். பிறகு காப்பாத்த வேண்டிய கடனைக் கழித்தாகிவிட்டது. அவர்கள் மறுபடியும் திருடி ஜெயிலுக்குப் போகாமலிருக்கும்படி ஆண்டவன் அருள் புரியட்டும்" என்று எண்ணினன். "தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும். நாம் துணிந்து மாற்றிவிடவும் முடியாது" என்று ஸ்திரமான அபிப்பிராயத்திற்கு வந்தான். ரத்தம் கெட்டிருந்தால் வைத்தியசாலைக் கனுப்பலாம்; சித்தம் கெட்டிருந்தாலோ? உடைந்த சங்குலே ஊத்துப் பரியுமா?

* * * *

கட்டைமுத்தன் கலாசாலையில் தாழ்த்தப்பட்ட வகுப்பு மாணவர்கள் ஏராளமாகப் படிக்கிறுர்கள்.

கட்டையன் மகன் கங்காணி முத்தனுடைய பள்ளிக்கூடம் அது. பாங்குப் பணத்தையும் வரவழைத்துப் பள்ளிக்கூடம் வைத்துவிட்டான். இன்னும் தாய் தந்தையரைக் காண வேண்டுமென்ற ஆவலிருக்கிறது. ஆவலிருந்தென்ன செய்வது? வேதாரண்யம் காட்டிலிருந்து கிளம்பி கடற்கரையில் கிடந்த ஒரு கட்டுமரத்தைத் திருடிக்கொண்டு யாழ்ப்பாணத்தை நோக்கிக் கட்டையனும் காத்தியும் கடலின்மேல் போனுர்கள். காற்று எப்படி அடித்ததோ?

# பெரிய கருப்பன் கடிதம்

பட்ணம் வக்கல் வெங்குட்டு ரமணி அய்யாவுக்கு பெரிய கருப்பன் எழுதிய சேதி என்னவென்டால், இவடம் யாபேரும் சேமம். அவடஞ் சேமத்துக்கு எளுதவேணும்.

நான் மூந்தாணுத்துச் சந்தெக்கிப் போயித்து வாரப்பொ, மருதைக்காரண்ணன் கடையிலே ஒங்கப் பேப்புரு கிடக்கப் பாத்தேன். அதுந் தலெப்புலே ஒரு படம் யெங்க குப்பக்கோனுறு சாடைக்கி ஏரப்புடிச்சு ஓட்ணுப்லே போட்டிருக்கிகளல்ல அதைப் பாத்தது மொத கோனுருக்கு வந்த கிருவஞ் சொல்லி முடியாது. அந்தப் பெரிய மவராசன் பட்டணத்துலே எம்பிட்டோ பெர்ரிய மனிசாளுகள்ளாம் இருக்குறப்போ, இவரையுங்கூட ஒரு மனிசனு மதிச்சு நீங்க படம் போட்டுப் புட்டிகளாம், ரொம்ப சந்தோசப்பட்ராரு. வீச ரூபாயைப் போட்டு ஒண்ணெ வாங்கிப் படத்தைக் கத்தரிச்சு பாரவண்டிக் கூட்டிலே பிசினைத் தடவி ஒட்டிப்பிட்டாரு. நாங்கூட மொத சந்தேகப் பட்டேன். ஏதாச்சும் சினிமா வேசப் படமாங் காட்டியும்ணு. ஒங்கிளுக்கு கிராமம்னு உசுருண்ணு சொன்னப் பொறகு தான் திருத்திப் பட்டிச்சு. ரொம்ப சந்தோசம். ஒங்கிளுக்கு மாரியாத்தா தொணை செய்ய வேண்டிக்கரேன்.

நீங்க கிராமத்துச் சங்கதீலே ஏன் திரும்புனிக? எங்க தேவைக்கி ஒளெக்கிரதுக்குனு ஒரு மனிசன் அம்புட்டுட்டா நாங்க சும்மா விட்டுப்பிட மாட்டமே. அந்தப் பாளாப் போன வவுத்துக்கு, அரிசிச் சோறு போட்ரதுக்குள்ளே இத்தினை தூரம் மனிசனை வம்பு பண்ணுது அது. இருக் கட்டும், மொத இந்த ஊருச் சங்கதியைச் சொல்ரேன். இதுக்கொரு வளியைப் பண்ணுங்க.

யெந்தத் தலைமொறையிலையோ இந்த ஊரு முப்போகம் வெளஞ்சிச்சும்பாக. ஆனை நப்பன் காலத்துலே காலமும் கோடையும் வெள்ளாமை பண்ணினம்னு அது சொல்லிக் கேட்டிருக்கம். இப்ப அதெல்லாம் போச்சு. சுதாவா

ஆரு மாசத்துப் பயிரு "செம்பாளை கைவிரச் சம்பா கூட வெதைக்க நெஞ்சுத் தெடமில்லே. போன கடுத்தம் மோசம் பெரு மோசமாப் போச்சு. சும்மா தொண்ணூறு நாளை வெள்ளாமையா குந்தாணிச் சம்பாவைப் போட்டுட்டு நடவுப் பயிருக்குத் தண்ணிப் பொட்டி கட்டி இரைச்சம். அம்புட்டுத் தான் கருகருண்ணு நெஞ்சுப் புடியாக் கருது துருத்துக் கினு வாரப்போ ஒரு தண்ணிப் பாட்டிலே, மூணு மாசத்துப் புள்ளெ மாந்தத்துலெ சோந்தாப்புலே சோந்து விழுந்து போச்சு. கடாசியா சாவியைத்தான் பொறக்கினோம். உளப்புக் காளைக்கி கூளத்துக்குக்கூட ஆகலே. தருசு போட்டா அவதாரம் சாவி அருக்க கை நடுங்குது. எதை நெனைக்கிரது? இந்த வருசங்கூட அருவதாங் குருவையைத் தான் அள்ளித் தளிச்சம். அதுக்குந் தெய்வம் பாக்கணும். ஆனா ஊரிலே மத்தவுக திருவள்ளம் எப்படியோ யாரு கண்டாக?

இதுகளைப் படிச்சிட்டு என்னையைச் சோம்பரைப் புடிச்சவனுங்காட்டியும்னு எண்ணிப்பிடிவிகளோணு பயப் புடரேன். அப்படி யொண்ணு மில்லே. பத்து மாசஞ் செமந் தும் பெத்த புள்ளை சொவுடுங்கிருப்லே எங்க அதிட்டம் அடிக்குது. பொட்டியிலே துட்டிருந்தாத் தானே மனிசன் மொகத்துலே களை? அது மாருதித்தானே பயிரும்? கம்மா யிலே தண்ணிக் கிடந்தாத்தானே பயிரு முகத்துலே பசுமை கெடக்கும்.

எங்க கம்மாக்கிப் பேரு ஓட்டக்கொளம்னு சொல்ரு க மூந்தி எப்பவோ ஒரு தபா புட்டுக்கினு போயிருச்சாம். இப்ப. அந்தக் கவலே இல்லே. தண்ணி தங்குனத்தானே புட்டுக் கினுபோக? உள்வாய் மோடிட்டுப் போச்சு. மடையைத் தொரந்திட்டாப் போதும். தெரிச்சுவிட்ட அம்புக் குச்சி பரிஞ்சாப்பிலே சிவ்வுன்னு பரியுது. ஒருமா தண்ணியிலே கலிங்கி ஓடுது. எண்ணைத் தலேயிலே தண்ணி விட்டாப் பிலெ பொட்டு நிக்காமே வடிஞ்சு போகுது. கம்மாக்கி வெட்டு விடணும். கிராமத்து எசமான் ஒரே புடிவாதமாப் பேசராரு. சன்வார் பாக்கி ஒட்டுக்கும் வசூலாகணுமாம். திருத்தியா ஒரு கடுத்த மாச்சும் கண்டு மூதல் காணனுமாம், அப்பத்தான் வெட்டுவிடுவாராம். வவுத்துலே நோக்கா டிருந்தா கைகால் அசந்து போயிராதா? கம்மா வெட்

டில்லாமே சாகுபடி எப்படி நடக்குமுணு கேட்டா, இந்தக் கைகால் ஏன் நோக்காடு வரவிட்டிச்சுனு கேக்கராரு. இந்த வம்பு எட்டு வருசமா நடக்குது. இன்னும் எத்தினி வருஷத்துக்கு நடக்குமோ.

ஆனதாலே, நீங்க பட்டணத்துலே இருக்குரவுக ளாகச்சே, எப்பவும் வார மொரைப்படி இந்த வருசமும் எங்க எசமான் குருதைப் பந்தயத்துக்கு வருவாருல்லே அப்ப இதைக் கொஞ்சம் எடுத்துச் சொன்னிகள்ன ஒங்க புள்ளே குட்டி பேரைச் சொல்லி நாங்க பொளப்பம். அவரு லாயத்துலே ஒரு குருதையாப் பொரந்திருந்தம்ன இதெல்லாம் எளுதப்போரதில்லே. அவுரு கிராமத்துலே குடியானவனுப் பொரக்கப் போக இதை எளுதினேம். நீங்க சொல்லக் கூச்சப்பட வேண்டாம். இன்னக்கி வரைக்கும் எங்க எசமான் வக்கலு சொல்லேத் தட்டினருங் கரது கிடையாது. நீங்க சொல்லுவதைப் பொருத்து எங்க கம்மாயிலே மம்மெட்டி விளணும்.

ஊளியன்,
இந்த—கீரல் பெரிய கருப்பன்.

ஒரு சங்கதி விட்டுப் போச்சுங்க.

குடியானவன் சட்டமுணு ஒரு சட்டம் வந்திருக்காமே. அது எப்புடி. நப்பன் காந்தி மகாராசா தர்மத்துலே அது நல்லதாத்தா னிருக்குமுணு நம்பிக்கை. ஓட்டும்போது வந்தாரே—தொண்டராமல்ல அவரு—அவுரை நாங் கேட் டேன் சோக்கான சட்டம்னுரு. விவரம் சொல்லத் தெரியலே. வக்கலேக் கேட்டாத்தான் தெரியும் னுட்டாரு. அதுதான் உங்களுக்கு எழுதி யிருக்கேன். நிசமாக் கேக்கு ரேன் எங்ககிட்ட வக்கலுக்குக் குடுக்க பணமிருந்திச்சுனு கடனேக் குடுத்து களிச்சுபிட மாட்டமா? நீங்களே சொல் லுங்க. முளியா முளிக்கிரம். எங்க சித்தப்பாரு ஒரு தடவை வங்கிச் செக்கை வச்சிக்கிட்டு பணம் மாத்த முடியாமே முளிச்ச மாதிரி நாங்களும் முளிக்கிரம். ஆக, நீங்க பெரிய மனசு பண்ணி அந்தச் சட்டத்தைப் புரிச்சுப் புரிச்சு ஒரொரு சராவுக்கும் ஒரொரு கதையா எளுதி எங்கிளுக் குப் புரியுராப்பிலே பத்திரிகையிலே போட்டிகன கோடிப் புண்ணியம். நானும் சந்தைக்குச் சந்தை மொளகாயையும்

புளியையும் நிருத்திப்பிட்டு அந்தக் காசுக்குப் பத்திரி கையே வாங்கி யாரையாச்சும் விட்டுப் படிக்கச் சொல்லி எல்லாரையும் கேட்டுக்கச் சொல்ரேன்.

இல்லே இந்த லேடியோவுலே யாச்சும்தான் சொல் லுங்களேன். அது வந்தாலும் வந்திச்சு, நம்மை (நன்மை) யும் பண்ணிச்சீனு இருக்கட்டுமே. கை யெடுத்துக் கேட்டுக் கரேன் மறந்துடாதீங்க.

இந்த—கீரல் பெரிய கருப்பன்.

# ராக்கன் கூத்துப் பார்த்தான்

“அந்த மூக்க வேளானுக்குப் பொறகு ஒருபயலும் அரிச் சந்திரனுக்குப் பொறக்கல்லேடா” என்றான் கருப் பண்ணத் தேவன்.

“அப்படின்னா?” என்று கேட்டான் பக்கத்திலே நின்றிருந்த ராக்கன்.

கருப்பன் : “அவனுக வேசங்கட்டி வந்து நின்னுட் டாங்கன்னா, அந்த டாப்புச் செறப்புகளையும் கெடுபிடிகளை யும் அவுங்ககிட்ட பாக்கணும். ஏண்டாலே! சும்மா ஒடிச மூங்கிக் குச்சியைத் தூக்கிக்கிட்டு ‘தொதரினம்’னு வந்து பரணுமேலே தாவிட்டா அவன் அரிச்சந்திரன் ஆயிடுவானா? இப்போ என்னடா ஆடறானுவ கூத்து? பேய்க்கூத்து!”

ராக்கன் : இப்ப ஒண்ணும் சொல்லாதே அப்பேன். இன்னக்கி கூத்தை முழுக்கலும் பாத்துட்டு பெறகு சொல்லு!

கருப்பன் : என்னடா பாக்கறது? வர வர எனக்கு கூத்துன்னாலே மனங்கொள்ளலே.

ராக்கன் : ஏன்?

கருப்பன் “நான்! தஞ்சாவூரிலே ஒரு தபா டிராமா பாத்தேன். மினுமினுச் சட்டை ஒடம்போட ஒத்தன் வந்து நிண்ணான். நான் தாண்டா அரிச்சந்திரன்னான். ஹூம்—ஒரு கூத்து உண்டா? வையாளி நடை உண்டா? சவை வணக்கம் உண்டா? ஒண்ணுமில்லே. எங்க மூக்க வேளான் வந்து ‘ஆரடி நீ’ன்னு எடுத்து விட்டான்னா, ஒரு பாட்டுலே, புள்ளத் தாச்சி எல்லாம் கலங்கிப்புடுவாளுவ தெரியுமா?” இவ்வாறு சொல்லிக்கொண்டே மீசையில் கைபோட்டு ஒரு தடவை உருவி விட்டான் கருப்பண்ணத் தேவன்.

அவன் காலத்திலே ஏராளமான தெருக் கூத்துகளை அவன் பார்த்திருக்கிறான். அவன் நாட்டாண்மைக்காரனா யிருந்தபோது சில சமயம் கூத்துகள் நடத்த ஏற்பாடும்

செய்திருக்கிறான். அப்பேர்ப்பட்ட பழைய அநுபவமுடைய கருப்பண்ணன் இன்று நாடகத்துக்கு வரமுடியாதென்று சொல்லவே, ராக்கனுக்கு கவலையா இருந்தது.

ராக்கனுக்கோ டிராமா பார்க்கப் போகணும். வம்பு பேசக் கூட ஒரு ஆசாமி இருந்தால் தான் நாடகமும் 'நல்லா' இருக்கும் அவனுக்கு. ஆகவே கருப்பண்ணத் தேவனுக்கு வேறோர் தினுசில் வர்ணிக்க ஆரம்பித்தான்.

"என்ன அண்ணே! பழைய கூத்தை நெனைச்சுக்கிட்டு அளுவுரே! இப்போ டிராமாவிலே ஒரு பொம்புளையே வந்து பொம்புளெ வேசம் கட்டுராளாம். அதைப் பாக்க வரமாட்டேன்கிறியே" என்று கூறி, ராக்கன் வற்புறுத்தவே கருப்பண்ணன் விட்டுக் கொடுத்தான்.

"ஆமடாப்பா! என் ஆயுசுலே இதொண்ணு பாக்கி இருக்காங் காட்டியும்! ஹூம், வரேன்" என்று தேவன் கூறி, தன் முண்டாசை அவிழ்த்து இன்னொரு தடவை கட்டிக்கொண்டு புறப்பட்டான்.

கிராம தேவதைகளான அய்யன், பிடாரி கோவில்களுக்குக் கூத்து வைத்தால் மழை கட்டாயம் பெய்யு மென்பது நமது கிராம வாசிகளின் வெகு காலத்து நம்பிக்கை.

சித்திரை மாதக் கடைசியி லிருந்தே இந்த மாதிரி கிராம விழாக்கள் பல ஆரம்பமாகிவிடும்.

ஜோசியரிடம் நாள் பார்ப்பார்கள். பொதுக் கூட்டமாக ஊர் கூடும். குயவனைக் கூப்பிட்டு மண் கொடுப்பார்கள். அந்த மண்ணைக் கொண்டு போய் வேறு மண்ணோடு கலந்து அந்தக் குயவன் மிருக விக்கிரகங்களைப் பண்ண வேண்டும்.

அய்யனாருக்கு மாடு, யானை; கறுப்பனுக்குக் குதிரை; பிடாரிக்கு யானை; இப்படி அந்தந்தத் தெய்வங்களுக்கு ஏற்ற வாகனங்கள் மண்ணால் செய்யவேண்டும்.

உருவங்கள் தயாராகிவிடும். குறித்த தினத்திலே ஊர் கூடி, கொம்பு, தப்பு, தம்பட்டம் முழங்க, குயவன் வீட்டுக்கு ஊர்வலமாக வருவார்கள். எல்லாக் கரைக்காரர்களும் வந்து விட்டார்களா என்று சரிபார்க்கப்படும். வராதவனுக்கு ஆள் அனுப்பி வரவழைப்பார்கள். எல்லாரும் வந்தவுடன் குதிரைப் பொம்மையைப் பொது நிலமான பொட்டலுக்கு எடுத்துச் செல்வார்கள்.

அந்த மைதானத்துக்குக் குதிரை எடுப்புப் பொட்டல் என்று ஒவ்வொரு கிராமத்தாரும் பெயர் வைத்தழைப்பதைக் கேட்டிருக்கலாம். அந்தப் பொட்டலில் தான் குதிரைப் பொம்மைக்குக் கண் திறக்கப்படும். பலியிட்டு, சாம்பிராணி போட்டு, திருஷ்டி கழித்து, தொட்டுக் கும்பிட்டு, குலவை இட்டு, ஆடிப் பாடுவார்கள். "மாடுகளுக்குக் காத்து கருப்பு வந்து ஒண்டாம விருக்கணுமப்பா!" என்று வரங் கோருவார்கள்.

குதிரைக்குக் கண் எழுதியவுடன் அது ஆர்ப்பரித்து ஊராரை முழித்துப் பார்ப்பதாகப் பேசிக் கொள்வார்கள். அதன் கழுத்துக்கு வேட்டி கட்டுவார்கள். மண்ணை நம்பி வாழும் அந்தக் குடியானவர்கள் மண் குதிரைகளைப் பூர்ணமாக நம்பி வணங்குவது ஓர் ஆச்சரியமில்லை அல்லவா? அந்தக் குதிரையைத் தூக்கிக் கொணர்ந்து கோவில் வாசலில் வைப்பதற்குள் அநேகமாக ஒன்றிரண்டு தூற்றல் போடுமென்பது அவர்கள் நம்பிக்கை. அப்படி மழை பெய்யாதிருந்து விட்டாலும் தெய்வத்தைக் குற்றம் சொல்ல மாட்டார்கள். தாங்கள்தான் ஏதோ தெய்வ குற்றம் செய்திருப்பதாகப் பேசிக் கொள்வார்கள்.

ஊரில் இந்தப் பத்து நாளும் ஒரே கொம்மாளம்தான். சாமி ஆட்டங்கள் நடக்கும். பாட்டன் பாடிய பாட்டுக்குப் பணம் சேர வேண்டுமென்று கேட்டுக்கொண்டு பாவாணர் வருவர். மந்திர வேலைக்காரன் வந்து மாமரம் முளைக்க வைப்பான். வேப்பிலையை அள்ளி வீசி நண்டுத் தெருக் கால்களாக நகரச் செய்வான் ஒரு மந்திரவாதி. எதிர் மந்திரவாதி யொருவன் தேங்காய் மீது மந்திரம் போட்டு எதிரியைத் தாக்குமாறு செய்வான். கடைசியில் ஊரார் இருவருக்கும் சன்மானங்கள் தந்து, ஊருக்கு ஒரு மைல் தூரத்துக்கு அப்பால் கொண்டுபோய் விட்டுவிட்டு வருவார்கள்.

இந்த உற்சவங்களிலே மிகமிக ரஸமானது இளவட்டக் கல் உற்சவம். இளைஞர்களின் காதல் பயிருக்கு இது ஒரு நாற்றங்கால் என்னலாம்.

ஊரின் ஒரு வீட்டு மூலையில் இளவட்டக் கல் என்று ஒரு கல் கிடக்கும். அதை ஊரின் இளம் பெண்கள் உருட்டிக் கொண்டு வந்து நடு வீதியில் போடுவார்கள்.

அந்தக் கல் சுமார் இரண்டடி சுற்றளவுள்ள பந்து போல் இருக்கும். இருநூறு பவுண்டுக்குமேல் அய்நூறு பவுண்டுவரை எடை இருக்கும். அதை ஊரின் இளவட்டக் காளைகள் ஒவ்வொருவராக எடுத்துத் தோளில் வைத்துக் கொண்டு சுற்றி வருவார்கள்.

அதைத் தூக்க முடியாதவனைப் பார்த்து இளவட்டப் பெண்கள் சிரித்துக் கை கொட்டுவார்கள்.

வம்பு முற்றிவிட்டால் சேலையை வரிந்து கட்டிக் கொண்டு வந்து சில பெண்களும் அந்தக் கல்லைத் தூக்கிப் போட்டி போடுவது ஆச்சரியமாக இருக்கும்.

கத்தி சுழற்றுதல், தேங்காயை ஒருவன் தலையில் வைத்துச் சிலம்பக் குச்சியால் உடைத்தல் முதலிய வீர விளையாட்டுகளெல்லாம் பகல் வேளையில் நடக்கும். மூன்று நாள் கழித்து ஊரில் கூத்துக் கட்ட ஏற்பாடாகும்.

கிராமத்தின் ஒதுப்புறத்திலே, கோவிலின் சன்னிதானத்திலே, குளத்துக்கு அருகிலே இரண்டு மூன்று ஏக்கரா உடைய பொட்டல் இருக்கிறதே அதுதான் கூத்துப் பொட்டல்.

சாதாரண நாட்களிலே உண்ணி பிடித்த மாடுகளை ஒதுக்கிக் கட்டி வைக்கும் கூத்து மைதானமாக அது உபயோகிக்கப்படும்.

அதற்குப் பக்கத்திலே நிரந்தரமாக ஒரு கொட்டகை இருக்கும். ஊர் தேடிவரும் சன்யாசி, கஞ்சாப் பரதேசி, குடுகுடுப்பைக்காரன் முதலியவர்களுக்குத் தங்கு மிடமாக விளங்கும் அந்தக் கொட்டகை. அதுதான் கூத்துக் காலங்களில் நடிகர் வேஷம் போட்டுக்கொள்ளும் கிரீன் ரூமாக விளங்கும்.

அந்தப் பொட்டலைச் சுற்றி, தோசைக் கடை, கரும்பு வண்டி, கடலைக் கடை, பொரி உருண்டைக்காரிகள் இப்படியாக நிறைந்திருக்கும். சந்தைக்குச் சந்தை தமுக்குப் போட்டு, பெரிய மனுஷன்களுக்கு ஓலைகளும் அனுப்பி இருந்தால், கூட்டம் கூடுவதற்குக் கேட்பானேன்.

கூத்து இன்றிரவு நடக்கிறதென்றால் பகல் மூணு மணிக்கே சில ஸ்திரீகள் பொட்டலுக்கு வந்து தங்கள் வீட்டு ஓலைப் பாய்களை விரித்துப் போட்டுவிட்டுப் போவார்கள். அது இடம் ரிஸர்வ் செய்ததுபோல.

அரங்க மேடைக்கு எதிரில் சுமார் முப்பது கஜ சதுரத்துக்கு வண்ணான் வேட்டிகளை விரித்துப் போட்டுத் தாம்பு கட்டி இருக்கும். அந்த இடம் உத்யோகஸ்தர்களுக்கும், அம்பலம், சேர்வை, நாட்டாண்மைக்காரர் முதலியவர்களுக்கும் ரிஸர்வெட், தெரியுமா?

பிரமுகர்கள் வந்து உட்கார்ந்ததும் அவரவர்கள் இன்னாரென்று கூறி விதூஷகன் அறிமுகம் செய்து வைப்பதோடு அவர்களுக்கு வெற்றிலை. பாக்கும் வைப்பான்.

இரவு பத்தரை மணிக்கு நாடகம் ஆரம்பித்துவிட்டால் அது பெரிய அதிர்ஷ்டம் மாதிரி. என்ன நாடகம் நடத்துவார்கள்? அதிரூப அமராவதியா? டம்பாச்சாரியா? அதெல்லாம் நாகரிகப் பட்டணங்களிலே தான். இந்தப் பட்டிக் காட்டான்களுக்குச் சத்தியவாக் கரிச்சந்திர நாடகம், ராம நாடகம், இரணிய நாடகம் இவைகளே திருப்தி தருவன. இவைகள் நடத்தினால்தான் மழை வரும் என்பது அவர்கள் நம்பிக்கை.

நாடகம் நடக்கும்போது கிராமத்து மக்கள் காட்டும் பக்தி சிரத்தை சாமான்யமானதன்று. நரசிம்மர் தூணில் தோன்றும் தினத்தில் அவ்வளவு பேரும் சரீர பரிசுத்தராய் வருவார்கள். அன்று இராமாயணமா இருந்தால் சீதையிடம் தன் கைக் குழந்தையைக் கொடுத்து வாங்கிக் கொள்வது கிராமத்துப் பெண்களின் வழக்கம். அந்தக் குழந்தை இராமனைப் போலச் சீலனாக இருக்குமென்பது அவர்கள் நம்பிக்கை. சந்திரமதி வந்துவிட்டாளானால் ஊர் முழுதுமே அவளோடு பிரலாபிக்கும். சந்திரமதிக்கு கொள்ளிக் காசு போடாதவனும் கிராமவாசியா? லோகிதாசனுக்குப் பட்டம் கட்டும் தினத்தில் பட்டு வேட்டிப் பரிசம் தராத மிராசுதாரும் மிராசுதாரரா?

கருப்பண்ணன்-ராக்கன் கதையை விட்டு விட்டோமே. அன்று அவ்வூரில் நடக்க இருந்தது பழங்காலக் கூத்துமன்று; பட்டணவாச டிராமாவுமன்று. இரண்டு சம்பிரதாயங்களையும் பிசைந்த கூத்து டிராமா ஆகும்.

"சித்தி விநாயகனே—உந்தன்
செஞ்சரண மலரையே
தஞ்சமென்று நம்பினேனே"

என்று பாடிக்கொண்டே பொட்டிக்காரன் வாசிக்க ஆரம்பித்தான்.

திரை தூக்கப்பட்டது.

அட்டையால் செய்த யானை முகத்தை மாட்டிக் கொண்டு ஒரு பையன் உட்கார்ந்திருந்தான்.

சூத்ரதார் வந்து சேர்ந்தார். ஒரு லாங் கோட்டு, முழங் கால்வரை தொங்கும் அங்க வஸ்திரம், டர்பன் இவைகள் சகிதம் வந்து சுலோகங்களையும், கம்பர் பாட்டுக்களையும், சிவப்பிரகாசர் பாடல்களையும் சொல்லி, அன்றையக் கதை யையும் அரை மணி நேரம் விஸ்தரித்துக் கூறிவிட்டு, விதூ ஷகனை அழைத்து அவனிடம் சபையின் ஹாஸ்ய ரசத்தை யும் ஒப்புவித்துவிட்டு, சபையோரை ரஸிக்குமாறு வேண் டிக்கொண்ட பின்னர் விலகினார்.

விதூஷகன் பாடினான்.

"நாமதாரிக் கூட்டம்—நாங்க
நண்டு திங்கமாட்டம்"

என்பது அவன் பாடிய ஹாஸ்யப் பாட்டாம்!

பிறகு சரஸ்வதி வேஷம் வந்து ஸ்தோத்திரங்களை வசூல் செய்துகொண்டு மறைந்தது.

அடுத்த காட்சி மோகினி ராசனும், மோகினி ராணியும்!

எதிர்ப்புறத்துத் தட்டி ஓரத்திலிருந்து ஓர் பாடல் கேட்டது:

"நாள்கிழமை நட்சத்திரம்
பார்த்து வந்தேண்டி
குறிகள் கேட்டு வந்தேண்டி—பலபா
கேட்டு வந்தேண்டி."

வந்தான் கால் சதங்கைகளை சலசலத்துக்கொண்டு மோகினி ராசா!

அத்தனை நேரம் சும்மா குந்திக் கொண்டிருந்த கருப் பண்ணத் தேவன் "அடி சவ்வாசு! வாடா வவுத்துப் பய மவனே!" என்று வாய்விட்டுக் கூறிக் கை தட்டினான்.

ராக்கன் சும்மா இருப்பானா? "சும்மாயிரு அப்பேன். நீயும் கிளம்பி ஆடிராமே!" என்று தமாஷ் பண்ணினான்.

மேடையிலே மோகினி ராசாவும் மோகினி ராணியும் சிருங்கார ரஸம் விநியோகம் செய்து கொண்டிருந்தார்கள்.

"கொண்டானடிப்பேன் மேடையிலே" என்று ராசா பாடினுன்.

"கொஞ்சினு வைப்பேன் தவடையிலே" என்று எதிர்ப்பாட்டுப் பாடினுள் மோகினிப் பெண்.

இந்தத் தமாஷுக்குச் சபையில் பிரமாத ஆரவாரம் —சிரிப்பு ஏற்பட்டது. அந்தக் காட்சியும் முடிந்த பின்னர் "திரிலோகமும் புகழும் சுந்திர....ஆய்....ஆய்....ஆய்...." என்று சுருதியுடன் கார்வை கலந்த ஓர் குரல் கேட்டது. அதுதான் ராஜபார்ட்டின் குரல்.

"அடி சிங்கனே! கட்டீட்டாண்டா களரியே!" என்று சவ்வாசு கூறினுன் கருப்பண்ணன்.

ராஜபார்ட்காரன் அதே வரியை எட்டுத் தடவை திரைக்குப் பின்னிருந்து பாட, பொட்டிக்காரன் எட்டுத் தடவை பாடிய பின்பு, வந்து நின்றது ராஜா வேஷம்!

"பார்ரா ராஷ நடையை!" என்று சந்தோஷப்பட்டான் கருப்பண்ணன்.

ராக்கன் பேச்சு சொத்தையா என்ன? "இப்ப என்ன பாக்கரே! அந்தக் குட்டி வந்த அப்பறம் பாரேன்! சீமை எல்லாத்திலும் செகச் சோதியான பேராம் அவளுக்கு! பொறுத்துப் பாரப்பா!" என்ருன் ராக்கன்.

ராஜபார்ட்காரன் "நான்தான் அரிச்சந்திரன் என்று சபைக்கு அறிமுகம் செய்துவைத்துக் கொண்டு அந்த ஊர்த் தெய்வத்தின்மீது துதி பாடிவிட்டு அரச நீதியைப் பற்றி அரைமணி நேரம் வாசாம கோசரமாய்ப் பிரசங்கம் செய்தான்.

"பிரியே சந்திரமதி" என்று கூப்பிட்டான் அரிச்சந்திரன்.

"பகாரியாலா தேகோ ஆயிஸபன்" என்று பாடிக் கொண்டு டான்ஸ் பண்ணிக்கொண்டே வந்து சேர்ந்தாள் சந்திரமதி. சபை முழுவதும் ஒரே கரகோஷம்.

"அடே பார்ரா! மின்னல்ரா" என்ருன் கருப்பண்ணன்.

ராக்கன் பராக்குப் பார்ப்பதை நிறுத்திவிட்டு மேடையை நோக்கினுன். உற்றுப் பார்த்தான். கண்ணைக் கசக்கிக்கொண்டு மறுபடியும் பார்த்தான்.

"மோசம் வந்திருச்சு அப்பேன்!" என்ருன் ராக்கன்.

கருப்: என்னடா மோசம்?

ராக்: அவ மொளங் கைக்கிட்டே பாத்தியா லேடிப் பச்சையை!

கருப்: ஆமா, அதுக்கென்ன?

ராக்: என்னவா? அந்தக் குட்டி யாராட்டமா இருக்கா தெரியலே?

கருப்: யாராட்டமாவா? சந்திரமதி யாட்டமாத்தான்.

ராக்: எனக்கு மூளே இருக்கால்லியான்னு பாக்கரே! நீ புள்ளே செத்த வூட்டிலே துள்ளிக் குதிப்பே! பாருன்னுப் பாரேன்.

ராக்கன் முகம் கோபத்தால் சிவந்தது. கண் ரப்பைகள் துடித்தன. "எனக்குக் கூடச் சமுசயமாத்தாண்டா இருக்கு, தம்பீ! அப்படி இருக்குமா?" என்று இழுத்தாற் போலச் சொன்னுன் கருப்பண்ணன்.

ராக்: நீ பாம்புலேயும் சேரமாட்டே, பளுதைலேயும் சேரமாட்டே. நல்லாக் கண்ணே வெளக்கிப்பிட்டுப் பாரு!

கரு: ஆம்மாண்டா! ஒரு சாடைக்குச் செல்வி யாட்டந்தா னிருக்கு என்று கூறிப் பெருமூச்சு விட்டான்.

செல்வி யார்? செல்வி ஒரு காலத்தில் ராக்கனின் காதலி. கல்யாணத்துக்கு நிச்சயமும் பண்ணியாகி விட்டது. ஆனுல் ராக்கனிடம் கல்யாணத்துக்குப் பண மில்லா திருந்தது. பணத்துக்காக ஆறு மாதம் கொழும் புக்கு ஓடிப் போய்க் கூலி வேலே செய்தான்.

ஆறு மாதம் கழித்துப் பணத்தோடு வந்து பார்க்கிருன். அந்தச் செல்வி எங்கேயோ ஓடிப்போய் விட்டாளாம்!

அவளே விடுவதில்லே என்று ராக்கன் நிச்சயித்தான். அவளேப் பழிக்குப் பழிவாங்கி விடுகிறதென்று நிச்சயம் பண்ணினுன். தான் கொண்டு வந்திருந்த அந்த நூறு ரூபாயையும் அவளிருக்கு மிடத்தைத் தேடிப் பிடிக்கச் செல வழித்தான். ஒன்றும் பயனில்லே.

இங்கே கூத்துப் பார்க்க வந்த இடத்தில் மேலே அந்தச் செல்வியை ராக்கன் பார்த்தால், அவனுக்கு ஆத்திரம் பொங்காதா?

கருப்பண்ணன் ராக்கனேப் பிடித்துக்கொண்டு இருக்க, ராக்கன் கோபத்தோடு கொக்கரித்துப் பேசினுன்.

“அரிதாரத்தைப் பூசிக்கிட்டாப்புலே நெறம்தான் மாரிப்போவும்! களுதைப் பய மவுளே! சாடையுமா மாறிப் போவும்? குரலுமா மாறிப் புடும்?” என்று கூறிக் கொண்டே கையிலே கம்புடன் மேடையை நோக்கிப் பாய்ந்தான். உடனே கருப்பண்ணன் அவனை இழுத்து உட்கார்த்தி வைத்தான்.

அதே சமயத்தில் ஆக்டர்களுக்கு ஒரு பெரிய சன்மான நேரம் வந்தது. கட்டியக்காரன் சபையிலே வந்து சொன்னான்:

இம்புட்டுப் பொருத்தமா, பொம்புளை தானென்னு எல்லாரும் மயங்கும்படி வேஷத்தைப் போட்டுக்குன கான லோல, கரவேக சுரவேக, நாட்டியகலா நவரத்னம், ஜெகதல மெங்கும் புகழ்பெற்று, ஜெலப் பிரதேசங்களிலும் மலைப் பிரதேசங்களிலும் மெடல்கள் வாங்கிய சங்கீத கேசரி ஸ்திரீ பார்ட்டு அச்சுதன் நாயருக்கு இம் மணுப்பட்டி ஊரார் கொடுத்த மெடல் இது” என்று கம்பீரமாகக் கூறினன் விதூஷகன்.

கருப்பண்ணத் தேவன் “என்னடா மவுனே!” என்று சொல்லிக்கொண்டே ராக்கனைப் பார்த்தான்.

ராக்கன் பதிலின்றித் தலையைக் கீழே குனிந்து கொண்டான்.

# நாளேர் பொன்னுழவு

நமது கிராமங்களில், வருஷா வருஷம், பயிர்த் தொழிலை ஆரம்பிப்பதற்கு அறிகுறியாக "நாள் ஏர் பூட்டுவது" என்று ஒரு விழா கொண்டாடுவது வழக்கம்.

அன்று வெள்ளிக் கிழமை; ரேவதி நட்சத்திரமும்கூட. மாமரப்பட்டி நாட்டாண்மைக்காரன் பொன்னையத் தேவன் பேர் ராசிக்கும் பஞ்சமி திதிக்கும் நாள் நன்ருய்ப் பொருந்தி இருந்தது. பத்து நாழிகைக்கு முகூர்த்தம் பார்த்திருந்தார்கள். கிராமத்தானுக்குப் புது வருஷத்தில் முதல் திருவிழா இதுதான். அன்று அந்த ஊர் ஜனங்கள் எல்லோரும் அதிகாலையில் ஸ்நானம் செய்து விபூதி, குங்குமம், சந்தனம் அணிந்தவர்களாய், தலையில் முண்டாசுகளுடன், பிள்ளையார் கூடத்து வாசலில் நின்றிருந்ததைப் பார்த்தால், "எல்லோரும் இந்நாட்டு மன்னர்" என்று பாரதி எழுதியது ஞாபகத்திற்கு வரும்.

சுழி, குளம்பு, நிறம், கால் முதலிய அங்க சுத்தம் பொருந்திய எட்டு அழகான காளைகள் நின்றுகொண் டிருந்தன. வழக்கம்போல, சுப்பையா ஆசாரி, அவசர அடியில் அடித்துக்கொடுத்த புதுக் கலப்பை பொன்னையத் தேவன் தோளின்மேல் இருந்தது.

"ஏண்டா, ஊரெல்லாம் வந்தாச்சா ?" என்று பொன்னையத் தேவன் கேட்டான்.

யார் யார் வந்திருந்தார்கள் என்பது அறுபத்தொன்பது வயதான அவனுக்கு நன்ருகத் தெரியும். ஆனாலும், இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் ஏற்படும் சில சிறிய தவறுதல்கள் கூட விபரீதமான பலனை உண்டாக்கிவிடும் என்று அவன் ஜாக்கிரதையாக இருந்தான்.

"ஒட்டுக்கும் வந்தாச்சு!"

"ஏண்டா, நே. ் வந்திருச்சாடா ?"

"அய்யரு தான் சொல்லி இருக்காரே, அப்பரம், வராமெ இருக்குமா ?" என்ருன் ராக்கன்.

"ஆச்சு. பத்து நாளி யாச்சு, வாங்க நல்ல நேரத் துலே—"

"ஆமடாய்யா, கௌம்புங்கடா! 'ஆதீனங் காத்தானே நாடு செளிக்க வேணும், நல்ல மளெ பெய்ய வேணும்'முனு வேண்டிக்கிங்க........அடெ லெ ராக்கா! மாடுகளைப் புடிச்சிக் கிட்டு வாடா!"

வாத்திய கோஷங்கள் முழங்கின. ராக்கன் வேளாளர் களின் விருதுகளைப் பிடித்துக்கொண்டு முன் சென்றான். 'எருதுடையான் வேளாளன்' என்று காகனார் கூறுகிறார்.

நாளேர் பூட்டுவது கிராமத் தலைவன். கிராமப் பொதுப் பிள்ளையார் மடத்துக்குச் சொந்தமான மானிபச் செய்யில் கலப்பை பாய்ச்சுவது வழக்கம். முதல் முதலாக இந்தப் பொன்னேர் பூட்டி உழுத பிறகுதான் மற்ற விவ சாயிகள் உழவு ஆரம்பிப்பார்கள்.

கூட்டம் வயலுக்குப் போய்ச் சேர்ந்தது. பொன்னை யத் தேவன் சூரியனைப் பார்த்து வணங்கினான். காளை களின் வால்ப் புரத்தைத் தொட்டுக் கண்ணில் ஒத்திக் கொண்டான். கலப்பை பூட்டினான்.

"மாரியாத்தா நீதான் துணை!" என்று சொல்லி வயலில் இறங்கினான். ஆகாயத்தைப் பார்த்தான். இரட் டைக் கருடன்கள் இட புறத்தில் வட்ட மிட்டன. அக மகிழ்ந் தான். கலப்பையைத் தொட்டுக் கும்பிட்டான். 'ந்தா!' என்று ஒரு சிறு சத்தம் கொடுக்கவும் பொன்னேர் புறப் பட்டது.

"மாரியாத்தா நீ தான் துணை! வயலுண்டு, நீயுண்டு! ஆறு மாதங் களித்து வருவேன். சாக்குகளில் நெல்லைக் கட்டி, வயல் வரப்பில் வைத்துக் காத்துக்கொண்டிருக்கணு மம்மா!" என்று மட்டும் அவன் சொல்ல வில்லை.

"தாயே! நானும் உழைக்கிறேன். உழுகிறேன், பரம்படிக்கிறேன்; விதைக்கிறேன், நடுகிறேன், களை யெடுக் கிறேன், காவல் காக்கிறேன். நீயும் துணை செய் அம்மா! மழை பெய்ய வேணும், பூச்சி புழு விழாமல் செய்ய வேணும்! பயிர் ஓங்க வேணும்!" என்றான்.

# புகை இலை

இடம்: க்ஷீராப்திக்கரை

காலம்: அமிர்தம் கடைந்த ஒரு மணி நேரத்திற்குப் பின்.

பாத்திரங்கள்: நாரதர், ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன்.

ஆகாயத்தில் சில கங்குகள் பறக்கின்றன. கடற் கிளிஞ்சல்களும், பாசிகளும், ஒதுங்கிக் கிடக்கின்றன. ஒரு மைல் தூரத்தில் சிரமம் தாங்க மாட்டாமல், ஊர்ந்து, ஊர்ந்து செல்லும் வாசுகியின் பெருமூச்சு கேட்கிறது. சமுத்திர ராஜன் வலி தீர, உடம்பை நெளித்துக்கொள் கிறான். சேஷ ஹோமம் ஆன கல்யாண வீடு போல் சோபை இழந்து கிடக்கிறது பாற்கடல் கரை.

வானவீதி வழியாக நாரதர் பாடிக் கொண்டே வருகி றார். பாற்கடல் கரையில் வந்து இறங்குகிறார். இந்தக் காக்ஷி யைப் பார்த்துவிட்டு, என்ன ஆசை, என்ன ஆசை! ஈசனு யிருந்தாலும் ஆசை விடவில்லையே. கிடைத்த சாமான் களைப் பங்கு போடுவதில், ஒருவருக் கொருவர் முந்திக் கொண்டதை நினைக்க நினைக்க வேடிக்கையாக இருக் கிறதே. வாசுகிக்கும் மந்திர மலைக்கும், என்னைப் போல இதே வேலையாக அலைந்த மற்றவர்களுக்கும், ஏதாவது கொடுத்தார்களா? அட, பாபமே! மரியாதைக்காவது, 'இந்தா, நாரதா' என்றாவது சொன்னார்களா? சுய காரியப் புலிகள்............யாரா யிருந்தாலென்ன, அவனவன் வேலை தான் பெரிசு என்ற அபிப்பிராயம் பெரிய இடங்களுக்கும் வந்து விட்டது. சரி........நமக்கும் நம் வேலை தான் பெரிசு, ஆரம்பிப்போம். முன்பே செய்யாம லிருந்தது பிசகு." யோஜிக்கிறார்.

பறந்த கங்கு ஒன்று அவர் காலடியில் வந்து விழு கின்றது. குனிந்து எடுக்கப் போகிறார். அதற்குள் அந்தக் கங்கு செடியாக மாறி தளிர்க்கிறது.

நாரதர் முகம் ஆச்சரியத்தால் மலர்கிறது.

நாரதர்: வல்லவனுக்குப் புல்லிருந்தாலே போதும். செடியே இருக்கும் போது........" நமோ ருத்ராய ப்ரும்மவே

ஸ்ரீமந் நாராயணைப்ருஹி" என்று மூன்று தடவை ஸ்மரித்து கை கூப்பிக் கொண்டு கூப்பிடுகிறார். சண்டைக்குத் தண்டெடுத்து ஏரோப்ளேன் கூட்டங்கள் வருவது போல் ஒரு சத்தம் கேட்கிறது.

கருடா ரூடராக மகா விஷ்ணுவும், ஹம்ஸ வாகனத்தில் ப்ரும்மாவும் பறந்து வர, அவர்களுடன் ரிஷபா ரூடரும் வந்து சேருகிறார்.

நாரதர்: நமஸ்தே, ஸ்வாகதம் இதம். அர்க்யபாத்ய. ஆசமனீயம். (சமுத்திரத்துப் பக்கத்தைச் சுட்டி வலது கையை மூன்று தரம் அசைக்கிறார்.)

மும்மூர்த்திகள்: கல்யாண்! மங்கள முண்டாகட்டும்!

சிவன்: அடாடா! நாரதனா? (பெரு மூச்சு விடுகிறார்.) நல்ல சமயம். ப்ரும்மாவும், விஷ்ணுவும் சேர்ந்து பிரார்த்தித்தார்களே என்று ஆலகாலத்தைச் சாப்பிட்டு விட்டேன். அது என்னமோ உடம் பெல்லாம் கத கத வென்று காந்துகிறது. எங்கே, ஒரு ஸாமம் சொல்லு. குளுரக் குளுரக் கேட்போம்.

விஷ்ணு: நாரதா, கோபிக்கட்டி இருக்குமே கொஞ்சங் கொடு. சமுத்திரத்துக்கு அடீலே உட்கார்ந்திருந்தது, ஜெலதோஷம் உபத்திரவமாக இருக்கிறது. (நாரதர் கோபிக்கட்டி எடுத்து கொடுக்கிறார்.)

ஓய் மைத்துனரே! கொஞ்சம் கெங்கா ஜலம் கொடும் ஐயா, பத்தாவது அரைத்துப் போட்டுக் கொள்வோம்.

ப்ரும்மா: குழந்தை ஏண்டா, வெய்யிலிலே........சரி. சிறு பிள்ளையைப் போல் அலையாதே.

விஷ்ணு: அடாடா என்ன வாத்ஸல்யம். ப்ரும்மா வாலே பேச முடியல்லியே. என்று கிண்டலாகக் கூறுகிறார்.

நாரதர்: மாதா சரஸ்வதிக்கும் வந்தனம். ப்ரபோ, வக்ஷஸ்தலத்திலே யாரு? மஹா லக்ஷ்மியா? பசுபதே, உடம்பு காந்துவானேன்? தங்கள் தலையிலே இருப்பவன் பாற்கடலின் குளிர்ச்சிக் கட்டி யல்லவா? அமிருதமய கிரணனை அணிந்த பின் உடம்பு காந்தவாவது?

அதிருக்கட்டும். நீங்கள் எல்லோரும், ஒரு சாமானை மறந்துவிட்டீர்களே!

மூவரும்: என்ன? எங்கே யது?—பரம பக்தன்! பரம பக்தன்! காண்பியும்.

நாரதர்: அதோ, (என்று கீழே முளைத்திருக்கும் செடியைக் காட்டுகிறார்.)

அந்தச் செடியின் அழகான இலைகளும், செம்புத் தகட்டில் சிகப்புப் பதித்தது போல், அதில் பரந்து கிடக்கும் புள்ளிகளையும், சுட்டி சுட்டியாக தங்கத்தை உருக்கி ஊத்தியது போல் படர்ந்திருக்கும் ரேகை களையும், புஷ்பிக்காமலே இலையி லிருந்தே மணம் வீசுவதையும் பார்த்து மூவருக்கும் ஆவல் பெருகியது. கவனித்தார் நாரதர்.

அவர்கள் முகத்தில் படர்ந்த ஆசையின் களை அவர்களுக்குள் விரோதத்தை உண்டாக்கும் திருஷ்டியில் வந்து முடிவதைக் கண்டார் நாரதர். தேவாசுர யுத்தம் நடந்தால், இவர்களை உதவிக்குக் கூப்பிடலாம். இவர்களுக்குள்ளேயே சண்டை வந்தால்? யாரை மத்தியஸ்தத்துக்குக் கூப்பிடுவது என்று சந்தேகம் உண்டாயிற்று.

அதற்குள் மாயன் செடியைப் பிடுங்குவதற்காகக் கையை நீட்டினார். மகாதேவன் கையைத் தள்ளினார். பிரமித்து நின்றார் ப்ரும்மா.]

நாரதர்: ப்ரபோ, பெற்றவர்கள் சண்டை இட்டுக் கொண்டால் பிள்ளைகளின் கதி என்ன ஆவது?

முதலில் உங்கள் ஒவ்வொருவருக்கும் இதிலுள்ள பாத்தியதையை நிரூபியுங்கள்?

ப்ரும்மா: என்ன நிரூபிக்கிறது? அமிர்தம் கடைவதற்கு முதலில் பிரார்த்தனையே நான்தானே செய்தேன். என் முயற்சி இல்லா விட்டால், 'எரிகிற வீட்டிலே எடுத்தது ஆதாயம்' என்ற மாதிரி, உச்சை சிரவமும், ஐராவதமும், லக்ஷ்மியும், சந்திரனும் எப்படிக் கொள்ளை போக முடியும்?

(மாயனது கறுத்த முகம் சிவந்தது.)

விஷ்ணு: ஒருவரும் கொள்ளை யடிக்க வில்லை. கூர்மாவதாரம் எடுத்து முதுகு நெளிய, நான் தாங்கினேனா? உன் தகப்பனார் தாங்கினாரா,—கேட்கிறேன்?

ருத்ரன்: தாங்கினத் தாங்கின படியே இருக்கவேண்டியது தான். பாம்பின் மேலே படுத்திருப்பதால் விஷம் சாப்பிட்டு விட முடியுமா? எங்கே, ஆலகாலம் வந்தவுடனே அதைச் சாப்பிடுவது தானே? அடியேன் சாப்பிட்டிருக்காத பக்ஷத்தில், என்ன வாகி இருக்கும்?........

விஷ்ணு: ஏன்?....மோகினி அவதாரமும் தாங்களே....

ருத்ரன்: நான் ஏனையா வேஷம் போடறேன்? மோஹனவதாரம் எடுக்காமலேயே ஒரு சிரிப்பு சிரித்தால் போச்சு. இதிலே தலையிட்டதே பிசகு. இவ்வளவு நேரம், ஸிம்மநந்தனத்திலே, ஒரு ஆவர்த்தனம், தாண்டவம், நடத்தி இருப்பேன்,

நாரதர்: ப்ரபோ, அப்படிச் சொல்லக் கூடாது, தாங்கள்.

ருத்ரன்: என்னப்பா, தாங்கள்? பெறத் தெரியாமல் பிள்ளைகளைப் பெற்ற ப்ரும்மாவும், அவன் தகப்பனும், எப்பாடு பட்டால் எனக்கென்ன என்று போக வேண்டியது தானே?..........இல்லையா நாரதா?—அடெ..........தேவன் சொல்லுகிற ஸாமத்தை, அசுரன் சொல்லிட்டுப் போறான், அவ்வளவு தானே?

விஷ்ணு: ஆமா, கொடுக்கத் தெரியாமல் வார்த்தையைக் கொடுத்து விட்டு, பஸ்மாசுரனிடம் அகப்பட்டுக் கொண்டு பேந்தப் பேந்த முழிக்கும் போது, இந்த ப்ரும்மாவினுடைய தகப்பன் தானே வரவேண்டி இருந்தது. இதெல்லாம் சமயத்துக்குத் தகுந்தபடி வாய் புளித்ததோ..........

நாரதர்: அடாடா, வம்பு முற்றுகிறதே. எங்கேயாவது, நீங்களாகப் போனதுண்டா? யாகாதி கர்மாக்களுக்கு, பக்தர்கள் கூப்பிட்டுத் தானே போயிருக்கிறீர்கள். அவைகளில் அமிர்த மதனமும் ஒன்று. ஏதோ கூப்பிட்டோம் வந்தீர்கள். இதிலேன் உங்களுக்குள்..........

ருத்ரன்: அப்படியே இருக்கட்டும். யாகசேஷம் ருத்ரனுக்குத் தானே சொந்தம்? இந்தச் செடி என்னுடையது தானே? சுருதி வாக்கியப்படி போக.....

விஷ்ணு: இவரை விட அதிகமாக எனக்குச் சட்டம் பேசத் தெரியும். நான் பூலோகத்திலே போய் பத்து அவதாரம் எடுத்திருக்கிறேன் தெரியுமா? என்னிடம் வாதம் பண்ண வருவது பிசகு. சரி, நாரதா, நீயே சொல்லுவது ஒரு முடிவு.

ப்ரும்மா: நியாய விஷயம். ரொம்ப சரியா யிருக்க வேண்டும். என் புள்ளே நீ. எனக்குக் கெட்ட பெயர் வந்து விடக் கூடாது.

ருத்ரன்: ஆமா. "அவையத்து முந்தி யிருக்க"ச்செய்து விட்டார் தந்தை அந்த கவுரவத்தைக் காப்பாற்றிக்கொள்.

நாரதர்: தங்கள் சித்தம், முதலில் உங்களிடையே கூட சண்டை உண்டாக்கிய அந்தச் செடி வந்த விதத்தைச் சொல்லி விடுகிறேன்.

(அவர் பாடிய சுலோகத்தின் பொருள்)

வாசுகியின் விஷக் காற்று, அக்னிபோல் கிளம்பி, மந்தர கிரியிலிருந்த மூலிகைகளில் நெருப்புப் பிடித்துக் கொண்டது. அதன் கங்குகள் ஆகாயத்திலே பறந்தன.

ருத்ரன்: ஓஹோ!

நாரதர்: மதனம் முடிந்ததும் மந்தரகிரியை யதாஸ்தானத்துக்குப் போகச் சொல்லி விட்டோம்! சமுத்திரம் ஆறு யோசனை உள்ளடக்கிக் கொண்டது.

உடம்பைச் சிலிர்த்துக் கொண்டு, மந்தரகிரி கிளம்பவும், அதன்மேல் இருந்த சில மூலிகைச் சருகுகளும், இந்தக் கங்குகளும் கீழே வந்து விழுந்தன.

விஷ்ணு: விழுந்தன........அப்புறம் எப்படிச் செடியாயிற்று?

நாரதர்: அது தானே விசேஷம். முன்பே அமிர்தத் துளிகள் கீழே சிந்திக் கிடந்தன. அதன் மேலே கங்கு வந்து விழவும், அமுர்த பிந்துவால் உயிர் பெற்றுச் செடியாகி விட்டன. அமிர்த ஸ்பரிசம் போராதோ. ஆகவே, புகையிலிருந்து உண்டான இந்த இலை புகையிலை என்று பெயரும் பெற்றது.

விஷ்ணு: அடே. அவ்வளவு........சிறந்ததா? அப்படியானல் இந்த மூலிகைக்கு விசேஷமாக............

நாரதர்: ஆமாம். எரிந்ததிலே போனது போக சிறு வியாதிகளைப் போக்கக் கூடிய அளவு மூலிகை சத்தும், விஷ நெருப்பிலே புட மிருந்ததால் ஏராளமான விஷ சத்தும், துளி அமிர்த சம்பந்தத்தால் கிஞ்சித்து மதுரமும் உண்டு.

ருத்ரன்: சரி. எப்படி யாவது தொலையட்டும் சீக்கிரம்............

நாரதர்: ஆகட்டும். ஓடுகிற தேருக்கு சக்கரம் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் சாவிக்கு முண்டு. அந்த மாதிரி நீங்கள் மூணு பேர்கள் செய்த உதவிகளும் இந்த அமிர்த மதனத்துக்கு முக்கியம் தான். ஆனதால் மூவர்களுக்கும் சமமாக............

ருத்ரன்: சரியப்பா. இலைகளை எண்ணிக் கணக்குப் போடு.

ப்ரும்மா: அக்ரமும், மத்யமும் யாருக்காவது போகட்டும். மூலம் எனக்குத் தான்.

விஷ்ணு: கொஞ்சம் பொறுமை வேணும். நாரதர் சொல்லட்டும்.

நாரதர்: இது சிரஞ்சீவி மூலிகை. இதனுடைய பத்ரம் ரொம்ப விசேஷமானது. இலைகளுக் கெல்லாம் சிறந்தது இதுதான்........

ருத்ரன்: சிறந்தது பில்வந்தான்.

நாரதர்: சரிதான் ஸ்வாமீ, உங்க பில்வம், "திருதளம் திருகுணகாரம், 'இது தளம் ஏகம். குணத்ரயம்,' தெரியுமா? இந்த இலையை பொடி, சுருட்டு, நறுக்கு, என்று மூன்று வகைகளாகப் பிரித்திருக்கிறேன்.

(கோவில் மணிச்சத்தங் கேட்கிறது.)

விஷ்ணு: பாரு மணியடித்து விட்டார்கள் கோயிலில், சீக்கிரம் ஆகட்டும் நாரதா. நேவேத்தியமெல்லாம் சூடாறிப் போய்விடப் போறது.

ருத்ரன்: என் கோயில்லே புதுசா, பத்து மணி வாங்கி கட்டி இருக்காளாம். அதனுலே கொஞ்சம் படித்தரம் கம்மி. சொல்லு நாரதா. வேலைக்குக் கூலி வெறுஞ் சோரு, இருக்கவே இருக்கு; முதலிலே விதாயம் ஆகட்டும்.

ப்ரும்மா: மயிருள்ள சீமாட்டி கொண்டையும் போடலாம், கோதியும் முடியலாம்.

நாரதர்: பகவான் விஷ்ணுவுக்கு அண்ட சராசரங்களும் வயிற்றுள்ளடங்கி இருக்கிறது. அடிக்கடி வயிற்றுப் பொருமல் வரலாம். புகையிலையைச் சுருட்டிச் சுருட்டாக உபயோகித்தால் புகை வயிற்றுப் பொருமலைத் தடுக்கும்.

விஷ்ணு: ஹூம்............

நாரதர்: ருத்ரனுக்கோ தலையிலே கெங்கை. உடம்பிலே சாம்பல், நாட்டியம் ஆடும் வியர்வை, அடிக்கடி ஜலதோஷம் உண்டாகலாம். பொடி உபயோகிக்கலாம்.

ருத்ரன்: ஓஹோ பூசுவதும் பொடி, போடுவதும் பொடியோ?

நாரதர்: ஆமா.

ப்ரும்மா: எனக்கு?

நாரதா: தங்களுக்குத் தழை தான் சிறந்தது. ஏகாக்ர சித்தனுக உட்கார்ந்து சிருஷ்டி செய்துகொண்டே இருப்பதற்குத் தழையைக் கிள்ளி வாயில் போட்டுக் கொண்டால் தகுந்த உதவி செய்யும். மனது ஒரு வழிப்படும். பிறருடன் பேசும் தொந்திரவும் இருக்காது.

ப்ரும்மா: அப்புறம்?

நாரதர்: அமிர்த ஸ்பர்சத்தால் ஒரு போதையும் சிறிது மூலிகை வைத்திருப்பதால் கொஞ்சம் விருவிருப்பும் உண்டாகும்.

விஷ ஸத்து பிறகுதான் வேலை செய்ய ஆரம்பிக்கும். கண் புகையும், நெஞ்சுலரும், கை கால் அசந்துவிடும். ஆயிரம் வருஷம் நிஷ்டை செய்து கிடைக்கும் ஸமாதி நிலை இதை உபயோகிப்பவர்களுக்கு வெகு சீக்கிரத்தில் கை கூடும்.

நாவின் ருசியை ஓட்டும். குண்டலினி சக்தியைக் கிளப்பி, வயிற்றிலும், நெஞ்சிலும், மூளையிலும், அங்கு காந்தலை உண்டாக்கும், பசியாமலிருக்கச் செய்யும்.

(மூவரும் யோஜிக்கிருர்கள்)

ஆகாயத்திலிருந்து தீவிரமான ஒரு சத்தம் கேட்கிறது.

"அச்சுதா, கங்காதரா, ப்ரும்மாவே, வஞ்சனையாக அமிர்தத்தைக் கொடுத்து, சாகவும் முடியாமல் செய்து விட்டீர்களே. அடிக்கிருர்களே அசுரர்கள்! எங்களைக் குளத்தங்கரைக் கல்லாக்கி விட்டீர்களே! வந்தவன் போனவனெல்லாம் துகைக்கிருனே!

அடிபடுவதற்குத் தான அழியாத மருந்துண்டோம். ஓடி வாருங்கள்."

(மும்மூர்த்திகளும் ஓடுகிருர்கள்)

நாரதர்: ப்ரமித்து நிற்கிருர்.

"அடாடா தப்பித்து ஓடி விட்டார்களே. சரி............... ஆனலுமென்ன? பக்த கோடிகளுக்கா பஞ்சம்! போடுகிற இடத்தில் போட்டால் முளைக்கிற விதமாக முளைக்கிறது. (செடியைக் கையிலெடுத்துக் கொண்டு ககன மார்க்கமாய்ப் பூலோகத்துக்குப் புறப்படுகிருர்.)

'ஹரிநாராயண............ஹரிநாராயண............'

# கண்ணன் கொடுத்த கண்

"அடுப்பங் கரையைக் காத்துக்கிட்டு இருக்கிறதுக்கு அளகு என்னத்துக்கு? புருசன் சொன்ன வார்த்தையைக் கேட்டு நடக்கிறவளா இருந்தாச் சரிதானே" என்ருன் ஒருவன்.

"அடே அதுக்குத் தான் அளகில்லெ. புருசனுச்சியும் அளகா இருக்கப் படாதா? அவனுக்கும் கண்ணு ரெண்டும் தெரியாதாம். மாப்பிளெ தான் தேடிப் பிடிச்சானே மருத மூத்தன்" என்று சலித்துக் கொண்டாள் பெண்பிள்ளை.

"பொண்ணு அளகைப்பாக்க கண்ணு தான் கொரைச்சல். ஏதோ குருடன் குரங்கைக் கட்டிக் கிட்டான்னு போறியா? சும்மா அதையே பேசிக்கிட் டிருக்கிறே வா............" என்று இருவரும் வீட்டில் நுழைந்தார்கள். அவர்களின் சந்தனப் பூச்சையும், வெற்றிலே பாக்கையும் சம்பந்த மில்லாத பேச்சையும் கவனிக்கிற போதே விருந்துச் சாப்பாடு என்று தெரிகிற தல்லவா?

ஆம். இன்றைய தினம் கல்யாணிக்கும் சந்தனத்துக்கும் கல்யாணம்.

கல்யாணி, பாப்பாரப்பட்டி பிச்சைத் தேவன் மகள். சென்ற பத்து வருஷங்களுக்கு முன் அதோ அந்த ஆல மரத்தில் இலைகளைப் பறித்து மடியில் கட்டிக் கொண்டு அவள் பாடுவதைக் கேட்டிருக்கிறேன். ஆஹா! குயில் வசந்த காலத்தில் மட்டும் தான் பாடும். கல்யாணியோ எல்லாக் காலத்திலும் பாடுவாள். குயிலின் இனிமையும், மயிலின் அழகும், புஷ்பத்தின் மிருதுவும், தென்றலின் குதூகலமும் சேர்ந்தவள் கல்யாணி. அப்பொழுது பிச்சைத் தேவன் உயிருடன் இருந்தான். தகப்பனுக்கு மகள்மேல் உயிர். ஒரு நிமிஷம் அவளைக் காணுவிட்டால் உலகமே சூனிய மடைந்தது போல் அவனுக்குத் தோன்றும். எப்பொழுதும் தன் மகள் அழகு, அவள் பாட்டு, அவள் பேச்சு, அவள் கல்யாணம், அவளுக்குப் பிறக்கப் போகும் குழந்தைகள் இவைகளைப் பற்றியே சிந்தனை

செய்வான். மல்லிகை தன் மகளுக்காகத் தான் புஷ்பிக்கிறது என்பான். வானத்தில் சந்திரனும், பூமியில் சமுத்திரமும் கூட தன் மகள் சந்தோஷத்திற்காகத் தான் ஏற்பட்டவை என்று எண்ணுவான். அவ்வளவு பிரியம் மகளிடத்தில். பிரியத்திற்கு விதி பயப்படுகிறதா? விதியின் விளையாட்டுக்கு வரம்பு தான் உண்டா? அது தன் வேலையைச் செய்ய ஆரம்பித்தது. முதலில் கல்யாணியிடமிருந்து அவள் தந்தையைப் பிரித்தது. இரண்டாவது வயது ஒன்றைத் தவிர மற்ற ரூபம் லாவண்யம் முதலான அழகுகளையும் கொள்ளை கொண்டு போய்விட்டது. மூன்றாவதாக அவளை சித்தப்பன் மருதமுத்துவின் காலில் அடைக்கலம் புகும்படியும் செய்தது. ஆனால், விதியின் கூற்றைத் தெரிந்து கொள்ளாதவர்கள் மாரியம்மனின் விளையாட்டு என்று கூறுகிறார்கள். இந்த விளையாட்டு வந்த விதம்தான் என்ன?

பிச்சைத் தேவனுக்கு ஒரு மருமகன் இருந்தான். காத்தமுத்து என்று பெயர். திருச்சினாப்பள்ளியில் ரயில் வேலை செய்து கொண்டிருந்தான். திடீரென்று வைசூரி கண்டது. அங்கிருந்தால் ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோய் விடுவார்களோ என்று பயந்து, துணியைப் போத்திக் கொண்டு மாமரப் பட்டிக்கு வந்து விட்டான். அவன் வந்த சமயத்தில் பிச்சை வீட்டில் இல்லை. வயலுக்குப் போயிருந்தான். காத்தமுத்து கல்யாணியிடம் காதோடு விஷயத்தைச் சொல்லி மாமனைக் கூட்டி வர அனுப்பினான். கல்யாணி வயலுக்கு ஓடினாள். தந்தையிடம் "அப்பேன், மச்சான் வந்திருக்கு, அம்மை வார்த்திருக்குதாம்; உன்னைக் கூப்பிடுது" என்றாள். ஆனால் வயலில் அவன் மட்டும் இருந்தானா? கூட எவ்வளவோ வியவசாயிகள் வரப்பு வெட்டிக் கொண்டிருந்தார்கள். இதைக் கேட்டதுமே, செல்லா? என்றான் ஒருவன், 'ஆத்தே' என்றான் மற்றொருவன். பாம்பை மிதித்தது போல் பயந்து ஓடினார்கள், பிச்சைத் தேவனையும் கல்யாணியையும் பார்ப்பதற்குக் கூடப் பயந்தார்கள்.

தகப்பனும் மகளும் வீட்டுக்கு வந்தார்கள். காத்தமுத்துவைக் கவனித்து படுக்க வைத்தார்கள். வாசலில் வேப்பிலையைச் சொருகினார்கள். ஆகா அன்றைய

தினம் அந்த ஊரே பேய் பிடித்தது போல் நடித்து நின்றது.

அடுத்த நாள் காலே பிச்சைத்தேவன் வீட்டு வாசலில் ஒரு ஆள் வந்து நின்றான். பூசாரி கூப்பிடுவதாக சொன்னன். பிச்சைக்கு ஓய்வில்லே. பூசாரியையே வீட்டுக்கு வரும்படி சொல்லி அனுப்பினன். அடுத்த ஊர் தேவதையாகிய அம்மை கிடக்கும் வீட்டுக்குப் பூசாரி வருவான? மறுபடியும் ஆள் அனுப்பினன். இம்முறை வந்த ஆள் ஊரார் கூட்டம் கூடி இருப்பதாகவும் ஆணை வைத்து அழைப்பதாகவும் கூப்பிட்டான். பிச்சைக்கு உடம்பு நடுங்கியது. கூட்டத்துக்கு முன்னலே கைகட்டி நிற்பதும் நேற்றுப் பிறந்தவர்கள் எல்லாம் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்வதும் அவனுக்கு என்றைக்கும் பிடிப்பதில்லே. தலேயைக் குனிந்து கொண்டே நடந்து வந்தான். கூடத்து வாசல் அரச மரத்தடியில் நீளமாக ஒரு கல் போட்டிருந்தது. பூசாரி முத்தையன் அதன்மேல் உட்கார்ந்திருந்தான். அவனுக்குப் பக்கத்தில் ஊர்ப் பெரிய தனக்காரன் செல்லமுத்துவும் வயிராவியும் கள்ளுக் கடைக் குத்தகை விஷயமாய்ப் பேசிக் கொண்டிருந்தார்கள். இடை இடையில் இவர்கள் பேச்சுக்கு ஒரு தடவை ஹூம் போடுவதும், ஒரு தடவை துப்புவது மாக ஏதோ யோசனேயி லிருந்தான் பூசாரி. இவர்களுக்குப் பின் உட்கார்ந்திருந்த கூட்ட மெல்லாம் இவர்களேயே பார்த்துக் கொண்டிருந்தது. பிச்சைத் தேவன் வந்து சேர்ந்தான், பிடிபட்ட திருடன் போல. பேந்தப் பேந்த விழித்துக் கொண்டு நின்றான். கூட்டம் கப்சிப் என்று இருந்தது. சற்று நேரம் அமைதி. புயலுக்கு பின் ஏற்படும் அமைதி. சாவுக்கு முன் ஏற்படும் நிம்மதி போன்ற மௌனம். பூசாரி ஒரு கனேப்புக் கனேத்தான். "என்ன பிச்சைத் தேவரே நீ செஞ்சது உனக்கே நியாயமாத் தெரியுதா?" என்று ஒரு குண்டை விட்டெறிந்தான். இதைத்தான் பிச்சை எதிர் பார்த்தான். இதற்குப் பதிலும் அவன் கூடவே கொண்டு வந்திருந்தான். "அதை யோசிச்சிண்டு இருந்தா அதுவரையிலே நோக்காடு நிக்குமா? நீங்கதான் கூடி இருக்கிகளே! நியாயம், நியாயம் இல்லேங்கிறதச்சொல்லுங்க! என்று எரிச்சலுடன் பதில் கூறினன் பிச்சைத் தேவன்.

முத்தையா: உன் வீட்டுச் சேதியா மட்டும் இருந்தாச் சரி. ஊர்க் காரியம் கலந்திருக்கிற போது நீ யோசிக்கணு மில்லியா!

பிச்சை: "என் வீடும் சேர்ந்து தானே ஊரு," என்று அமரிக்கையாகக் கேட்டான். திடுக்கிட்டான் பூசாரி. பிச்சைத் தேவன் வாயிலிருந்து வரும் பதில்கள் ஏறுக்கு மாருய் வருவதைப் பார்த்தான், அவன் வார்த்தையைக் கொண்டே அவனை மடக்க எண்ணினன்.

முத்தையா: நீயும் சேர்ந்து தான் அப்பா ஊரு, இல்லேன்னு சொல்லலெ. அம்மை வாத்தவனை வீட்டுக்குள்ள சேர்க்கிறப்போ ஊரைக் கேட்டுக்கிட்டுச் சேத்தியா?

பிச்சை: கேக்கல்லெ.

முத்தையா: ஏன் கேக்கல்லெ? அது தான் குத்தம். சேர்த்த மனுசன் சாதாரண மானவனு?

பிச்சை: சாதியை விட்டுத் தள்ளுபடி யானவனு? ஊருக்கு எதிரியா? திருடனு? கொலேகாரனு? கோயில் பேரைச் சொல்லி கொள்ளை யடிக்கிறவனு? சாமியாடி சனத்தை ஏய்க்கிறவனு? எது குத்தம்? என்ன குத்தத்தக் கண்டிங்க?

மனுசனுக்குச் சீக்கு வாறது குத்தமா? அந்த மனுசன் மாமன் வீட்டைத் தேடிக் கிட்டு வர்றது குத்தமா? மாம னுக்கு இரக்கம் வந்தா குத்தமா? எது ஐயா குத்தம்! நல்லா வாயைத் தொறந்து சொல்லு.

பூசாரி: உன் ஒருத்தனுலே ஊரு அளிஞ்சு போகு மானு அது குத்தமா, இல்லியா?

பிச்சை: ஹா. அப்படிக் கேளு. மூணும் வருசம் ஆறு அடைக்கிற போது அவனையும் புள்ளியிலே சேர்த்துக் கரை பிரிச்சு விட்டு அடைக்கச் சொன்னியே? போன வருசம் அவனுக்கும் தலேக்கட்டு வரி வாங்கினியே. ஊர் கூடி தேர் இளுக்கப் போறப்போ அவனுக்கும் ஊரிலே சேர்த் துப் பேரெழுதினியே. ஆளு வாட்ட சாட்டமா இருக்கி றப்போ ஊரிலே சேர்க்கலாம்; நோவு நொக்காடு வாறப்போ தள்ளுபடி. இது தான் ஊரு நியாயமா? இந்த ஊரை அளிக்கிறதுக்கு என் குத்தமா வேணும்? உங்க நியாயமே போதுமே. என்று உதறிப் பேசினன் பிச்சை. பூசாரி கூட்டத்தைக் கவனித்தான். கூட்டம் முழுதும்

பிச்சைத் தேவனிடம் அனுதாபத்துடன் அவனையே கவனிப்பதைக் கண்டான். தன் மனதுக் குள்ளேயே அவர்களைக் கடிந்து கொண்டான். "அடெ அது ஒட்டுவாரொட்டியால்லியா? அவனை வீட்டுலே சேத்துக்கலாமா?

பிச்சை: காட்டிலே தூக்கி எறியறதா? இதுதானு ஒட்டுவாரொட்டி? உங்க பாட்டன் செத்தான், ஒங்கப்பன் செத்தான், ஒம் பொண்டாட்டி ஒன் வெறி தாங்காமல் கேணியிலே விளுந்து செத்தா. சாவு ஒட்டுவாரொட்டி இல்லியா?

முத்தையா: சாவு சாமி படைச்சது.

பிச்சை: நோவும் அப்படித்தான். அவரு படெச்சது தான்.

முத்தையா: இந்த நோவு அப்படி இல்லெ. இது தெய்வ குத்தம்,

பிச்சை: யாராவது இளந் தலைக்காரன் கிட்டச் சொல்லு.

முத்தையா: உன்னலே ஊரு அளிஞ்சிடும். ஊரெல்லாம் மாரியாத்தா பரவி வீட்டுக்கு வீடு கசப்பு தொங்கும். இனிப்பு போயிடும் என்று ஆத்திரத்தோடு கத்திவிட்டு, ஹா..........என்ருன் பூசாரி. சாமி வந்துவிட்டது. "அடே! வேத்தூருப் பேயை என் எல்லைக்குள்ளே கொண்டாந்துட்டிங்க. இந்த ஊரையே அளிச்சுப்பிடப் போறேன்" என்று கத்தினன் முத்தையா! பிச்சைத் தேவன் சற்று யோசித்தான். முண்டாசைப் பிரித்து இடுப்பிலே கட்டிக்கொண்டான். கீழே கிடந்த மண்ணை எடுத்து தன் நெத்தியில் இட்டுக் கொண்டு பூசாரி காலில் விழுந்தான்.

பிச்சை: தாயே! கோவிச்சுக்காதே. ஊரை அளிச்சுப்பிட்டா உன்னைக் கொண்டாட ஆளு வேண்டாமா? நிசத்துலே நீ சாமியா யிருந்தா உன் புத்தியும் பெருமையும் விளங்கணும்னு ஊரைக் காப்பாத்து. ஊர்ப் பொதுவிலே ஒரு குடிசையைக் கட்டி தனியா வச்சு அந்தப் பயலைக் காப்பாத்து. அவனுக்கும் கல்யாணிக்கும் உன் கோவில் வாசலிலேயே தாலியைக் கட்டி உனக்குக் குதிரை எடுக்கிறேன், என்று வேண்டிக் கொண்டான். பரபரவென்று வீட்டுக்குச் சென்று விட்டான். கூட்டம் கலங்கி நின்றது. ஒருவரை யொருவர் சந்தேகத்துடன் பார்த்துக் கொண்

டார்கள். கூட்டத்தில் ஒருவன், ஏண்டா சாமி வந்தது நிசமா? என்று கேட்டான். "அது நிசமா இருந்தா பிச்சைத் தேவரு வேண்டிக் கிட்டதும் நிசம்தான்! என்று கேட்டவனுக்குப் பதில் சொன்னன் மற்றவன்.

யார் எதைப் பேசிக் கொண்டாலும் என்ன? இந்தப் பேச்சின் பயனாய் ஊரில் பாதி ஜனங்கள் இறந்து விட்டார்கள். அதிலே பிச்சை, அவன் மருமகன் காத்தமுத்து,—சாமியாடிய பூசாரி முத்தையா, எல்லோருமே சேர்ந்தவர்கள் தான். இதில் தப்பிப் பிழைத்த சிலரில், கல்யாணிக்கு அம்மை கண்டு அழகு போய்விட்டது. பூசாரியின் மகன் சந்தனத்துக்கும் அம்மை கண்டதில் கண் இரண்டும் போய் விட்டது. சித்தப்பன் காலில் அடைக்கலம் புகுந்த கல்யாணி குருட்டுச் சந்தனத்துக்கு மனைவியாகும்படி ஆயிற்று.

சந்தனமும் கல்யாணியும் தனிக் குடித்தனம் செய்ய ஆரம்பித்தார்கள். முதலில் சில கஷ்டங்கள் இருந்தாலும் நாளடைவில் ஒத்துப் போய்விட்டது. வாழ்க்கை லேசாக நகர ஆரம்பித்தது. சந்தனத்துக்குப் பட்டாவில் கண்டபடி பூராச் சொத்துகளும் இல்லா விட்டாலும், பங்காளிகள் எடுத்துக் கொண்டது போக மீதம், பத்து மரமும், நாற்பது குழி நஞ்சையும், ஒரு தோட்டமும், மிஞ்சி இருந்தன. ஊர் ஓரத்தில் ஒரு வீடு. வீட்டு வாசலில் ஒரு வேப்ப மரம். அதன் பக்கத்தில் ஒரு மாட்டுக் கொட்டில். எப்பொழுதும் கொட்டிலில் ஒரு பால் மாடு, ஒரு சினை மாடு. கல்யாணி தன் கையில் பால் பாக்கியம் இருப்பதைக் கண்டாள். காலையில் எழுந்ததும் தோட்டம், வீடு, மாட்டுக் கொட்டிலைச் சுத்தம் செய்வாள். குங்குமத்தை எடுத்து நெற்றியில் இட்டுக் கொண்டு சாமியைக் கும்பிடுவாள். இதற்காகவே கோடி வீட்டுக் குப்ப வேளாரிடம் நடையாய் நடந்து தாழ்ந்த கிருஷ்ணன் பொம்மை ஒன்று வாங்கி வந்திருந்தாள். கண்ணப்பா! என் புருசன் பிடியிலிருந்து என்னை நழுவ விடாதே, என்று துதிப்பாள். புருஷனிடம் வருவாள். அவனைத் தட்டி எழுப்புவாள். "கல்யாணி போது விடிஞ்சு போச்சா?" என்று கேட்டுக் கொண்டே எழுந்திருப்பான் சந்தனம். ஆம். அவனுக்குப் பொழுது விடிவதே இல்லை. அஸ்தமனமும் தெரிவதில்லை. இருள் தெரியாது. ஒளி தெரியாது. அதிகாலையில் மனோரம்மியமாக கண்ணுக்கு எட்டிய

தூரம்வரை கம்பளம் விரித்தது போல் படர்ந்து கிடக்கும் கிராமாந்தரப் பசுமை நிலத்தையும், சிற்சில இடங்களில் அது போர்த்தி இருக்கும் வெண்பனிப் போர்வையும், அதில் இடையிடையே இடம் பார்த்துப் பொட்டிட்டது போல, சுட்டி சுட்டியாய் மலர்ந்த விஷ்ணுகிராந்திப் புஷ்பங்களின் நீலத்தையும், நெரிஞ்சி மலரின் கஸ்தூரி மஞ்சளையும், அதில் அணியணியாகத் தவழ்ந்து செல்லும் பவள நிறப் பட்டுப் பூச்சிகளின் பளபளப்பையும், இடையே தேங்கிக் கிடக்கும் கருநீரையும், அதுவே ஓடி விளையாடி பொன்மூலாம் பூசும் இள வெய்யிலையும் அவன் காண முடிவதில்லை. ஆனால் இவைகளைக் காணாததால் இன்பம் குறைந்ததுண்டா? பஞ்ச வர்ணங்களையும் பட்சிக் கூட்டங்களையும் பசும்புல் பரப்பையும் பனி மூடிய பர்வதங்களையும் காணக் கண் ணுள்ள நாம் அதைக் கண்டு அனுபவிப்பதால் அடையும் இன்பத்தைக் காட்டிலும் கண்பார்வை யற்ற சந்தனத் துக்கு கல்யாணியின் ஒரு பேச்சு அதிக இன்பத்தைக் கொடுத்து வந்தது. அதிகாலையில் மச்சான் எழுந்திரு, என்று அவள் பேசுவதைக் கேட்டவுடன் வண்டின் குரல் கேட்டு மலரும் கமலம் போல் அவன் ஹிருதயம் ஆனந்த மடையும். எழுந்திருப்பான் தன் வாழ்க்கைத் துணைவி யையே தன் கைக் கோலாகக் கொண்டு அந்தக் குருடன் சாமிக்கு முன் வருவான். அவள் நிறுத்திய இடத்தில் நின்று கும்பிடுவான். சந்தனம் குருடன் தானே. சாமி பொம்மை. அவன் கண்களுக்குத் தெரியுமா? ஆயினும் காதலின் பால் உதித்த நம்பிக்கையால் ஏற்படும் பக்திப் பெருக்கில் நம் கண்ணுக்கு எட்டாத ஒரு மூர்த்தியை, நம் கற்பனைக்கு எட்டாத ஒரு திவ்விய மங்கள விக்கிர கத்தை, அகக் கண்ணால் கண்டு அடி பணிவான். அவன், காலைக் கடன் கழித்து வருவதற்குள் கஞ்சியும், வெஞ்சின மும் கட்டித் தயிரும் எடுத்து வட்டி கழுவித் தயாராய் வைத்திருப்பாள் கல்யாணி. அவனுக்கு மணை போட்டு உட்கார்த்தி வைத்து திருநீறு அள்ளி நெற்றியில் இடுவாள். அவன் சாமியைக் கும்பிட்டு சாப்பிட ஆரம்பிப்பான். இடையே, "இந்தா மாங்கா, கடிச்சுக்க" என்று எடுத்து ஊட்டுவாள். அவன் தாகத்துக்குத் தண்ணீரும், அவன் விருப்பத்துக்கு அறுசுவையும் ஊட்டி மகிழ்வாள். பிறகு

அவனுக்குப் பகல் நேரம் வரை தாங்குவதற்கு வேண்டிய வெற்றிலையை மடித்து அவன் மடியில் கட்டி திண்ணையில் உட்கார்த்தி விட்டு மாட்டை அடித்துக் கொண்டு வயலுக்குப் போவாள். மாட்டை ஒட்டி விட்டு வாய்க்காலில் ஸ்நானம் செய்து அன்று சமையலுக்கு வேண்டிய கீரை, விறகு, மட்டை இவைகளைப் பொறுக்கிக் கொண்டு நாவல் பழம், களாக்காய், பாலப்பழம் இவைகளில் ஏதாவது ஒன்றை சந்தனத்துக் காகப் பறித்துக் கொண்டு வருவாள். அன் போடு அவனிடம் கொடுப்பாள். அவனோடு பேசி அவன் கண்ணுக்கு விளங்காத வற்றை மனதுக்கு விளங்கும்படி செய்துகொண்டே சோறாக்கும் சோடு தெரியாமல் நொடி யில் சமைத்து அவனுக்கும் இட்டு தானும் உண்பாள். அவனுக்கு ஒரு குறையும் இல்லாமல் சிச்ருஷை செய்வதி லேயே தன் சந்தோஷத்தை அனுபவித்து இன்பமாய் வாழ்ந்தாள் கல்யாணி.

சந்தனம் தான் குருடன் என்பதையே மறந்தான். குறை யற்றவன் போல் நிம்மதியாய் இருந்தான். கல்யாணி யும் அப்படியே. "மச்சான் நீதான் என் கழுத்துக்குச் சந் தனம்'' என்பாள். "நீதான் என் கண்ணுக்குப் பார்வை" என்பான் சந்தனம். கல்யாணியை ஏறிட்டுப் பார்க்கும் ஆண்பிள்ளை கிடையாது. சந்தனமும் ஒரு பெண்பிள்ளை யைத் திரும்பிப் பார்த்தது கிடையாது. எது நடந்தா லும் இருவருக்கும் தான். அன்பொற்றுப் போன பின் அழகுப் பேச்சு வருமா? இரண்டு வருஷம் ஆயிற்று.

ஒரு நாள் இரவு. நல்ல நிலாவில் வாசலில் கட்டிலைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கிறான் சந்தனம். நிலவை ரசிப்பதற்குக் கண் இல்லா விட்டாலும் அதன் சுகத்தை அனுபவிப்பதற்கு பழக்கப் படுத்தி இருந்தாள் கல்யாணி. தரையில் உட்கார்ந்து மெதுவாக அவன் கால் விரல்களில் நெட்டி ஒடித்துக்கொண் டிருந்தாள் கல்யாணி. வேப்பங்காற்று லேசாக அடித்தது. சந்தனம் கேட்கிறான்: "என்ன பேரு வைக்கப்போறே?" கல்யாணி பதில் சொல்லவில்லை. பூமியைப் பார்த்துப் புன்னகை செய்தாள். சந்தனம் மெல்லத் தன் கையை எடுத்து பரந்த வெளியில் துளாவிக் கொண்டே வந்து, அவள் முகத்தைத் தொட்

டான்; கன்னங்களைத் தடவினன். "என்ன குட்டி பேரு?" என்று அன்பொழுகக் கேட்டான்.

"உங்கப்பன் பேருதான்" என்று வெட்கத்துடன் சொன்னாள். சந்தனம் சிரித்தான். "பொம்பளைப் புள்ளையா இருந்தா?" என்றான் அவன். "மாரியம்மா" என்றாள் கல்யாணி.

சந்தனம்: "அந்தப் பேரையா வைக்கப்போறே?"

கல்யாணி: ஆமா. அது தானே உன்னை எனக்குக் குடுத்தது.

சந்தனம்: அதுதானே என் கண்ணைக் கெடுத்தது?

கல். கண் இருந்தா என்னைக் கட்டிக்குவியா மச்சான்? யாரையாவது ஒரு அழகியை இல்லே பார்த்திருப்பே! என்று சிரித்துக் கொண்டே சொல்லி கட்டிலில் ஏறி அவன் பக்கத்தில் உட்கார்ந்து, "இந்த ஊரிலே மாரியாத்தாளை வையாத வங்க கிடையாது. ஆனல் நான் மட்டும் அதைக் கும்பிடாத நேரம் கிடையாது" என்று அவன் தோளைத் தழுவினள்.

சந்: ஏனும்?

கல்: இந்தப் பாரு. உன்னையும் என்னையும் ஒண்ணுக் கட்டி வைக்கணும்னு அது நினைச்சிது. உங்கப்பனும் எங்கப்பனும் ஏறுக்கு மாருக இருந்தாங்க. எப்படிடா கலியாணத்தை முடிக்கலாம்னு பாத்திச்சு. ஒரு விளையாட்டு. எனக்கு அளகு போச்சு. உனக்குக் கண்ணு போச்சு. எனக்கு மாப்பிளை கிடைக்கல்லே. உனக்குப் பொண் கிடைக்கல்லே. இந்த நிலைமை வந்ததும் நீயும் நானும் புருசன் பொஞ்சாதி ஆயிட்டோம். இதைச் செஞ்ச சாமியைக் கும்பிட வேண்டாமா? நீயே சொல்லு, என்று அவன் குருட்டு முகத்தை தன் முகத்துக்கு நேரே திருப்பினள்; சந்தனம் சந்தோஷத்தில் ஆழ்ந்தான். கல்யாணியின் காதலை வியந்தான். அப்படியே கட்டித் தழுவிக்கொண்டான். "குழந்தை பொறக்கட்டும் எல்லோரும் சேர்ந்து கும்பிடுவோம்" என்று தழதழத்த குரலில் கூறினன்.

பூசாரி முத்தையா வந்து பிறந்தான். தகப்பன் மடியிலே வளர்ந்தான், தவழ்ந்தான், நடந்தான். தன் தாலிச் சரட்டிலிருந்த தங்கக் குண்டு இரண்டையும் கழட்டி விற்று வெள்ளி வாங்கி செல்ல மகனுக்கு இடுப்புக்கு ஒரு அரு

னும் வேப்பங்காய் மணியும் செய்து போட்டாள் கல்யாணி. கறுத்த மேனியும் சுருட்டை மயிரும் கிருஷ்ணன் பொம்மை போல் இருப்பான் பையன். குறுகுறுத்த பயல். எட்டு மாதத்தில் நடக்க ஆரம்பித்து விட்டான். வீடு முழுவதும் ஓடி விளையாடுவான். தகப்பனிடம் ஒப்புவித்து விட்டு கல்யாணி வெளியே செல்லுவாள். குழந்தை புரியாத மழலை மொழியில் ஏதோ உளறுவான். சந்தனம் பிரமாத விஷயம்போல் அக்கரையாகக் கேட்டுக் கொண்டே, ஹூம் போட்டுக் கொண்டிருப்பான். குறிப்பிட்ட விஷயத்தைச் சொல்ல வார்த்தைகள் வேண்டும். அன்பு ஒரு குறிப்பிட்ட அளவுக்குள் அடங்குமா? வார்த்தையால் தான் சொல்ல முடியுமா? தகப்பனுருக்குப் பார்வை தெரியாது. மகனுக்கு பேசத் தெரியாது. ஆனல் அல்லும் பகலும் அறுபது நாழிகையும் தந்தையும் மகனும் ஏதோ பேசிக்கொண்டிருக்கிறார்கள். இது என்ன? அன்பா? இன்பமா? எதுவோ ஒன்று. நம்மால் சொல்ல முடியாத ஒன்று. முத்துப்பயல் மெள்ள தகப்பன் பிடியிலிருந்து நழுவுவான். தவழ்ந்து ஓடுவான். சந்தனம் பிடிப்பதற்காக சத்தம் வரும் இடமெல்லாம் தட்டுத் தடுமாறிச் செல்லுவான். குழந்தையோ மறுகிக் கொண்டே தகப்பன் கைக்கு அகப்படாமல் ஓடுவான். தன்னல் முடியாத சந்தனம் கல்யாணியைத் திட்ட ஆரம்பிப்பான். தடால் என்று சத்தம் கேட்கும். ஹா என்று அலறுவான் சந்தனம். தண்ணீர்ப் பானையை உருட்டி விட்டுப் பக்கத்தில் நின்று அழுவான் குழந்தை. அதே சமயம் கல்யாணி ஓடி வந்து குழந்தையைத் தூக்குவாள். சந்தனமும் அவளும் சேர்ந்து குழந்தையைக் கொஞ்சுவார்கள்.

கொஞ்ச நாளாக சந்தனம் ஏதோ சற்று அசௌக்கியம் போல் காணப் பட்டான். அடிக்கடி பெருமூச்சு விடுவான். இரவில் தூங்குவதே இல்லை. சரியாகப் பேசுவதில்லை. சிரிப்பு மறந்தே போய் விட்டது. வேளா வேளைக்குச் சாப்பிடுவதில்லை. குளிப்பதில்லை. ஏதோ பிரமை பிடித்தது போல் இருந்து வந்தான். கல்யாணி ஆனமட்டும் கேட்டுப் பார்த்தாள். அழுதாள். வைத்தியரைக் கூட்டி வருவதாகச் சொன்னுள். மறுத்து விட்டான். ஒன்றும் தெரியவில்லை. ஒரு நாள் காலையில் குழந்தை அடுப்படியில்

தவழ்ந்துகொண் டிருந்தான். கல்யாணி நெய் காய்ச்சு வதற்காக அடுப்படியில் உட்கார்ந் திருந்தாள். அடுப்பு எரிந்துகொண் டிருந்தது. சட்டியை அதன்மேல் வைத்து விட்டு, வெண்ணெய்யைத் தண்ணீருடன் கலந்து பிசைந்து விட்டு முறத்தில் தேடினுள். முருங்கை இலை இல்லை—பைய னைத் தூக்கிச் சந்தனத்திடம் கொடுத்தாள்.

கல்: இந்தா. புள்ளையைப் பாத்துக்க. நான் செல்லி வீட்டுத் தோட்டத்திலே போய் ரெண்டு கிள்ளு முருங்கக் கீரை கொண்டு வந்திடுறேன் என்று சொன்னுள்.

சந்: சும்மா வாய் பாத்துக்கிட்டு நிக்காதே. போனம் வந்தம்னு வந்திடு என்று கடுப்பாய் சொன்னுன். கல்யாணி வெளியே சென்றதுதான் தாமதம். குழந்தை அந்த வெண்ணெய்ச் சட்டியையும், கொழுந்து விட்டு எரியும் நெருப்பின் அழகையும் கூர்மையாகக் கவனிக்க ஆரம்பித்தான். சந்தனம் மடியிலிருக்கும் குழந்தையைத் தட்டினுன். பயலே என்று கூப்பிட்டான். பதில் இல்லை. தூக்கக் கலக்கம் என்று நினைத்து மேல் துண்டைப் பக்கத் தில் விரித்து அதில் குழந்தையைப் படுக்க வைத்தான். முதுகில் லேசாய்த் தட்டிக் கொண்டே ஏதோ யோசிக்க லானுன். தட்டிக் கொண்டே இருந்த கை தரையில் விழுந் தது. சற்று தூரம் தள்ளித் தட்டினுன். அப்பொழுதும் கை தரையில் தான் தட்டியது. முத்துப் பயல் மெள்ள தவழ்ந்தும் நடந்தும் ஓடி விட்டான். குருட்டுத் தந்தை யும் கூடவே துரத்தினுன். முத்து—பயலே, அப்பா வில்லே வந்துடு என்று கூவிக் கொண்டே அங்குமிங்கும் தேடினுன். குழந்தை நேரே அடுப்படிக்கு ஓடுவதாக சத்தத்திலிருந்து அறிந்தான். சடபட வென்று சத்தம் கேட்டது. ஐயோ! கல்யாணி என்று அலறினுன் சந்தனம். சத்தம் வந்த திக்கில் தட்டுத் தடுமாறி ஓடினுன். காலில் அடுப்பைத் தட்டி சுட்டுக் கொண்டான். இவன் போட்ட சத்தத்தைக் கேட்டு கல்யாணியும் ஓடி வந்தாள். “ஏன் சத்தம் போடறே” என்று கேட்டுக் கொண்டே நுழைந்தாள். ஐயோ ‘புள்ளே’ நெருப்பு என்று உளறினுன் சந்தனம். கடகடவென்று சிரித்தாள் கல்யாணி. “ஒன்றுமில்லே. பயப்படாதே” என்று சொன்னுள். சட்டியிலிருந்த வெண்ணெய் எல்லாவற்றையும் அள்ளி தலையிலும் உடம்

பிலும் கட்டி கட்டியாய்ப் பூசிக் கொண்டு இரண்டு கையாலும் வெண்ணெய்யை வாரி வாயில் திணித்துக்கொண்டு நிற்கும் முத்துப் பயலைக் கண்டாள். "அடெ நாம்பெத்த முத்தே" என்று ஓடிப்போய் பிள்ளையைத் தூக்கினுள். சந்தனத்திடம் கொண்டு வந்தாள். "இந்தப் பாத்தியா உன் மகனை. அப்படியே கிட்ண சாமியாட்டம் இருக்கிறான்" என்று நீட்டினுள். சந்தனம் குழந்தையைத் தடவினன். "சரி சரி, சீலைத் துணியை எடுத்து உடம்பைத் துடை" என்றான். உடம்பைத் துடைத்தாள். "மப்பு மாந்தம் வந்துடப் போவுது. வெண்ணெய்யைத் திங்காமே கையிவாயெல்லாம் நல்லாத்துடை" என்றான். கையைத் துடைத்தாள். பயல் சிரித்துக் கொண்டே நின்றான். வாயைத் துடைத்தாள். துடைத்தும் கொஞ்சம் வெண்ணெய் ஒட்டிக்கொண் டிருந்தது. தண்ணீரை எடுத்து அலம்பினுள். ஒட்டிய வெண்ணெய் அப்படியே இருந்தது. "அட துடைக்கிறேன் துடைக்கிறேன் போகமாட்டம்குதே" என்று கூறியபடி வாயில் தன் விரலை விட்டுத் தடவினுள். ஆனந்தம் மிகுந்தது. "மச்சான் பயலுக்குப் பல்லு முளைக்குது" என்று கூவினுள். ஆனந்தத்தில் கூத்தாடினுள். குழந்தையை ஆவலுடன் தூக்கிக்கொண்டு புருஷனிடம் ஓடி வந்தாள். "இதோ பாருவே, வெள்ளிக் குருத்துக் கணக்கா இருக்கு பாருவே. கண்ணைப் பறிக்குது பாரு" என்று குழந்தையை நீட்டினுள். சந்தனம் உடம்பு குலுங்கியது! வியர்த்தது. முகம் கோணியது. ஏதோ ஒரு வலி வந்தவன் போல் திணறினன். வீடு இடிந்து விழுவது போல் ஹோ என்று அலறினன். பார்வைக்கு உதவாத அவன் கண்கள் கண்ணீர் வடிப்பதில் மட்டும் நிகரற்று விளங்கின. ஊற்றுக் கண் திறந்து விட்டது போல் பலபல என்று கண்ணீரை உதிர்த்தான். விசும்பி விசும்பி அழுதான், விஷயம் தெரியாமலே. கல்யாணியும் அழுதாள். இருவரையும் கண்ட முத்தையாவும் அழுதான். "பாரு பாருன்னு எங்கிட்டச் சொல்றியே. இந்தப் பாவிக்கு அந்தப் பாக்கியம் இருக்குதா? நீயே பாரு. நீ தான் பார்க்கணும். நான் சாகிறேன். குளங் குட்டையிலே விழுந்து சாகிறேன்" என்று தலையில் அடித்துக் கொண்டான் சந்தனம்.

கல்யாணி அருகில் சென்றாள். "இந்தா அழுகாதே அழுகாதே" என்று தடவிக் கொடுத்தாள். "பாக்கத் தான் கூடாதுன்னு பண்ணிப்புட்டான். அழுகவுமா கூடாது" என்றான் சந்தனம்.

அடுத்த நாள் கல்யாணி கழுத்தில் தங்கத் தாலி தொங்கிய கயிற்றில் மஞ்சள் துணுக்குக் கட்டி இருந்தது. அவன் கட்டிய தாலியை விற்று அவனுக்குக் கண் வைத்தியம் பார்க்கத் துணிந்தாள் கல்யாணி. கண்ட தைலம் எல்லாம் வாங்கித் தலையில் தேய்த்தாள். கண் பொங்கியதைத் தவிர பலன் ஒன்றும் இல்லை. கடைசியில் அவனையும் கூட்டிக் கொண்டு திருப்பத்தூர் போய்ச் சேர்ந்தாள். சந்தனம் எவ்வளவோ மறுத்தான். பணச் சிலவைத் தவிர பயன் ஒன்றும் ஏற்படாது என்று வாதாடினான். கேட்கவில்லை. திருப்பத்தூர் ஆஸ்பத்திரியில் சேர்த்து சிகிச்சை செய்யும்படி செய்தாள். அந்த டாக்டர் தங்கமானவர். குழந்தையை குருட்டுத் தகப்பன் காணும் சந்தோஷம் எப்படி இருக்கும் என்பதை நன்றாய் உணர்ந்தவர். சர்க்கார் உத்தியோகஸ்தர் என்ற தோரணையை மட்டும் செலுத்தாமல் ஜனங்களுக்கு உபகாரம் செய்யும் தொழிலாளி என்பதையும் கருத்தில் வைத்துக் கொண்டு சிச்ருஷை செய்தார். மாரியாத்தாள் கிருபையால் கண்ணில் மணிக்குமேல் தடிப்புப் படர்ந்திருந்ததே தவிர, மணி கெடாமல் இருந்தது. கல்யாணியின் அன்பும், டாக்டரின் சிச்ருஷையும் சந்தனத்துக்கு உதவி செய்தன. கொஞ்சம் கொஞ்சமாக கண் பார்வை பெற ஆரம்பித்தது.

தினந்தோறும் காலையில் டாக்டர் வருவார். அவர் வந்து அறையில் நுழைந்தவுடன் கல்யாணி சென்று விடுவாள். சந்தனத்தின் கண் கட்டு அவிழ்க்கப்படும்; கை விரலைக் காட்டுவார்கள். காகிதத்தில் இருக்கும் படத்தைக் காட்டுவார்கள். சந்தனமும் அவைகளைப் பார்த்துச் சொல்லுவான். ஆனால், எதைப் பார்த்து என்ன பிரயோஜனம்? அவன் பார்க்கத் துடித்துக்கொண்டிருக்கும் அந்த உருவங்கள் இரண்டு மட்டும் அவன் முன் வருவதே இல்லை. இப்படி கண்டதை எல்லாம் பார்த்துங் கூட சந்தனத்திற்குக் கண் கிடைத்ததாகத் தோன்றவே இல்லை; ஒரு நாள் கல்யாணியிடம் "என் கண் கட்டு அவிழ்க்கும்

போது நீ ஏன் என் எதிரிலே வர்ரதில்லே? என்று கேட்டே விட்டான். இதற்குக் கல்யாணி சொன்ன பதில் இதுதான்:

கல்: மச்சான் நம்ம வீட்டிலே சாமி இருக்கு, உனக்குக் கண் கிடைச்சதும் நீ அதைத்தான் பாக்கணும், என்ருள்.

சந்: உன்னையக் கூடப் பாக்கப்புடாதா?

கல்: மச்சான் என் அழகை நீ பாத்துப்பிட்டா ஏண்டா கண்ணு திரும்பி வந்திச்சுன்னு வருத்தப்படுவே.

சந்: எங் கண்ணு எனக்கே துரோகம் பண்ணுது குட்டி! என்று சொல்லிச் சிரித்தான் சந்தனம். இதற்குப் பதில் சொல்ல கல்யாணி அங்கில்லே. தன் அழகை நினைத்து அழுதபடி வெளியே சென்று விட்டாள்.

குறிப்பிட்ட தேதியன்று சந்தனம் வீட்டிற்கு அழைத்து வரப்பட்டான். அன்று காலை முதலே கல்யாணிக்கு வேலை சரியாக இருந்தது. வீடு முழுவதும் மெழுகினுள். இழை இழையாகக் கோலமிட்டாள். பவழ மல்லிகை மரத்தை உலுக்கி பக்கா ஒரு படி புஷ்பம் பொறுக்கினுள். மகிழம் பூவால் மாலை கோர்த்து வைத்தாள். அதிலும் திருப்தி யடையாமல் பூவாண்டியின் காலில் விழுந்து ஒரு பச்சை மாலையும் வாங்கி வந்திருந்தாள். தேங்காய் பழம் புஷ்பம் முதலியவைகளை எல்லாம் கிருஷ்ண விக்கிரகத்துக்கு முன் கொண்டு போய் அழகழகாய் வைத்துவிட்டு பட்டுப் பட்டாக மஞ்சளைப் பூசிக் குளித்தாள். நெற்றியில் குங்குமம் இட்டு கொண்டையை அள்ளிச் சொருகியபடி வந்து நெய் விளக்கு ஏற்றினுள். ஆவலோடு மச்சான் என்ருள். சந்தனம் கண்ணில் கட்டுடன் வாசல் படியருகில் வந்தான். உள்ளே சாமிக்கு எதுக்காலெ போய் நின்னுக்க. கட்டை அவிழ்த்திட்டு சாமியைக் கும்பிடு. எதுத்தாப்பிலே பூமாலை எல்லாம் வச்சிருக்கேன். அம்புட்டையும் அள்ளி உங் கையாலே சாமிக்குப் போட்டுட்டு அலங்காரம் பண்ணிப் புட்டு சாமி ஆண்டவனே கண்ணைக் கொடுத்த கடவுளேன்னு சொல்லிக் கும்பிடு. அப்புறம் என்னைக் கூப்பிடு நான் வரேன். என்று சொன்னுள்-சந்தனம் உள்ளே சென்ருன். கல்யாணியின் அன்பை நினைக்க நினைக்க அவன் உடம்பு பூரித்தது. சாமிக்கு எதிரில் நின்ருன். இரண்டு கைகளும் நடுங்குகின்றன. கட்டு லேசில் அவிழ்க்க முடியவில்லை.

மனம் அலை அலையாக எண்ணங்களை அள்ளி வீசுகிறது. மெள்ள கண் கட்டை நீக்கினன். ஆனந்தக் கண்ணீர் சொரியும் இரு விழிகளையும் விழித்துப் பார்த்தான்............ ஆஹா! அவன் கண்ட காட்சியை எப்படி வர்ணிப்பது........ மேலே பூ மாலை, கையிலே வாழைப் பழம். வாய் மெல்லுகிறது. சுருட்டை சுருட்டையாக இருண்டு சுருண்ட சுழல்களிலே, பவழ மல்லிகைப் புஷ்பங்கள், நக்ஷத்திரங்கள் போல் சிதறிக் கிடக்கின்றன. கள்ளங் கபடமற்ற வதனத்தில் இள நகை தவழுகிறது. அரும்பு வரிசை போன்ற பல்களைத் திறந்துகொண்டு ஆனந்தமாகச் சிரித்தான் முத்துப் பயல். அப்பன் பிரமித்தான். இரு கைகளையும் நீட்டினன். "கண்ணைக் கொடுத்த கடவுளே" என்று ஆவலோடு தன் மகனைத் தழுவிக் கொண்டான். ஏ குட்டி, இந்தா பாரு உன் மகனை. நிசத்துலே கிட்ணசாமி ஆயிட்டான் என்று கூவினன். ஓடி வந்தாள் கல்யாணி. தன் மகனைப் பார்த்தாள். "அட பாவி சாமிக்கு வச்சிருந்த பூவை" என்று சொல்லி பாதி வார்த்தை யிலேயே நிறுத்திப் பையனைக் கண் கொட்டாமல் பார்த்தாள். அந்தக் கிருஷ்ண விக்கிரகம் இதைக் கவனிக்க வில்லை. இன்னெரு பூமாலையை எடுத்துத் தலையில் சுத்திக் கொண்டு எதிரில் இருக்கும் கிருஷ்ண விக்கிரகத்தை விழுந்து கும்பிட்டான் அதுவும் தன் தாய் கும்பிடுவது போல மண்டியிட்டுக் கும்பிட்டான் முத்துப் பயல். தாயும் தகப்பனும் பிரமை நீங்கிச் சிரித்தார்கள். அவர்களும் ஓடி வந்து விக்கிரகத்தின் முன் வணங்கினர்கள். தாயும் தகப்பனும் தலை குனிந்து வணங்கிக்கொண் டிருக்கும் அந்தச் சமயத்திலே குப்ப வேளார் கொடுத்த கிருஷ்ண விக்கிரகமும் எதிரில் இருக்கும் நடமாடும் கண்ணனும் ஒருவரை ஒருவர் பார்த்த பார்வையையும் இருவர் முகத்திலும் மலர்ந்த புன்சிரிப்பையும் கல்யாணியும் சந்தனமும் கண்ணல் பார்க்கவில்லை என்ருலும் அதன் பிறகு நடைபெற்ற தங்கள் குடும்ப வாழ்வில் அந்த அருள் கனிந்த பார்வையால் பெருகிய ஆனந்தத்தை அனுபவித்தார்கள்.